# மகுட வைரம்



## 1

## பொன்னாரம்

'**கா**ரார்மணி நிறக் கண்ணனூர் விண்ணகரம் நீலமணி வண்ணனான கண்ணன் எழுந்தருளும் திருவிண்ணகரத்து எம்பெருமானைக் காணுமளவும் சுற்றித் திரிவேன்' என்று சிறிய திருமடலில் திருமங்கை மன்னன் அருளியது, தனக்கும் சேர்த்துத்தான் என்று எண்ணிக்கொண்டதாலோ என்னவோ, அரிசிலாற்றின் வெள்ளம் அந்த விண்ணகருக்கு மாலையாக வளைந்து நெளிந்து, வெகு ஆனந்தத்துடன் சுற்றிப் பிரவாகமாக விரைந்து கொண்டிருந்தது. மாலைக் கதிரவன் அந்த நீர்ப்பரப்பை அசல் பொன்னாகவே அடித் திருந்ததால், தங்கத் தகடுகளாகப் பிரதிபலித்துக் கொண் டிருந்தது, அரிசிலாற்று வெள்ளம். உயர்ந்த பொருட்கள் எப்போதும் சற்று மறைவிலிருக்க வேண்டிய அவசியத்தை

உளர்ந்த கரையோரத்து மரங்கள், இருபுறங்களிலும் கவிந்து பிரவாகத்தை மறைக்க முயன்றன.

அந்திக் காற்றில் நிரம்பிக்கிடந்த நெல்லின் மணத்தையும், மரக்கூட்டங்களை நோக்கி ஜிவ்வென்று இறங்கிய பட்சிக் கூட்டங்களின் பெரும் இரைச்சல் செவிகளுக்கு அளித்த இன்பத்தையும் ரசித்தபடியே நடந்து கொண்டிருந்த அந்த வாலிபன், பார்வையை உயர்த்தி கிழக்கிலிருந்து வந்து கொண்டிருந்த மேகக் கூட்டங்களைக் கவனித்தான். அவை விரைவில் பெருமழையைக் கொண்டு வந்துவிடுமென்பதைப் புரிந்து கொண்டதால், தான் குடந்தைக்குச் சென்று பணியை முடித்துக்கொண்டு ஊர் திரும்பிவிட வேண்டுமே என்ற எண்ணத்துடன் ஆற்றை ஒட்டியிருந்த பாதையில் விரைந்து நடக்கவும் ஆரம்பித்தான். ஏர்முனையைப் பிடித்துப் பிடித்துக் காய்த்துக் கிடந்த வலிய கரங்களும், அவனது திடமான உடற்கட்டும் ஓயாத உழைப்பைக் காட்டின. உதடுகளின் ஓரத்தில் சரிந்து இறங்கிய மெல்லிய மீசையும், கறுத்துச் சுருண்டு பக்கங்களில் இறங்கிய குழல்களும், அவனை இருபத்து நான்கு பிராயங்களுக்கு மேல் மதிக்க இயலாத தோற்றத்தை அளித்திருந்தன. அதிகக் கூர்மையின்றி நேர்ப் பார்வையாகப் பார்த்த விழிகள் அவன் கல்வியிலோ, கலைகளிலோ அறவே பயிற்சியேதும் பெறவில்லையென்பதை உணர்த்தினாலும், அகன்ற நெற்றியும், பெரும் விழிகளும் ஒரு தனிக்களையை அளித்துக் கொண்டிருந்தன.

வேகமாக நெருங்கிக் கொண்டிருந்த மேகங்கள், தூரத்தே சரம் சரமாக மழைத் துளிகளை இறக்கத் தொடங்கி விட்டதையும், காற்றில் மண்ணின் மணம் பரவியதையும் கவனித்தவன், இன்னும் அரை நாழிகைக்குள் மழை நெருங்கிவிடும் என்பதைப் புரிந்துகொண்டதால், சற்றுத்



தொலைவில் தெரிந்த சாலையோரத்து மண்டபத்தை அடைந்துவிடும் உத்தேசத்துடன் விரைவாக நடந்தான். மண்டபத்தை அவன் நெருங்கவும், சடசடவென்று மழைத் துளிகள் வேகத்துடன் இறங்கவும் சரியாக இருந்தது. மண்டபத்தினுள் நுழைந்து, தலையில் சுற்றிக் கிடந்த துணியை எடுத்து சாரலுக்குப் பாதுகாப்பாகப் போர்த்திக் கொண்டவன், பொழியத் தொடங்கிய மழையை ரசிக்கத் தொடங்கினான். அவன் ரசனை பாதியில் நின்றது.

சற்றுத் தொலைவில் பாதையில் புரவியொன்று வருவது இலேசாகப் புலப்பட்டது அவனுக்கு. உற்றுக் கவனித்தவனுக்கு, அந்தப் புரவி மீது ஒரு மனிதன் படுத்த நிலையில் சரிந்து கிடப்பதும் புலப்படவே, போர்த்தியிருந்த துணியை விட்டெறிந்து விட்டு, மழையில் பாய்ந்து புரவியை நோக்கி ஓடினான். அருகில் நெருங்கியவன், புரவியின் கயிறுகளைப் பிடித்து, அதை மண்டபத்தின் மறுபுறத்தில் கொண்டு வந்து நிறுத்தினான். முகத்தில் வழிந்த நீரைத் துடைத்துக் கொண்டவன், புரவி மீது கிடந்த மனிதனை நிமிர்த்தவும், புரட்டி அவன் யாரென்பதை அறியவும் முயன்றான். அந்த மனிதனை இலேசாகப் புரட்டியதும், அவனது விலாப்புறத்தில் மழை நீரோடு சேர்ந்து குருதியும் வழிந்துகொண்டிருப்பதைக் கண்ட வாலிபன் திடுக்கிட்டான். அதிகமாகக் குருதி வெளியேறியதால், அந்த மனிதன் சுயநினைவின்றிக் கிடக்கிறான் என்பதையும், அவன் உடைகளும், மறுபுறத்தில் இடையிலிருந்து நீண்ட வாளின் பிடியிலிருந்த இலச்சினையும் அந்த மனிதன் சோழநாட்டு வீரன் என்பதையும் புரிய வைத்ததால், பதற்றத்துடன் அந்த வீரனின் முகத்தைத் துடைத்ததோடு, மெல்லத் தட்டி அவனை சுயநினைவுக்குக் கொண்டு வரவும் முயன்றான் அந்த வாலிபன். வாலிபனின் சிசுருஷையில் பெரும் பிரயாசையுடன் கண்களை விழித்த அந்த வீரனின் விழிகள்,

மெல்ல உயர்ந்து வாலிபனை ஏறெடுத்து நோக்கின. அடுத்து அவன் உதடுகளும் பிரிந்து ஏதோ முணுமுணுத்தன.

அந்த வீரனின் முகத்துக்கருகில் குனிந்து உற்றுக் கேட்ட வாலிபனின் செவிகளில், "நீ சோழ நாட்டவன் தானே?" என்ற சொற்கள் மெல்ல ஒலித்தன.

"ஆம் ஐயா, நான் சோழ நாட்டவன்தான். வாருங்கள், மருத்துவரிடம் அழைத்துச் செல்கிறேன்" என்று வேகத்துடன் கூறிய வாலிபனை அந்த வீரனின் கரம் மெல்ல உயர்ந்து தடுத்தது. ஏதோ ரகசியம் பேசுவது போல் அவன் சொற்களும் பலவீனமாக ஒலித்தன.

"வேண்டாம் வாலிபனே, பயனில்லை. இன்னும் சற்று நேரத்தில் என் உயிர் பிரிந்துவிடும். உரிய இடத்தில் இந்தப் புரவி என்னைக் கொண்டு சேர்த்துவிடும்... எனக்கொரு உதவி செய்வாயா...?"

"சொல்லுங்கள் ஐயா, என்ன செய்ய வேண்டும்?" வாலிபனின் முகத்திலும் சொற்களிலும், பதற்றமும் துடிப்பும் ஒலித்தன.

வீரனின் கரம் தாழ்ந்து கச்சையைத் தடவி, துணி முடிப் பொன்றை எடுத்தது. "வாலிபனே, இதை எப்படியாகிலும் சோழர் படைத்தலைவரிடம் சேர்ப்பித்து விடு. வேறு... எவரிடமும்... இதை..." மேற்கொண்டு அந்த வீரனின் உதடுகளிலிருந்து வார்த்தைகள் வெளிவர மறுத்து, சற்றுத் துடித்து, பின் சட்டென்று அடங்கின. அந்த முடிப்பை வாலிபனிடம் ஒப்படைக்கவே காத்திருந்தது போல், அவன் தலையும் துவண்டு சரிந்தது. பாதி திறந்திருந்த விழிகள், சோழநாட்டு ஈர மண்ணை வெறித்தன. துணி முடிப்பும் நழுவிக் கீழே விழுந்தது.

ஈர மண்ணில் விழுந்ததால் முடிப்பின் கயிறுகள் பிரிந்து, சோழநாட்டு மண்ணுடன் சொந்தம் கொண்டாடிய



அந்தப் பொருளையும், அது மழை நீரில் ஜொலித்த விதத்தையும், அதை வாலிபனிடம் அளிக்க முற்பட்டு உயிர் துறந்துவிட்ட சோழ வீரனையும் மாறிமாறிப் பார்த்த வாலிபன், திக்பிரமை பிடித்து நின்றான்.

**ம**னித வாழ்வை மாற்றியமைக்கக் கூடிய சக்தி, விதி என்ற சொல்லுக்கும், அதன் பொருளுக்கும் இருப்பது உண்மையானால், அரிசிலாற்றின் கரையில், சாலையோரத்து அந்த மண்டபத்தின் அருகில், பொழிந்து தள்ளிக் கொண் டிருந்த மழையில், ஈர மண்ணில் புரண்டு பளபளவென ஜொலித்த அந்தப் பொருள், நிச்சயம் விதியாகத்தான் இருக்க வேண்டும்.

குனிந்து அதை எடுத்த வாலிபன், அது சுத்தமான பொன்னால் செய்யப்பட்ட ஆரமென்பதையும், அதில் பதிக்கப்பட்டு சிவந்த ஒளியை வீசிய பெரும் மாணிக்கக் கல்லையும் கண்டு, பிரமித்து நீண்ட நேரம் அப்படியே நின்றான்.

மழை சற்று மட்டுப்படத் தொடங்கியிருந்தது. அந்த வீரனின் சடலத்தைத் தாங்கிய புரவியும் நகரத் தொடங்கியது.

சற்று நேரம் புரவி சென்ற திசையைப் பார்த்துக் கொண்டிருந்த வாலிபன் ஆரத்தைத் தன்னிடமிருந்த துணிப் பைக்குள் திணித்துக் கொண்டான். விரைவில் குடந்தை நகருக்குச் சென்று தன் பணியை முடித்துக்கொண்டு திரும்பிய பின்பு, அந்த வீரனுக்கு அளித்த வாக்கை நிறைவேற்றிக் கொள்ளலாம் எனத் தீர்மானித்த வாலிபன், குடந்தையை நோக்கி நீண்ட பாதையில் விரைவாக நடக்கத் தொடங்கினான்.

**அ**ரை ஜாம நேரத்திற்குப் பின் குடந்தையின் தெற்கு வாயிலை அடைந்த வாலிபன் மீண்டும் திகைத்தான். நகரின்

தெற்கு வாயில் என்றைக்குமில்லாதபடி திறந்தே கிடந்தது. ஓரிரு பந்தங்களே எரிந்து கொண்டிருந்த வாயிலின் அருகில் காவலரோ, சாதாரண மக்களோ காணப்படவில்லை. இல்லங்களின் கதவுகளும் தாளிட்டுக் கிடந்தன. வாலிபனின் சித்தத்தில் மெல்லக் கலவரம் பரவத் தொடங்கியது. தூரத்தே தெரிந்த ஆலயத்தின் தீபத்தைக் கவனித்தவன், விறுவிறு வென்று, அந்தத் திக்கை நோக்கி நடக்க ஆரம்பித்தான்.

ஆலயமிருந்த வீதியில் நுழைந்து, ஊர்த் தலைவரின் இல்லத்தை அடைந்தவன், அவரது இல்லமும் தாளிட்டுக் கிடப்பதையும், தன் குரலுக்கும், தட்டலுக்கும் ஊர்த் தலைவரின் இல்லம் மட்டுமின்றி, அக்கம் பக்கத்து இல்லங் களின் கதவுகளும் திறக்க மறுத்ததையும் கண்டு, அன்றைய பொழுது, தான் திகைப்பதற்கென்று விடிந்தது என்றே எண்ணினான்.

மறுகோடியில் வெகு கம்பீரமாக நின்ற ஆலயத்தின் வாயிலில், இரண்டொருவர் நிற்பதைக் கண்டவன், ஆலயத்தை நோக்கி நடந்தான். ஆனால் அவன் ஆலயத்தை நெருங்கு முன்பாக, அங்கு தென்பட்ட ஓரிருவரும் மறைந்து விட்டிருந்தனர். ஆலயத்தின் உள்ளிருந்து பட்டர் வேகமாக வந்து கொண்டிருப்பதைக் கண்ட வாலிபன், அவரையேனும் தடுத்து நிறுத்தி விவரமறிந்து கொள்ளும் உத்தேசத்துடன், அவர் வரும் பாதையின் குறுக்கே நின்றான்.

"செங்கழுநீர் திருக்குடந்தை ஏரார் கோலம் திகழக் கிடந்த ஆராவமுதனின்" நித்யப்படி சேவையை, எந்தப் பிரளயமே வந்தாலும் கைவிடாத ஆலயத்துப் பட்டர், சந்தியாகாலப் பூஜைகளை முடித்துவிட்டுப் பிரசாதக் கூடையுடன் திரும்பிக் கொண்டிருந்தார்.

"அப்பனே, யார் நீ? என்ன வேண்டும்?" என்ற அவர் குரலில் பரிவு ஒலித்தது.



"சுவாமி, நான் வண்டாழஞ்சேரியைச் சேர்ந்தவன். பெயர் பராந்தகன். ஊர்த் தலைவரைக் காண வந்தேன். அவரது இல்லம் தாளிட்டுக் கிடக்கிறது. விவரம் கூறவும் எவருமில்லை."

"அப்பனே பராந்தகா, ஊர்த் தலைவர் தற்போது காவிரியின் அக்கரையிலிருக்கிறார். அவரது நிலையும், இந்தக் குடந்தை நகரின் நிலையும் தற்போது சரியில்லை. நீ தாமதிக்காமல் உடனே ஊர் திரும்பி விடு. பிறகு வந்து அவரைக் காணலாம்."— வருத்தம் தொனித்த குரலில் கூறிய ஆலயத்துப் பட்டர், மேற்கொண்டு நடக்க ஆரம்பித்தார்.

வாலிபன் நகர்வதாகத் தெரியவில்லை.

"சுவாமி, பயிர்த் தொழிலுக்காக என் தந்தை கடனாகப் பெற்ற பொருளை, இன்று திருப்பியளிப்பதாக வாக்களித் திருக்கிறார். அளித்த வாக்கைக் காக்க வேண்டும்."

பட்டர் முகத்தில் கவலை படர்ந்தது. "பராந்தகா, காவிரியின் அக்கரையில் ராஷ்டிரகூட வீரர்களும், மகாராணியும் வந்து இறங்கியிருக்கிறார்கள். பல்லவச் சக்கரவர்த்தி, மகாராணியின் சகோதரருக்களித்த பொன்னாரமொன்றை, நம் சோழ வீரனொருவன் களவாடி விட்டதாகவும், அந்த வீரனைத் தேடி அவர்கள் வந்திருப்ப தாகவும் கூறி நகர் முழுவதும் தேடிக் கொண்டிருக்கிறார்கள். ஊர்த் தலைவரையும் விசாரிக்க அழைத்துச் சென்றிருக் கிறார்கள்."

பராந்தகன் முகத்தில் குழப்பம் படர்ந்தது. ராஷ்டிர கூடர்கள் தேடும் பொன்னாரமெதுவென்பது அவனுக்குப் புரிந்தது.

பட்டர் தொடர்ந்தார். "பராந்தகா, ராஷ்டிரகூடர்களின் கண்களில் நீயும் உன் கையிலிருக்கும் பொற்காசுகளும் பட்டுவிட்டால் அபாயம் நேரும். புரிகிறதா? உடனே நீ

ஊருக்குத் திரும்பி விடு" என்றவர், அவன் தோளில் பரிவுடன் தட்டிவிட்டுத் தமது இல்லம் நோக்கி நடந்தார்.

பட்டர் கூறிய விவரங்கள் அவன் சிந்தையில் பெரும் குழப்பத்தையும் கலவரத்தையும் ஏற்படுத்திவிடவே, திரும்பி நடந்தவனின் விழிகள் பாதையைப் பார்ப்பதும், கால்கள் நடப்பதுவுமாக இருந்தன. அவன் தெற்கு வாயிலை அடைய சற்றுத் தொலைவிருக்கையில், பக்கவாட்டிலிருந்து வந்த ராஷ்டிரகூட வீரர்களின் புரவிகளையோ, அவர்கள் தன்னை நோக்கி விரையத் தொடங்கியதையோ, அவன் கவனிக்கவில்லை.

வெறிச்சோடிக் கிடந்த அந்த அகன்ற வீதியில், கிராமத்து வாலிபனாகத் தெரிந்த ஒருவன், கையில் பிடித்த துணி முடிப்புடன் வாயிலை நோக்கி நடப்பது, ராஷ்டிகூட வீரர்களின் கவனத்தை ஈர்த்துவிடவே, அவர்கள் புரவிகளை வேகமாகச் செலுத்தி, அவனைச் சூழ்ந்து கொண்டார்கள்.

"டேய், யார் நீ? எங்கே செல்கிறாய்?" வீரர் தலைவனாகத் தெரிந்தவனிடமிருந்து கேள்வி அதிகாரத்துடன் ஒலித்தது.

பராந்தகன் முகத்தில் கலவரம் தெரிந்தது. துணி முடிப்பை இறுகப் பிடித்துக் கொண்டவன், திருதிருவென விழித்தான்.

வீரர் தலைவனுக்கு உற்சாகம் அதிகரித்தது. "அடேய், ஏன் இப்படி கள்ளனைப் போல் விழிக்கிறாய்? கையில் எதைக் களவாடி வைத்திருக்கிறாய்?" என்றான் அதட்டலாக. பராந்தகனின் விழிகள் மிரண்டன. சொற்களும் தடுமாறின. "ஐயா, நான் ஊர்த் தலைவரைக் காண வந்தேன். இந்தப் பொருளை அவரிடம் ஒப்படைக்க வேண்டும்."



"என்ன இருக்கிறது இதில்?"

"பொற்காசுகள் ஐயா, நாங்கள் கடனாகப் பெற்றவை."

"தம்பி, எங்களுடன் வா. உன்னை ஊர்த் தலைவரிடம் அழைத்துச் செல்கிறோம். எங்கள் கூடாரத்தில்தான் அவர் இருக்கிறார்."– தலைவனின் குரலில் திடீர்ப் பரிவு ஒலித்தது.

"வேண்டாம் ஐயா, நான் பிறகு வந்து பார்த்துக் கொள்கிறேன்."– பராந்தகன் திடமாக மறுத்தான்.

"தம்பி, ஊர்த் தலைவரை காஞ்சிக்கு அழைத்துச் செல்வதாக இருக்கிறோம். எப்போது அவர் திரும்புவார் என்றும் கூற இயலாது. என்னுடன் வந்தால் உடனே அவரைப் பார்க்கலாம்."

"வேண்டாம் ஐயா, அவர் திரும்பி வந்த பின்பே, நான் வந்து அவரைப் பார்க்கிறேன். அவசரமேதுமில்லை."

"அட என்னப்பா, இப்படி அஞ்சுகிறாய்? நாங்கள் உன்னைத் தின்றுவிட மாட்டோம். சோழநாட்டு வாலிபர்கள், வீரர்களுடன் வரவே அஞ்சுமளவிற்குக் கோழைகளா? இந்த நாட்டில் வீரம் இத்தனை கேவலமாகிப் போய்விட்டதா?" என்ற வீரர் தலைவன் பெரிதாக நகைத்தான். மற்றவர்களும் பலமாக நகைத்தார்கள்.

பராந்தகன் முகத்தில் மாறுதல் தெரிந்தது. நேர்ப் பார்வையாக வீரர் தலைவனை ஏறெடுத்துப் பார்த்தவன், "சரி, ஐயா, ஊர்த் தலைவரிடம் அழைத்துச் செல்லுங்கள்" என்றபடி திரும்பி நடக்க ஆரம்பித்தான்.

வீரர்கள் புரவிகளில் பின்தொடர்ந்தார்கள். காவிரிக் கரை நெருங்கிக் கொண்டிருந்தது.

கரை நெடுக நின்றிருந்த மரங்கள், அந்த முன்னிரவு நேரத்தில் பெரும் பிசாசுகளைப் போல் அசைந்து கொண் டிருந்தன. மறுகரையில் கூடாரங்களும், பந்தங்களும்

தெரிந்தன. புரவிகளும் ராஷ்டிரகூட வீரர்களும் நடமாடிக் கொண்டிருந்தனர். அவர்களின் கத்திகளும் ஈட்டிகளும் பளபளத்தன.

காவிரியின் குறுக்கே கரைகளை இணைத்து தற்காலிக மரப்பாலமொன்றும் கிடந்தது.

வீரர் தலைவன் புரவியிலிருந்து இறங்கினான். "தம்பி, உன் பெயரென்ன? எங்கிருந்து வருகிறாய் சொல். நான் சென்று ஊர்த் தலைவரை அழைத்து வருகிறேன்" என்றான் அதிகாரமாக.

பராந்தகனது விழிகள் எதிர்க்கரையை வெறித்துக் கொண்டிருந்தன.

"நான் வண்டாழஞ்சேரியிலிருந்து வருகிறேன். பெயர், பராந்தகன்" என்றவன் திரும்பி அக்கரையை உற்றுக் கவனித்தான். மரத்தில் பிணைக்கப்பட்டிருப்பது ஊர்த் தலைவர்தான் என்பது புலப்பட்டது. அவன் முகத்தில் குழப்பம் மறைந்து, சினம் பரவியது. வேகமாகப் பாலத்தை நோக்கி இரண்டடி எடுத்து வைத்தான்.

வீரர் தலைவனின் கரம் அவனைத் தடுத்தது.

"இதற்கு மேல் செல்ல உனக்கு அனுமதியில்லை பராந்தகா. அந்த முடிப்பைக் கொடு. நான் ஊர்த் தலைவரிடம் சேர்ப்பித்து விடுகிறேன்" என்றான் அவன்.

அவன் கரத்தை வேகத்துடன் அகற்றிய பராந்தகன், சினத்துடன் வீரர் தலைவனை ஏறிட்டான். "தலைவரை ஏன் மரத்தில் பிணைத்திருக்கிறீர்கள்?" அவன் கேள்வியும் வேகத்துடன் வந்தது.

வீரர் தலைவனின் பதில் அசட்டையாக வந்தது. "அதைப் பற்றி நீ கவலை கொள்ள வேண்டாம் பராந்தகா. இன்னும் சற்று நேரத்தில் அவரை விடுவித்துவிடுவார்கள்.



அந்த முடிப்பைக் கொடு" என்றவன், பராந்தகன் கையிலிருந்து முடிப்பைப் பறித்தான்.

பராந்தகன் முகத்தில் திகைப்பும் சினமும் வேகமாகப் படர்ந்தன.

"வேண்டாம். அதைத் திருப்பிக் கொடுத்து விடுங்கள். உங்களிடம் அதைத் தர முடியாது" என்று கூவியபடி பாய்ந்தவன், அந்த முடிப்பைப் பற்றி இழுத்தான்.

வீரர் தலைவன் கரத்தால் பின்னுக்குத் தள்ளப்பட்ட பராந்தகன் முடிப்பைப் பற்றிய வேகத்தில், துணி முடிப்புக் கிழிந்து, உள்ளிருந்து பொற்காசுகள் பறந்து சிதறின. அந்த மாணிக்க ஆரமும் பறந்து, மரப்பாலத்தின் முகப்பில் நீட்டிக் கொண்டிருந்த கழியில் சிக்கி ஆடியபடி, தன் சிவந்த ஒளியை மேலும் கீழுமாக வீசியது.

வீரர் தலைவன் கரங்களால் பின்னுக்குத் தள்ளப்பட்ட பராந்தகன் மண்ணில் புரண்டு, அடுத்து நின்ற மரத்தின் அடிப்புறத்தில் மோதி நின்றான்.

வீரர் தலைவன் விழிகளும், வீரர்களின் விழிகளும், கழியில் சிக்கி ஊசலாடிய பொன்னாரத்தையும், உருண்டு மரத்தில் மோதி, எழ முயன்று கொண்டிருந்த பராந்தகனையும் வெறித்தன.





②

## விக்கிரம வரையன்

எந்த மாணிக்கம் உக்ரோதயம் என்று பெயரிடப்பட்டு மூன்று தலைமுறைகளுக்கு முன்பு வரை சோழர் மணி மகுடத்தில் ஜொலித்ததோ, எதைப் பெறுவதற்காக பல்லவ நந்திவர்மன் சாளுக்கியருடனும், கங்கர்களுடனும் பெரும் போர் புரிந்தானோ, எந்த மாணிக்கத்தை மீட்டு வரும் முயற்சியில் அந்தச் சோழ வீரன் உயிர் துறந்தானோ, அந்த மாணிக்கம் பிரவாகத்தில் விழுந்துவிடும் அபாயத்தில் ஊசலாடிக் கொண்டிருந்தது. அபகரித்துச் சென்ற சோழ வீரனைப்பற்றி அறிய குடந்தையின் ஊர்த் தலைவரைத் துன்புறுத்தி, நகரை இரு தினங்களாகச் சல்லடை போட்டுச் சலித்துக் கொண்டிருக்க, வழியில் சந்தித்த கிராமத்து வாலிபனின் துணி முடிப்பிலிருந்து, தாங்களும் பல்லவ மகாராணியும் தேடிவந்த பொருள் வெளிப்பட்டதைக் கண்ட ராஷ்டிரகூடர்கள் அடியோடு திகைத்தே போயிருந்தார்கள்.



கீழே உருண்டு மரத்தில் மோதி எழுந்து நின்ற பராந்தகனின் அசைவு, அவர்களை சுயநினைவுக்குக் கொண்டு வரவே, "அவனைப் பிடித்துக் கட்டுங்கள்" என்று இரைந்தான் வீரர் தலைவன்.

வாட்களை உருவிக் கொண்டு தன்னை நெருங்கிய வர்களை வெறித்த பராந்தகன் சித்தத்தில், அந்தச் சோழ வீரன் உயிர் பிரியுமுன் கூறிய வார்த்தைகள் எழுந்து பலமாக ஒலித்தன. ஒரே தாவலில் எம்பிய பராந்தகன், தான் மோதி விழுந்த மரத்தின் கிளையொன்றை முறித்து, தன்னை நெருங்கியவர்களை நோக்கிப் பலமாக வீசத் தொடங்கினான். தாங்கள் எண்ணியது போல் அந்த வாலிபன் ஒன்றும் அத்தனை அப்பாவியல்ல என்பதைப் புரிந்துகொண்ட ராஷ்டிரகூடர்கள், அவன் வீசிய கிளையை இரண்டொரு கணங்களில் துண்டுகளாக வெட்டித் தள்ளி விட்டு அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். பராந்தகனின் கரங்களிலும், தோள்களிலும் வாட்கள் பதிந்து இழுக்கப் பட்டன. உடலெங்கும் குருதி வழிய, கண்மூடித்தனமான ஆவேசத்துடன், சிறு கழியாகிவிட்ட அந்தக் கழியைச் சுழற்றிய பராந்தகன், வீரர் தலைவன் ஓங்கிய வாளுடன் நெருங்குவதைக் கவனித்தான்.

எதிர்க்கரையிலிருந்தும் வீரர் பலர் ஓடி வருவதையும் கவனித்தவன், கிளையை ஓங்கிக் கொண்டு வீரர் தலைவன் மீது பாய்ந்தான். கிளை, வீரர் தலைவனின் முகத்தில் தாக்கவும், வீரர் தலைவனின் வாள் பராந்தகனின் விலாப் புறத்தில் பாயவும் சரியாக இருந்தது. ஒருமுறை தள்ளாடிய பராந்தகன் மூச்சை இழுத்துப் பிடித்துக்கொண்டு மூங்கிற் பாலத்தை நோக்கிப் பாய்ந்தான். பின்னாலிருந்து அவன் முதுகில் குறுவாளொன்றும் பாய்ந்தது. தூக்கி எறியப் பட்டவன் போல் பாய்ந்தவன், கழிநுனியில் ஊசலாடிக்

கொண்டிருந்த ஆரத்தை ஒரு கையால் பற்றிக் கொண்டு, காவிரியின் பிரவாகத்தில் தலைகுப்புற விழுந்தான்.

எழுந்து ஓடிவந்த வீரர் தலைவனுக்கும், மற்ற வீரர்களுக்கும் நீர்ச்சுழலில் கரைந்து மறைந்த குருதி மட்டுமே புலப்பட்டது. கரையோர நாணற் புதர்களிலும், ஓரங்களிலும் எத்தனை தேடியும், காயங்களுடனும், முதுகில் பாய்ந்த குறு வாளுடனும் விழுந்துவிட்ட பராந்தகன் கிடைக்கவேயில்லை. அவன் மடிந்திருக்க வேண்டும் என்று எண்ணிய ராஷ்டிர கூடர், நீரிலும் குதித்து அடிப்பகுதியிலும் தேடினர். கையில் கிடைத்த மாணிக்கத்தை நழுவவிட்டுவிட்ட வீரர் தலைவன், வாலிபன் கூறிய வண்டாழஞ்சேரிக்குச் சென்று, தக்கபடி விசாரித்து வர வீரர்களுக்கு உத்தரவிட்டான்.

**பு**ஷ்பக் கொத்துபோல் தெரிந்த புஷ்ய நட்சத்திரக் கூட்டம் மேற்கில் நன்றாகச் சரிந்து, இரவின் மூன்றாவது ஜாமம் முடியப் போவதை அறிவித்தபடி, கோரைகளுக்கு நடுவே அசைவற்றுக் கிடந்த வாலிபனின் உடலை அச்சத் துடனும், பரிதாபத்துடனும் பார்த்துக் கண்களைச் சிமிட்டிக் கொண்டிருந்தது. கிழக்கிலிருந்து வந்த மேகங்களும் நீர்த்துளி களைத் தெளித்து, அவனைச் சுயநினைவுக்குக் கொண்டு வர முயன்று பலனின்றி நகர்ந்தன.

ஆற்றில் துடுப்புகள் துழாவும் ஒலி மெல்ல எழுந்து, சற்று நேரத்தில் சிறு படகு ஒன்று புலப்பட்டது. இருளையும் சாரலையும் அசட்டை செய்து, படகில் அமர்ந்து வந்த மனிதனின் விழிகள் இருளில் அனல் துண்டங்களைப் போல் ஜொலித்து, கரைப் பகுதிகளைத் துழாவின.

மங்கிய நிலவொளியில் தெரிந்த அவன் முகம் நடுத்தர வயதைக் கடந்தவன் என்பதைத் தெரிவித்தாலும், வலுவான அவன் கரங்களும், இருப்புச் சலாகை போல் அகன்று கிடந்த மார்பும், உறுதியையும் இடைவிடாத பயிற்சியையும் காட்டின.



அவன் கழுத்திலாடிய சங்கிலியும், அதில் இணைக்கப் பட்டிருந்த பெரும் புலிப் பதக்கமும், இடையில் நீண்டு கிடந்த வாளின் பிடியிலிருந்த கற்களும், அவன் சாதாரண மனிதனல்ல என்பதை அறிவுறுத்தின.

துடுப்புகளை நிலையாகப் பிடித்துப் படகை மட்டுப் படுத்திய அந்த மனிதனின் கூர்விழிகள், கோரைகளுக்கு நடுவேயிருந்து நீர்மட்டத்தில் மிதந்து ஆடிக்கொண்டிருந்த பராந்தகனின் ஒரு காலை கவனித்துப் பளிச்சிட்டன.

**ப**ராந்தகன் மீண்டும் கண்விழித்தபோது மேலே ஓலைகளால் வேயப்பட்ட கூரையும், எதிரில் யாரோ இருவர் நிற்பதும் மங்கலாகப் புலப்பட்டன. தெளிவற்ற சொற்களும் காதில் விழுந்தன. "பிரபு, இவன் உடல் இரும்பாயிருக்க வேண்டும். காவிரியின் பிரவாகமும் இவனுக்குப் புதிதல்ல. சஞ்சீவினி மூலிகையை இவன் உடல் ஏற்றுக் கொண்டிருக் கிறது. இன்னும் அறுபது நாழிகைக்குள் எழுந்து அமர்ந்து..." மேற்கொண்டு சொற்கள் விழவில்லை பராந்தகனுக்கு. நினைவை இழந்தான் அவன்.

**பெ**ரும் ஸர்ப்பமொன்று படுத்துக் கிடப்பதுபோல் நீண்டு வளைந்து கிடந்த அந்தக் கடற்கரையில், துறைமுகத்தி லிருந்து அரைக் காத தூரத்தில் தொடங்கிய விடுதிகள், வெகு தூரம் வரை நீண்டு கிடந்தன. தென்கோடியிலிருந்த விடுதியொன்றின் மேற்புரத்து சாளரமொன்றினருகே நின்று, எதிரே விரிந்த நீலக்கடலையும், அதில் ஆடி நின்ற பலநாட்டுக் கலங்களையும் வெறித்துக் கொண்டிருந்த பராந்தகனது முகத்தில் தெளிவு சற்றுக் கூடியிருந்தது. தான் உயிர் பிழைத்ததே வெகு அதிசயமாயிருக்க, அவன் உடைகளும், கச்சையும், அதில் தான் குடந்தைக்கு வந்தபோது கொண்டு வந்ததைவிட அதிகமான பொற்காசுகளுடன்

துணி முடிப்புமிருந்தது இன்னும் அதிசயமாயிருந்தது. போதாக்குறைக்கு அவன் மீட்டு வந்த பொன்னாரமும் பட்டுத் துணியொன்றில் சுற்றப்பட்டு கச்சையிலிருந்தது. தன்னைக் காப்பாற்றியவரைப் பற்றி அறிய அவன் எடுத்துக் கொண்ட முயற்சிகளேதும் பலனளிக்கவில்லை. மேல்தளத்து அந்த அறையின் வாயிலில் ராட்சதன் போல் காவலுக்கு நின்றிருந்த யவனன், பராந்தகனை அறைக்கு வெளியே அனுமதிக்க மறுத்தான். எல்லாக் கேள்விகளுக்கும் தலை வணங்கிவிட்டுச் சிரிப்பதைத் தவிர வேறு பதிலும் பேச மறுத்தான். கீழ்த்தளத்தில் வணிகராகத் தெரிந்த பலர் வருவதும் போவதுமாயிருப்பது, பேச்சுக் குரல்களால் புலப் பட்டது. மூலிகைகளையும், குளிகைகளையும், உணவையும் கொண்டு வந்து அளிப்பதைத் தவிர, இரவும் பகலும் காவல் நிற்பதிலேயே கண்ணும் கருத்துமாய் இருந்தான் யவனன்.

இரண்டாவது தினம் மாலையில் விடுதியில் மாற்றம் தெரிந்தது. தடதடவெனப் புரவிகள் பல வாயிலில் வந்து நின்று, திடகாத்திரமான பலர் உள்ளே நுழைந்தார்கள். கனத்த குரல் ஒன்றும் கீழ்த்தளத்தில் ஒலித்தது. சற்றுக் கழித்து திடமான காலடிகள் படிகளில் ஒலித்தன. யவனனது தலை தரையைத் தொட்டுவிடுவது போலத் தாழ்ந்து நிமிர்ந்தது.

திடமான சரீரத்துடனும் ஆஜானுபாகுவான வலிய கரங்களுடனும், மார்பில் புலிப்பதக்கம் கொண்ட சங்கிலி ஊசலாட, உள்ளே நுழைந்தார் அந்த மனிதர். அசல் வேங்கையின் விழிகளாகவே ஜொலித்த அவரது விழிகளில், பராந்தகன் திடமாக அமர்ந்திருப்பதைக் கண்டதும் மகிழ்ச்சி பரவியது.

"நன்றி பராந்தகா, மிக்க நன்றி."— முகமெங்கும் மகிழ்ச்சி பொங்க கூறவும் செய்தார் அவர்.



பராந்தகன் முகத்தில் குழப்பம் விரிந்தது.

"ஐயா, தாங்கள்தான் என்னைக் காப்பாற்றியவராக இருக்கவேண்டும்..."— பாதிக் கேள்வியாகக் கேட்டான் பராந்தகன்.

"காவிரிக் கரையிலிருந்து உன்னை இங்கு கொண்டு வந்தது நான்தான். உன்னை உயிர் பிழைக்க வைத்தது அந்த ஆண்டவனின் கருணை," என்றார் அவர் முறுவலுடன்.

"அப்படியானால் நானல்லவா தங்களுக்கு நன்றி கூற வேண்டும்?"

அந்த மனிதர் மெல்லச் சிரித்தார். "பராந்தகா, உனக்கு வாள் வீசத் தெரியுமா?" என்றார்.

"இல்லை ஐயா, தெரியாது."

"வேறு போர்ப் பயிற்சியேதும் உண்டா?"

"இல்லை ஐயா, எனக்கு வாளைப் பிடிக்கவும் தெரியாது. வேறெந்தப் பயிற்சியும் பெற்றதில்லை."

"இதுவரை வாளைப் பிடித்துமறியாத நீ, ராஷ்டிரகூட வீரர் பதின்மரை வெறும் மரக்கிளையுடன் எதிர்த்து சண்டையிட்டு காயப்படுத்தியிருக்கிறாய். எந்த விநாடியிலும் உன் உயிர் பறிக்கப்பட்டிருக்கலாம். அத்தனை பேரையும் மீறி, அந்த மாணிக்க ஆரத்தையும் மீட்டுக்கொண்டு தப்பியிருக்கிறாய். அது வெறும் மாணிக்கமல்ல பராந்தகா. என் உயிரையும், பல ஆயிரம் சோழ வீரர் உயிரையும் விட மேலானது. சோழ மன்னரின் மகுடத்தை அலங்கரித்தது. மூன்று தலைமுறைகளுக்குப் பின் மீண்டு வந்திருக்கும் உக்ரோதயம் அது. அதை மீட்டு வந்த உனக்கு நன்றி கூற வேண்டியது என் முதல் கடமை."— அந்த மனிதரின் வார்த்தைகளில் உணர்ச்சி ததும்பியது.

பராந்தகன் மெல்ல வினவினான், "ஐயா, தாங்கள் யாரென்பதை நான் அறியலாமா?" என்று.

வெகு சகஜமாக வந்தது அவரது பதில்: "பெண்ணாகடத்துப் போரில் மறைந்த செங்கட்சோழரின் படையைச் சேர்ந்தவன் நான். என்னை விக்கிரமவரையன் என்று அழைப்பார்கள்."

பதறி எழுந்தான் பராந்தகன். என்னதான் வயலும், வாய்க்காலுமே கதியென்று வாழ்க்கை நடத்தினாலும், சோழநாட்டில் நடப்பவற்றை தந்தையார் மூலமும், ஊரார் மூலமும் ஓரளவு அறிந்திருந்தவனுக்கு, எதிரிலிருப்பவர் யாரென்பது புரிந்தது.

பாண்டிய வரகுணனுடன் சேர்ந்து, சோழ மன்னர் பல்லவ நந்திவர்மனுடன் நடத்திய போரிலும், களப்பிரரை ஒடுக்குவதிலும் பெரும் சாகசங்கள் புரிந்தவரும், சோழ மன்னன் மறைந்த பின்னும் ராஷ்டிரகூடரின் கரங்களை வெகுவாகத் தேக்கி வைத்திருப்பவரும், அரிசிலாற்றங்கரை மண்டபத்தில் அந்தச் சோழ வீரன் எவரிடம் பொன்னாரத்தை ஒப்படைக்கக் கேட்டுக்கொண்டானோ, அந்தச் சோழர் படைத்தலைவர்தாம் தன்னெதிரில் அமர்ந்து சகஜமாக உரையாடிக் கொண்டிருக்கிறார் என்பது புரிந்தது பராந்தகனுக்கு.

அவன் கரங்கள் மாணிக்க ஆரத்தை எடுத்து பயபக்தியுடன் அவரை நோக்கி நீட்டின. "ஐயா, இதைப் பெற்றுக் கொள்ளுங்கள்," என்றான் மெல்ல.

படைத்தலைவரின் வலிய கரங்கள் நீண்டு அந்த ஆரத்தைத் தொட்டு விழிகளில் ஒற்றிக் கொண்டன. அடுத்து அவர் குரலும் பெரும் உணர்ச்சியுடன் ஒலித்தது: "பராந்தகா, இதனுடன் பெரும் அரசுகள் பின்னிக் கிடக்கின்றன. ராஷ்டிரகூடரிடமிருந்து விடுபட்டு சோழநாடு சுதந்திரம் பெறும். அப்போது சோழர் மணிமுடியை மீண்டும் இது அலங்கரிக்கும். இது உன்னிடமே அதுவரை இருக்கட்டும். இதைப் பாதுகாத்து வைத்திருக்கத் தகுந்தவன்தான் நீ."



சற்றே தயங்கிய பராந்தகன், "உத்தரவு படைத்தலைவரே," என்று ஆரத்தை மீண்டும் கச்சையில் பத்திரப்படுத்திக் கொண்டான்.

"பராந்தகா, எனக்கு இன்னும் கடமைகளும், உடன் அபாயமும் காத்துக் கிடக்கின்றன. நானாக வந்து கேட்கும் வரையில் இதைப் பாதுகாத்து வைத்திரு. சோழ மன்னர் மணிமகுடத்தில் என்றும் இருக்கப்போகும் இந்த மாணிக்கத்துடன், அதை மீட்டு வந்து பாதுகாத்த உன் பெயரும், சோழர் சரித்திரத்தில் என்றும் நிலைத்திருக்கும்."

உணர்ச்சிவசப்பட்டு நின்ற படைத்தலைவரும், ஏதோ பெரும் சுமை தன் மீது சுமத்தப்பட்டுவிட்டதாகவும், அதைப் பெருமையாகவும் எண்ணிய பராந்தகனும் அப்படியே சற்று நேரம் நின்றிருந்தார்கள்.

மெல்ல தன் நிலைக்குத் திரும்பிய பராந்தகன், "படைத்தலைவரே, நான் ஊர் திரும்ப அனுமதியளிக்க வேண்டும். இத்தனை தினங்களாக நான் திரும்பவில்லையென தந்தையார் கவலை கொண்டிருப்பார்" என்றான்.

விக்கிரமவரையர் முகத்தில் வருத்தம் படர்ந்திருந்தது. "பராந்தகா, நானும் உன்னுடன் வருகிறேன். ராஷ்டிரகூடரிடம் உன் பெயரையும் ஊரையும் கூறியிருக்கிறாய். சுற்றுப் பகுதியில் விசாரித்தவர்கள், இன்று காலை வண்டாழஞ்சேரிக்குச் சென்றதாக அறிகிறேன். இன்னும் இரு நாழிகைகளில் நாம் புறப்படலாம்" என்றார் படைத்தலைவர். அவரது வார்த்தைகளைக் கேட்டபின் பராந்தகனுக்கு இருப்புக் கொள்ளவில்லை. சற்று நேரத்தில் படைத்

தலைவரிடம் புரவியேற்றத்தைப் பயின்று கொண்டவன், மூன்றாவது நாழிகையில் படைத்தலைவரும், வீரர்களும் உடன்வர பயணப்பட்டான்.

வண்டாழஞ்சேரியை நெருங்க நெருங்க அவனது இதயம் வேகமாகத் துடிக்க ஆரம்பித்தது. ஊர் எல்லையை அடைந்ததும் அவன் இதயம் ஒருகணம் சட்டென்று நின்று மீண்டும் அதிவேகத்தில் ஓடியது.

வண்டாழஞ்சேரியின் ஒரு பகுதி, அதுவும் அவனது இல்லம் இருந்த பகுதியில், பெரும் தீயின் ஜ்வாலை எழுந்து வெகு உயரமாக எரிந்து அவனை வரவேற்றது.





(3)

## போர் வாள்

இன்பமும் துன்பமும் கலந்ததுதான் வாழ்க்கை என்று வேதாந்தமும், சித்தாந்தங்களும் சொல்கின்றன. ஆனால், துன்பங்களை அனுபவிக்கவும், சோதனைகளை எதிர் கொள்ளவும் ஆண்டவன் ஒரு சிலரை மட்டுமே தேர்ந்தெடுக்கிறான். அது ஏன் என்ற கேள்விக்கு எந்த வேதாந்தமும், சித்தாந்தமும், தத்துவமும், புத்தகமும், ஞானிகளும், மேதைகளும் சரியான பதில் கூறவில்லை. விதியென்றும், பூர்வ ஜென்மப் பலனென்றும் வாதாடினாலும், அவை நம் சிந்தைக்கும், செயலுக்கும் அப்பாற்பட்டவை என்பதால், அறிவுபூர்வமாக அவற்றை ஏற்கவும் முடியவில்லை.

காலங்களைக் கடந்து மனிதனுக்கு பதில் கிடைக்காத கேள்விகளில் இதுவும் ஒன்று.

ஆனால் அப்படி நேரக்கூடிய துன்பங்களையும், சோதனைகளையும் கடந்து வாழ்வில் உயர்பவர்கள்,

சரித்திரம் படைக்கிறார்கள். மற்றவர்கள் அவற்றைப் படிக்கிறார்கள். அவ்வளவே. ஆண்டவனின் அந்தத் தேர்வு, படைப்பதையும், படிப்பதையும் நிர்ணயிக்கிறது.

பராந்தகன், அப்படித் தேர்ந்தெடுக்கப்பட்டவனாகத் தான் இருக்க வேண்டும்.

**வ**ண்டாழஞ்சேரியின் எல்லையை நெருங்கியதும், ஊருக்குள் தீ பெரிதாக உயர்ந்து எழுவதையும், அதுவும் தன் இல்லம் இருந்த பகுதியாகத் தெரிவதையும் கண்டவன், பதற்றத்துடன் புரவியைப் பாயவிட்டான். பராந்தகனையும், சோழ வீரர்களுடன் வந்த விக்கிரமவரையரையும் கண்ட ஊர் மக்கள், பெரும் கூச்சலுடன் சூழ்ந்து கொண்டனர்.

'படைத்தலைவரே... படைத்தலைவரே.... பராந்தகா'' என்று கூக்குரல்கள் மாறிமாறி ஒலித்தனவேயொழிய, எவரும் தெளிவாகப் பேச இயலவில்லை. கீழே குதித்து கூட்டத்தை விலக்கி, தன் இல்லமிருந்த இடத்தை நெருங்கிய பராந்தகன் திக்பிரமை பிடித்து நின்றான்.

அவனது இல்லம் தரைமட்டமாகிக் கிடக்க, தணலும், நெருப்பும், புகையும் சூழ்ந்து, நெருங்க விடாமல் அடித்தன. ஊர் மக்களுடன் அக்கம் பக்கத்து ஊர்களைச் சேர்ந்தவர் களும் தீயை அணைக்கப் போராடிக் கொண்டிருந்தனர்.

கூட்டத்தை விலக்கிக் கொண்டு முதியவர் ஒருவர் பராந்தகனை நோக்கி வந்தார்.

அவரைக் கண்டதும் பாய்ந்த பராந்தகன், "தலைவரே, என்ன நேர்ந்தது? யார் தீயிட்டது? என் தந்தை எங்கே சொல்லுங்கள், ஊர்த்தலைவரே, சொல்லுங்கள்'' என்று அந்த முதிய மனிதரைப் பிடித்து உலுக்கினான்.

பராந்தகனின் தோளில் படைத்தலைவரின் வலிய கரம் அழுத்தி, அவனை நிதானப்படுத்தியது. "பராந்தகா, பதற்றப்



படாதே, என்ன நேர்ந்தது என்பதை அவரே கூறட்டும்'' என்றார்.

அந்த முதியவரின் குரல் துக்கத்தில் விம்மி வெடித்தது. "பிரபு, இன்று பிற்பகலில் ஐம்பதுக்கும் குறையாத ராஷ்டிரகூட வீரர்கள் வந்தார்கள். பராந்தகனைப் பற்றி விசாரித்தார்கள். விஷயம் இன்னதென்று அறியாத நாங்கள், அவர்களை பராந்தகனின் தந்தையிடம் அழைத்துச் சென்றோம்.''

"பிறகு?''

"பிறகு, பராந்தகன் ஏதோ பொன்னாரத்தை பல்லவச் சக்கரவர்த்தினியிடமிருந்து களவாடி விட்டதாகவும், அந்த ஆரம் இந்த இல்லத்திலிருப்பதாகவும் கூறி, எல்லாவற்றையும் தலைகீழாகப் புரட்டினார்கள். பராந்தகனின் தந்தையும், நாங்களும் எவ்வளவோ தடுக்க முயன்றோம். முடிய வில்லை.''

"பின்பு என்ன ஆயிற்று?''

"பராந்தகனின் தோழர்கள் ஓடி வந்தனர். அவர்கள் ராஷ்டிரகூடர்களைத் தடுக்கும் முயற்சியில் சண்டை மூண்டு விட்டது. பயிற்சி பெற்ற அந்தப் போர் வீரர்களை நம் கிராமத்து இளைஞர்கள், எத்தனை நேரம் தாக்குப்பிடிக்க முடியும்? பராந்தகனின் தோழர்கள் கொல்லப்பட்டார்கள். அவர்களைக் காக்க முயன்ற பராந்தகனின் தந்தையும் கொல்லப்பட்டார். அவர்கள் மீண்டும் வருவதாகவும், பராந்தகன் வந்தால் பிடித்து ஒப்படைக்க வேண்டுமென்றும் அச்சுறுத்திவிட்டு, புறப்படும் முன் இல்லத்திற்குத் தீயை வைத்துவிட்டுச் சென்றுவிட்டார்கள்.''

விக்கித்து நின்றிருந்தான் பராந்தகன். துக்கத்தினால் வார்த்தையேதும் வராமல் கண்களில் நீர்வழிய நின்றவன்

சித்தத்தில், ஏதோ பளிச்சிட்டது. அடுத்து எல்லையற்ற கலவரம் அவன் முகத்தில் பரவியது.

குரலில் முன்னைவிட அதிகப் பதற்றம் ஒலிக்க, "ஊர்த் தலைவரே, கார்குழலி எங்கே? எங்கே என் உடன்பிறந்தவள்? அவளுக்கு என்ன நேர்ந்தது?" என்றவனின் குரல் உயர்ந்து ஒலித்தது.

முதியவர் பதிலேதும் கூறவில்லை.

அருகில் நின்ற பெண்மணி ஒருவர் பதிலளித்தார்: "பராந்தகா, அந்த ராட்சதர்கள் வருவதற்கு வெகு நேரம் முன்னதாகவே அவள் ஊரெல்லையிலிருக்கும் ஆலயத்திற்குச் சென்றாள். பின்பு திரும்பவேயில்லை. நாங்கள் சென்று தேடியதில், ஆலயத்தின் அருகில் அவள் கொண்டு சென்ற மலர்க்கூடையும், உடைந்த வளையல்களும்தான் கிடைத்தன. உடன் இதுவுமிருந்தது" என்றவள், மலர்க் கூடையை நீட்டினாள். கூடைக்குள் உடைந்த வளையல்களுக்கிடையே குருதியில் நனைந்த துணியொன்றும் கிடந்தது. பார்த்தவுடன் அது கார்குழலியின் மேலாடைதான் என்பது புரிந்தது பராந்தகனுக்கு. அவன் தலைக்குள் ஆயிரம் இடிகள் சேர்ந்து ஒலித்தன. அவன் விழிகளுக்கு முன்பாக கரிய திரையொன்று விழுந்து பார்வையை மறைத்தது. கால்கள் துவண்டு, நிற்கச் சக்தியற்று, அப்படியே மயங்கிச் சரிந்தான் பராந்தகன்.

படைத்தலைவரின் கரங்கள் அவனைத் தாங்கி, சோழ வீரர்களிடம் ஒப்படைத்தன.

**த**ணிந்து கொண்டிருந்த நெருப்பையும், வெடித்த மரக் கட்டைகளையும், புகைக்கு நடுவே, இல்லத்தின் மறுபுறத்தில் வரிசையாகக் கிடத்தப்பட்டிருந்த உடல்களையும் வெறித்துப் பார்த்தபடி, மெல்ல உலவினார் படைத்தலைவர். அதி தீவிர சிந்தனை அவர் முகத்தில் படர்ந்து கிடந்தது.



முதியவர் படைத்தலைவரை நெருங்கி, "பிரபு, இங்கு மட்டுமல்ல, சோழநாட்டின் பல பகுதியிலும் இதே கதைதான். செங்கட் சோழருக்குப்பின் சோழ நாட்டில் அமைதியே அற்றுப் போய்விட்டது. குடந்தையிலும் நேற்று இப்படி நடந்ததாக அறிந்தேன். பல்லவச் சக்கரவர்த்தியின் பெயரால் ராஷ்டிரகூடர்கள் செய்யும் அக்கிரமங்களுக்கு முடிவே கிடையாதா? நம் சோழநாட்டின் வீரர்கள் அனைவரும் எங்கே தொலைந்து போனார்கள்? இதற்கொரு விடிவே கிடையாதா?" ஆவேசத்துடன் அவர் கேட்ட கேள்விகள், சுற்றி நின்ற அத்தனை முகங்களிலும் பிரதிபலிப்பதைக் கண்ட விக்கிரமவரையர், அவை அந்தக் கிராமத்து மக்களின் குரல்கள் மட்டுமல்ல, சோழநாட்டு மக்கள் அனைவரின் குரல்கள் என்பதைப் புரிந்துகொண்டார்.

முதியவரையும் மக்களையும் ஏறிட்ட படைத்தலைவரின் முகத்தில் இன்னதென்று விளங்காத ஒளியொன்று பரவியது. அடுத்து அவர் குரல் உறுதியுடன் ஒலித்தது. "ஊர்த் தலைவரே, ராஷ்டிரகூடரை விரட்ட ஒரு வழி இருக்கிறது. அதைக் கூறுமுன்பாக, உள்ள நிலையைச் சற்று புரிந்துகொள்ளுங்கள். பெண்ணாகடத்துப் போரில் நம் மன்னர் மட்டும் மறையவில்லை. நம் சோழ வீரர்களில் முக்காலுக்கு மேல் இறுதி மூச்சுவரை போராடி, வீரமரணம் அடைந்தார்கள். இருக்கும் சொற்ப வீரர்களுடன் இன்னும் படை திரட்டி, நாம் ராஷ்டிரகூடரின் பெரும் படையை விரட்ட, பல காலம் பிடிக்கும். படை திரட்ட, தேவையான பொருளும் நம்மிடம் குறைவாகவே இருக்கிறது."

முதியவர் வேகத்துடன் இடைமறித்தார். "அப்படியானால் இந்த நிலை நீடிக்க வேண்டியதுதானா?"

படைத்தலைவரின் கரம் உயர்ந்து அவரைத் தேக்கியது. "முதியவரே, சற்றுப் பொறுங்கள். நான் தனிப்பட

ஓரளவிற்கு வீரர்களைத் திரட்டியிருக்கிறேன். நாகை யிலிருந்து புரவிகளையும் தருவித்திருக்கிறேன். ஆனால் அவை ராஷ்டிரகூடரை எதிர்க்கப் போதாது."

"நாங்கள் இளைஞர்களை திரட்டித் தருகிறோம். தேர்களுக்கும், பொதி வண்டிகளுக்கும், அச்சுகள் செய்யும் பட்டறைகளிலிருந்து ஆயுதங்கள் செய்து தருகிறோம். நீங்கள் இளைஞர்களுக்குப் பயிற்சியளித்து வீரர்களாக மாற்றுங்கள்."

"அவையும் போதாது."

"இன்னும் என்ன தேவை?"

"போரைத் தலைமை தாங்கி நடத்தவும், மக்களைத் திரட்டவும் ஒரு மன்னன் தேவை."

"ஏன், தாங்களே போரை நடத்தக் கூடாதா?"

"நடத்தலாம். வீரர்கள் என்னுடன் வரலாம். ஆனால் மக்களின் ஆதரவையும் எழுச்சியையும் மன்னனாக இருப்பவனால் எளிதில் திரட்ட முடியும். தவிர, என் உயிர் சதா ஆபத்திலிருக்கிறது. படை திரட்டும் முயற்சியில் என் உயிர் எப்போது வேண்டுமானாலும் பறிக்கப்படலாம். என்னை எந்த நிலையில் கண்டாலும் கொன்றுவிட, ராஷ்டிரகூடர்களுக்கு உத்தரவிருக்கிறது. செங்கட்சோழரின் புதல்வர்கள் சிறுவர்கள். அவர்கள் என் பாதுகாப்பிலிருக் கிறார்கள்."

முதியவரின் முகத்தில் சிந்தனை படர்ந்தது. வெகு நேரம் மௌனமாக நின்றார் அவர்.

தீ முழுமையாக அணைந்து, புகையும், வெடித்த மரங்களின் துகள்களும் காற்றில் பரவின. அக்கம்பக்கத்து கிராமத்து மக்களும் திரண்டு நின்றார்கள்.



"ஒரு வழியிருக்கிறது படைத்தலைவரே."– முதியவரின் குரல் திடீரென ஒலித்தது. சட்டென்று அமைதி நிலவியது அங்கே.

படைத்தலைவரின் முகத்தில் முறுவலொன்று தெரிந்தது. முதியவர் கூறப்போவதை அவர் எதிர்பார்த்த தாகத் தோன்றியது.

முதியவர் தொடர்ந்தார்: "படைத்தலைவரே, நமது செங்கட்சோழரின் மகள், நம் இளவரசியாரை பாண்டிய மன்னர் ஜடில பராந்தகர் வரகுண பாண்டியருக்கு மணம் செய்து கொடுத்து ஆண்டுகள் பல ஆகிவிட்டன."

"சொல்லுங்கள் மேலே."

"பாண்டிய வரகுணர் பல்லவ சக்கரவர்த்திக்கு எதிராக மீண்டும் படையெடுக்க, படை திரட்டிக் கொண்டிருப்பதாகக் கேள்வி. அவரது உதவியை நாம் பெற்றால், இப்போதுள்ள நிலைமைக்கு விடிவு பெற வாய்ப்பிருக்கிறதல்லவா?"

படைத்தலைவரின் கூர்விழிகள் சுற்றி நின்ற மக்களை ஒருமுறை அலசின. முதியவர் கூறியதை அவர்கள் ஏற்றுக் கொள்வதை, அவர்களின் முகங்கள் பிரதிபலித்தன.

அடுத்து ஒலித்த படைத்தலைவரின் குரலில் பெரும் அமைதி தொனித்தது. "முதியவரே, சோழநாட்டு மக்களே, நானும் இதே முடிவுக்கு வந்து பல நாட்களாகின்றன. ஆனால் சோழநாட்டு மக்கள் இதை ஏற்பார்களா என்ற சந்தேகமுமிருந்தது. இதன் விளைவுகள் என்னவென்பதை சிந்தித்தீர்களா?"

கூட்டம் மௌனம் சாதித்தது.

"கவனமாகக் கேளுங்கள். பாண்டியரின் உதவி பெற்றால், நம் சோழ நாட்டில் விடிவு ஏற்படுவது சாத்தியம் தான். ஆனால் அதன் பின்பு, பாதுகாப்பிற்காகவும், வலிமை

மிகுந்த மன்னனும் படையும் பெறும்வரை, நாம் பாண்டியரின் ஆதிக்கத்தை ஏற்க நேரிடும். ராஷ்டிரகூடரின் ஆதிக்கத்தைவிட, தமிழ் மன்னரின் ஆட்சி மேல்தான். அதிலும் வரகுண பாண்டியர் தர்மம் தவறாதவர். உங்கள் சம்மதம் இருக்குமானால் இதற்கான ஏற்பாடுகளில் இறங்கலாம்."

"சம்மதம், சம்மதம்" என்று கூட்டம் குரல் கொடுத்தது.

"படைத்தலைவரே, நீங்கள் பாண்டியரைக் கண்டு ஆவன செய்யுங்கள்" என்றார் முதியவர்.

"ஊர்த் தலைவரே, எதற்கும் மற்ற ஊர்களுக்கும் தகுந்தவர்கள் மூலம் செய்தியனுப்பி சம்மதம் பெற்று விடுங்கள். ஆனால் நமது ஏற்பாடுகள் அனைத்தும் ரகசியமாகவே இருக்கட்டும்" என்ற படைத்தலைவர், இறந்தவர்களின் கிரியைகளைக் கவனிக்கவும், எரிந்துபோன இல்லங்களுக்குப் பதிலாக புதிய இல்லங்கள் கட்டவும் உத்தரவிட்டார். உரிய பொருள்களையும், பொற்காசுகளையும் தமது சேமிப்பிலிருந்து வழங்கவும் தம் வீரர்களைப் பணித்தார்.

எரிந்து தணிந்து கொண்டிருந்த இல்லங்களினூடே மெல்ல நடந்தவர், பராந்தகனின் இல்லத்தினருகே சற்று நின்றார்.

எஞ்சிய பொருள்கள் தீயிலிருந்து மீட்கப்பட்டு அடுக்கப்பட்டிருந்தன. பாத்திரங்களும், சிறிது துணிமணிகளையும் அடுத்துக் கிடந்த மரச்சாமான்களிடையே, படைத்தலைவரின் கவனத்தை ஈர்த்தது ஒரு நீண்ட மரப் பேழை. சற்று நெருங்கியவர், பாதிவரை எரிந்து கிடந்த அந்தப் பேழையினுள், நேர்த்தியான வேலைப்பாடுடன், பழுப்பேறிக் கிடந்த மற்றொரு பேழை இருப்பதைக் கண்டார்.



அந்தப் பேழையைக் குனிந்து எடுத்தவர், அதன்மீது தெரிந்த சின்னங்களையும், வேலைப்பாடுகளையும் கண்டு பிரமித்தார். அவர் கூர் விழிகளில் பிரமிப்புடன் இலேசான சந்தேகச் சாயையும் படர்ந்தது. வெகு கவனத்துடன் அதைத் தாங்கி, கீழ்ப்புறத்திலிருந்த கொக்கியை விடுவித்தவர், மூடியை மெல்லத் திறந்தார்.

உள்ளே சற்று அகலமான, கனத்த, நீண்டு வளைந்த பெரும் வாளொன்று பளபளத்துக் கிடந்தது.

அந்த வாளைக் கண்ட படைத்தலைவரின் முகத்தில் பிரமிப்புடன் பெரும் கனவுச் சாயை பலமாகப் படர்ந்தது.





## 4
## போலித் துறவி

எந்தச் சந்தர்ப்பத்திலும் உணர்ச்சிகளுக்கு அதிகம் இடம் கொடுக்காதவரென்றும், எந்தச் சிக்கலான சூழ்நிலையிலும் பரம நிதானமாகச் செயல்படுபவரென்றும் பெயரெடுத்திருந்த சோழர் படைத்தலைவர் விக்கிரமவரையரின் சித்தத்தில், அந்த வாள் பெரும் நினைவலைகளைக் கிளப்பி விட்டிருக்க வேண்டும். கடந்து போன சரித்திர நிகழ்ச்சிகளாக அவர் அறிந்திருந்தவை எத்தனை உண்மை என்பதை, அவர் மனம் உணர்ந்திருக்க வேண்டும்.

அந்த வாளின் பூர்வீகம் என்ன என்பதிலோ, அது எவருடையது என்பதிலோ அவருக்கு எவ்விதச் சந்தேகமும் இல்லை. அந்த வாளைக் கண்ட அவரது விழிகளில் ஒரு பக்தியும், மரியாதையும்கூடத் தெரிந்தன.

அவரது கூர்விழிகள் சற்றுத் திரும்பி பராந்தகன் இருந்த இடத்தை நோக்கின. மயக்கத்திலிருந்து விடுபட்டிருந்த



பராந்தகன், முதியவரிடம் ஏதோ கூறிக் கதறிக் கொண்டிருந்தான். அவனது அகன்ற நெற்றியையும், துயரம் மண்டிக் கிடந்த பெருவிழிகளையும் உற்றுக் கவனித்தவர் முகத்தில், அடையாளம் கண்டு கொண்ட திருப்தி பூரணமாகப் படர்ந்தது. அடுத்து, "சோழ உக்ரோதயம் உன்னை நாடி வந்ததன் காரணம் இப்போது புரிகிறது பராந்தகா" என்று அவர் உதடுகள் முணுமுணுத்தன.

பராந்தகனைத் தேற்றியபடியே அவனைப் படைத் தலைவரிடம் அழைத்து வந்த முதியவர், அவரது கரங்களில் கிடந்த பேழையையும், உள்ளிருந்த பெரும் வாளையும் கவனித்து, படைத்தலைவரின் விழிகளில் விரிந்த கேள்விக்கு பதிலாக மெல்ல முறுவலித்தார். அத்தனை சோகத்திலும் அந்த முறுவலில் ஒரு பெருமிதம் மிதந்தது.

"படைத்தலைவரே, தாங்கள் எண்ணுவது மிகச் சரியே. இது அந்த வாள்தான். பராந்தகனும் அதற்கு உரியவன்தான். ஆனால் அவனுக்கே இதைப் பற்றிய முழு விவரமும் தெரியாது" என்றார் முதியவர்.

"பராந்தகனின் தந்தை...?" இழுத்தார் படைத்தலைவர்.

"கருணாகரர்... அவரது பெயர் அதுதான். அவரது பாட்டனாரின் பெயரையே அவர் ஏற்றிருந்தார். அரசியல் சதிகளையும், போர்களையும், மன்னர்களையும் வெறுத்து, அமைதியான வாழ்வையே விரும்பினார் அவர். பராந்தகனையும் அவ்வாறே வளர்த்தார். ஆனால் என்ன? அரசியல் சிக்கல்கள் அவனை நாடி வருகின்றன."– முதியவரின் குரலில் வருத்தம் தொனித்தது.

ஏதும் புரியாமல் விழித்துக் கொண்டு நின்றிருந்த பராந்தகனின் இடையில், தமது கச்சையைக் கழற்றி அணிவித்த படைத்தலைவர், தம் வாளுறையையும் அதில்

மாட்டினார். அந்தப் பேழையிலிருந்து வாளை எடுத்து அதில் செருகியவர், "பராந்தகா, இந்த வாள் உன் முன்னோர் பயன்படுத்திய வாள். இந்த வாளைக் கண்டு சாளுக்கியர் நடுங்கினார்கள். அவர்கள் தலைநகரத்தையே எரித்தது இது. கங்கர்கள் சிதறி ஓடினார்கள். கலிங்கர்கள் கதி கலங்கினார்கள். கடாரத்திலிருந்து சீனம் வரை இதன் புகழ் பரவிக் கிடந்தது. வீரத்திலும், சிற்பக் கலையிலும் பெரும் காவியங்களைப் படைத்த மாமன்னனின் வாள் இது. சோழ நாட்டுப் பெண்ணொருத்தியின் மாசற்ற அன்புக்குக் கட்டுப்பட்டு, இங்கேயே தங்கிவிட்டது.

நீ மீண்டும் இதை எடுத்துப் பயன்படுத்த வேண்டும். ராஷ்டிரகூடரைத் தமிழகத்திலிருந்து விரட்டி சோழ நாட்டை சுதந்திர நாடாக்க வேண்டும்" என்றார் உணர்ச்சி பொங்கிய குரலில்.

முதியவரின் குரலும் ஒலித்தது. "ஆம். பராந்தகா, படைத் தலைவர் கூறியவை உண்மையென்பதை நீயே பின்னர் உணருவாய். தேவையான பயிற்சியை அளிக்க நம் படைத்தலைவர் இருக்கிறார். நீ இன்றே புறப்படு. சோழ மண்ணுக்கும், இந்த வண்டாழஞ்சேரிக்கும் பெருமை சேர்த்து வா."

பராந்தகனின் முகம் தெளிவடையத் தொடங்கியது.

இரண்டாவது தினம் உதயத்தில் புறப்பட்ட படைத் தலைவருடனும், சோழ வீரர்களுடனும் பராந்தகனும் புறப்பட்டான். ஒருநாள் முழுதும் தெற்கு நோக்கி நீண்ட அவர்களின் பயணம், வடக்கே திரும்பி எதிரே தெரிந்த கானகத்துக்குள் ஊடுருவியது.

கானகத்தின் நடுவில் பந்தங்கள் பல எரிந்து கொண்டிருப்பதையும், புலிக்கொடி பறந்த கூடாரங்களையும்,



வீரர்கள் பலர் வெகு தீவிரமான பயிற்சிகளில் ஈடுபட்டுக் கொண்டிருப்பதையும் கண்டான் பராந்தகன்.

விரிவில், கதை, சக்கரம், முட்கரம், வாள், கரிகைப் படை, கத்தி, கருக்கடை, வேல், எரிமுத்தலை, கப்பரை, மெய் பயிற்கோல் எனத் தமிழகத்தின் அத்தனை ஆயுதங்களிலும் வீரர்கள் பயிற்சி பெற்றுக் கொண்டிருப்பதைக் கண்ட பராந்தகன் புரவியிலிருந்து குதித்து இறங்கினான்.

**பா**ண்டிய நாட்டின் வடகோடி எல்லைப்புறத்தை அடுத்திருந்தது அந்தப் பயணிகள் சத்திரம். ராஷ்டிரகூடத்திலிருந்தும், மாளவத்திலிருந்தும், இன்னும் வடநாட்டிலிருந்தும் பாண்டிய நாட்டுக்குள் நுழையும் வணிகர்களுக்கெல்லாம் தங்கிச் செல்லுமிடமாகவும், உறையூர், மதுரை என்று பாண்டிய நாட்டின் நகரங்களை அடையும் வரை, உணவு சேமித்துக் கொள்ளவும் பயன்பட்டது அந்தச் சத்திரம். அன்றைய தினம் வழக்கத்துக்கு மாறாக, அந்தச் சத்திரத்தில் வணிகர்களைவிட, துறவிகளின் கூட்டமே அதிகமாகத் தெரிந்தது.

சத்திரத்தின் நடுவிலிருந்த பெரும் கூடத்தில் கூடியிருந்த காவியுடைக் கூட்டம், பார்வைக்குத் துறவிகளாகத் தெரிந்ததேயொழிய, அவர்கள் நடையுடைகளும், முரட்டுத் தனமான தோற்றமும், சிவந்து கிடந்த கண்களும் சந்தேகத்தை எழுப்பினாலும், அவர்களை நெருங்கி விசாரிக்கவோ, சகஜமாகப் பேசவோ, சத்திரத்திலிருந்த மற்ற வணிகர்களுக்குத் துணிவு ஏற்படவில்லை. போதாக் குறைக்கு கூடத்தின் கிழக்கு மூலையில் இருந்த நடராஜர் விக்கிரகத்தின் முன்பாக அமர்ந்த அந்தத் துறவிகளில் ஒருவர் தேவாரப் பாடலொன்றைப் பாட, மற்றவர்கள் கர்ணகடூரமான குரல்களில் பின்தொடர்ந்து பாடவும்

தொடங்கினார்கள். அவர்கள் பாடினார்கள் என்பதைவிட, கூச்சலிட்டார்கள் என்பதே பொருத்தமாயிருக்கும்.

தேவாரப் பாடலையும், தமிழையும் அவர்கள் கடித்துக் குதறிய விதத்தில், அவர்கள் வேற்று மொழி பேசுபவர்கள் என்பது தெளிவாகவே புரிந்தது. இன்னும் சற்று நேரம் அவர்களது இசை தொடர்ந்திருந்தால், கூடத்தின் மூலையில் இடது பாதம் தூக்கி நின்று நடமாடிக் கொண்டிருந்த நடராஜப் பெருமான், சர்வ நிச்சயமாக பாதத்தைக் கீழே இறக்கி, சத்திரத்தை விட்டு ஓடியிருப்பார் என்ற நிலை எட்டிக்கொண்டிருந்தது.

நடராஜப் பெருமானைக் காக்க, சத்திரத்தின் வாயிலில் வேகமாக வந்து நின்றது, ஒரு புரவி. புரவியில் வந்த மற்றொரு துறவியைக் கண்டதும், சங்கீதம் பயின்று கொண்டிருந்தவர்களின் பாடல் சட்டென்று நின்றது. நிம்மதிப் பெருமூச்சு விட்ட நடராஜப் பெருமான், வாயிலில் புரவியில் வந்து அங்கேயே நின்ற துறவியை நன்றியுடன் கவனித்தார்.

அந்தத் துறவியின் முகத்தில் கருணைக்கு பதில் குரூரம் சொட்டிக் கொண்டிருந்தது. பழுப்பு நிற விழிகளில் நரியின் சாகசமும், ஓநாயின் குரூரமும் கலந்து கிடந்தன. அடுத்து அவன் காட்டிய சைகையைத் தொடர்ந்து, உள்ளேயிருந்த துறவிகள் அனைவரும் எழுந்து வெளியே நடந்தார்கள்.

சத்திரத்தை விட்டுத் தள்ளியிருந்த பெரும் மரமொன்றை அடைந்த துறவிகள், அதன் கீழே கும்பலாக அமர்ந்தார்கள். வந்த துறவி தன் குரூரம் சொட்டிய விழிகளால் அனைவரையும் ஒருமுறை அளவெடுத்தான். அவன் முக வாவண்யத்தை இன்னும் அதிகப்படுத்திய நீண்ட மீசை யையும், நெற்றிக்குக் குறுக்கே கிடந்த தழும்பையும் அவன் விரல்கள் ஒருமுறை தடவிக் கொண்டன. அவனது கனத்த



குரலும் அடுத்துப் பெரிதாக ஒலித்தது. அந்தத் துறவிகள் யாரென்பதும் உடனே புரிந்தது.

"வீரர்களே, கவனமாகக் கேளுங்கள். நாம் இன்றே, இப்போதே புறப்பட உத்தரவு வந்துவிட்டது. நாம் முதலில் பாண்டியர் படை திரட்டுவதைத் தடை செய்ய வேண்டும். பலவீனப்படுத்த வேண்டும்."

"பலவீனப்படுத்துவதா? எப்படித் தலைவரே?" – வெகு சிரத்தையுடன் சந்தேகம் கேட்கும் வேத பாடம் பயிலும் மாணவனாகக் கேட்டான் ஒரு வீரன்.

"பலவீனப்படுத்துவது என்றால்... முக்கியப் படைத் தலைவர்களை அகற்றிவிடுவது, தீர்த்துக் கட்டுவது, படை களுக்காகச் சேமித்து வைக்கப்பட்டிருக்கும் தானியக் கிடங்கு களையும், ஆயுத சாலைகளையும் அழிப்பது, புரிகிறதா?"

"புரிகிறது தலைவரே."

"இன்னும் கேளுங்கள். நாம் செல்வது நேரிடையான போர் செய்வதற்கு அல்ல. எந்த வகையிலும் நம் நோக்கம் நிறைவேற வேண்டும். அவ்வளவுதான். புறப்படுங்கள்."

துறவி வேடமணிந்த அந்தக் கூட்டம் அப்பொழுதே சத்திரத்தின் பின்புறம் கட்டியிருந்த புரவிகளை அவிழ்த்துக் கொண்டு, தெற்கு நோக்கிக் கிளம்பியது.

ஏறக்குறைய கதிரவன் மேற்கில் சரிய ஒரு நாழிகை இருக்கும்வரை பயணித்தவர்கள், எதிர்ப்பட்ட கானகத்தினுள் நுழைந்து ஊடுருவினார்கள். வரவர அடர்ந்துகொண்டே வந்த அந்தக் கானகத்தின் ஒரு பகுதிக்கு வந்ததும், அனைவரையும் நிற்க உத்தரவிட்டான் அந்தத் துறவி.

மிக நெருக்கமாக மரங்கள் அடர்ந்து கிடந்த அந்தக் கானகத்தில், மாலைப் பொழுது நெருங்கிக் கொண்டிருந்த தால் எழுந்த பறவைகளின் கூச்சல் உச்சத்தை எட்டிக்

கொண்டிருந்தது. பட்சிகளால் அவ்வப்போது கிளைகளி லிருந்து விரட்டப்பட்ட குரங்குகள் கிறீச்சிட்டு, தம் குரல் வளம் பறவைகளுக்குச் சற்றும் சளைத்ததல்ல என்று காட்டிக் கொண்டிருந்தன.

"தலைவரே, நாம் எங்கிருக்கிறோம்?" என்றான் ஒரு வீரன்.

"நாம் இருப்பது உறையூரின் வடக்குப் பகுதி. காவிரி யின் வடகரையிலிருக்கும் கானகம் இது. இங்குதான் நம் முதல் பணி துவங்குகிறது."

"முதல் பணியா?"

"ஆம். பாண்டியர் படையிலிருந்து மிக முக்கியமாக அகற்றப்பட வேண்டியவர் உறையூரில்தான் இருக்கிறார். இவரைப் பொறுத்தவரை, அகற்றுவதென்பது செயலிழக்கச் செய்வதோ, கடத்தி வருவதோ அல்ல" என்றவன், கழுத்துக்குக் குறுக்கே தன் கையை வைத்து இழுத்துக் காட்டி, "புரிந்ததா?" என்றான்.

"உறையூரின் கோட்டை மிகப் பலமானதென்று கேள்வி. நாம் எப்படி உள்ளே புக முடியும் தலைவரே?"

"நாம் கோட்டைக்குள் புக வேண்டிய அவசியமில்லை. அந்த மனிதர் தினமும் வீரர்களுக்குப் பயிற்சியளித்து முடித்தபின், அந்தி சாயும் வேளையில் காவிரித் துறைக்கு வந்து நீராடிச் செல்வது வழக்கம். நாம் நிற்குமிடத்திலிருந்து நேர் தெற்கே, அரைக் காத தூரத்தில் காவிரித் துறை இருக்கிறது."

"அவருடன் காவலர்கள்– வீரர்கள்...?"

"எவரும் உடன் வருவதில்லை. நமது பணியை அங்கேயே முடித்துக் கொள்ளலாம். ஆனால்..."

"ஆனால் என்ன தலைவரே?"



"எச்சரிக்கையாக அணுக வேண்டும் அவரை. குறைந்தது இருபதின்மராவது என்னுடன் வரச் சித்தமாக இருங்கள்."– தலைவன் குரலில் எச்சரிக்கை பலமாக தொனித்தது.

"என்ன, இருபது வீரர்களாவது தேவையா? அதுவும் தனித்து வரும் ஒருவரைத் தீர்க்க?" வீரன் குரலில் அவநம்பிக்கை ஒலித்தது.

"ஆம்."

"யார் அவர் தலைவரே?" வீரர்கள் குரலில் சந்தேகம் ஒலித்தது.

"பாண்டியரின் பிரதான படைத்தலைவர், அநிருத்தர்" என்றான் வீரர் தலைவன், தன் நெற்றியின் குறுக்கே ஓடிய தழும்பைத் தடவியபடியே.





(5)

## வரகுணன் திட்டம்

**சோ**ழர்களின் தலைநகராக விளங்கியதும், பெண்ணாகடத்துப் போருக்குப் பின் பாண்டியர் வசமாகி விட்டதுமான உறையூரின் கோட்டை மதில்கள் உயர்ந்து வெகு தூரம் வரை நீண்டு கிடந்தது. மேற்புறத்தில் சதா உலவிய வீரரும், ஆங்காங்கே அம்புகளையும், வேல்களையும் எறியும் மாடங்களும், ஆழமான அகழியும், அந்தக் கோட்டையை நெருங்குவதோ, கைப்பற்றுவதோ அத்தனை எளிதல்ல என்பதை நிரூபித்துக் கொண்டிருந்தன.

கோட்டையின் தென்புறத்து வாயிலை அடுத்து, உட்புறம் விரிந்து கிடந்தது ஒரு திடல். கதிரவன் மறையும் அந்த நேரத்தில் ஊதப்பட்ட கொம்புகளை அடுத்து, திடலெங்கும் நிரம்பிக்கிடந்த வீரர்கள் வியர்க்க விறுவிறுக்கப் பயிற்சிகளை முடித்து நின்றிருந்தனர். முகப்பில் நின்று வீரர்களைக் கவனித்துக் கொண்



டிருந்தவரின் உடலும் வியர்வையில் நனைந்து கிடந்தது. பார்வைக்கு மெல்லியதாகத் தெரிந்த அவரது தேகம், அவரது கரத்தில் பிடித்திருந்த சட்டியையவிட நேராக அத்தனை உறுதியுடன் நிமிர்ந்து நின்றிருந்தது. மார்பின் குறுக்கே ஓடிய முப்புரிநூல் அவர் அந்தணரென்பதைத் தெரிவித்தது.

மறுதினம் புரவியேற்றமும், போர்க் களிறுகளின் பயிற்சியும் இருக்குமென அறிவித்தவர், வீரர்களைக் கலைந்து செல்ல உத்தரவிட்டுத் திரும்பி, வீரன் ஒருவன் கொண்டு வந்து நிறுத்திய புரவியில் தாவியேறினார். வடக்கு வாயிற் கதவுகள் அவரைக் கண்டதும் திறந்தன. பழகிய பாதையில் நிதானமாக நடந்த புரவி, காவிரிக் கரையை அடைந்து நின்றது. புரவியை விட்டு இறங்கியவர் நீரிலிறங்கி, ஒருமுறை தலையை நீரில் முழுகி எழுந்து, தம் நீண்ட கரங்களை வீசிப்போட்டு, மறுகரையை நோக்கி நீந்தினார். மறுகரையை அடைந்தவர், காவிரியின் மணலை எடுத்துக் கரங்களிலும், உடலிலும் தேய்த்துக் கொண்டு மீண்டும் காவிரியில் பாய்ந்தார். கரையை நெருங்கி இடுப்பளவு நீரில் நின்று, சந்தியா கால ஜபத்தையும் முடித்துக் கரையேறினார். புரவி நெருங்கி வந்தது. பக்கவாட்டிலிருந்த துணியை எடுத்துத் தலையைத் துவட்டி உடலையும் துடைத்தவர், சட்டென்று நின்றார். அவர் செவிகள் எதையோ உற்றுக் கேட்டன. சட்டெனத் திரும்பியவரின் விழிகளில், விபரீத ஒளியொன்று பளிச்சிட்டது.

இருள் கவியத் தொடங்கிய அந்த முன்னிரவில், காவிரிக் கரையை அடுத்திருந்த மரக்கூட்டங்களிடையே திடீரென பந்தமொன்று எரிந்தது. கையில் பந்தத்தை ஏந்தியபடி புரவியிலமர்ந்து அவர் பார்வைக்கு நேரே வந்தான் ஒருவன். நெற்றியிலிருந்த தழும்பு, பந்தத்தின்

ஒளியில் இன்னும் தெளிவாகத் தெரிந்தது. தொடர்ந்து மரங்களின் மறைவுகளிலிருந்து வாட்களை ஏந்திய பலர் அந்த மனிதரை நோக்கி முன்னேறினர்.

பளபளத்துத் தெரிந்த வாட்களையோ, தம்மைச் சூழ்ந்து கொள்ள முற்படுபவர்களையோ, அந்த மனிதர் சட்டை செய்ததாகத் தெரியவில்லை. புரவியிலிருந்தவனை உற்று நோக்கியவரின் குரல் வெகு நிதானத்துடன் ஒலித்தது. "ராகுலா, என் எச்சரிக்கையையும் மீறி, மீண்டும் தமிழ் மண்ணில் அடியெடுத்து வைத்திருக்கிறாய். உயிர்மீது ஆசையிருக்கும் பட்சத்தில் இப்படியே திரும்பிச் சென்றுவிடு. வீணாக இந்த வீரர்களை பலியாக்காதே. கூடியவரை விரைவில் நேரிடையான போரில் சந்திப்போம். சென்றுவிடு."

அவரை நெருங்கியும் சற்றே தயங்கிய வீரர்களை நோக்கி ராகுலன் இரைந்தான், "ஏன் தயங்குகிறீர்கள்? அவரைக் கொன்றுவிடுங்கள்" என்று.

அவன் வார்த்தைகள் முடியுமுன்பு அவர் நெருங்கிய வீரர்களிடையே பாய்ந்துவிட்டிருந்தார். முதலில் நெருங்கிய இரு வீரர்களையும் அவரது கரங்கள் தாக்கிச் சுழற்றி இருவரையும் பக்கத்துக்கொருவராய் எறிந்தன. அந்த வீரர்களின் வாட்கள் இரண்டும் அவரது கரங்களுக்கு மாறிக் கரகரவெனச் சுழல ஆரம்பித்தன. ராஷ்டிரகூட வீரர்கள் அதுவரை வாழ்நாளில் கண்டறியாத அதீத வேகத்தில் சுழன்ற அந்த வாட்கள், இரண்டொரு கணங்களிலேயே ராஷ்டிரகூடர்களை மண்ணில் சரிய வைத்துவிட, நிதானமாக அடி வைத்து முன்னேறிக் கொண்டிருந்தார் அவர். புரவியிலமர்ந்து பார்த்துக்கொண்டிருந்த ராகுலனின் முகத்தில் ஆத்திரம் பொங்கியது. பந்தத்தை இடது கரத்துக்கு மாற்றியவன், புரவியின் பக்கவாட்டில் தொங்கிய பெரும்



ஈட்டி ஒன்றை எடுத்து, அந்த மனிதரை நோக்கிக் கன வேகத்தில் எறிந்தான். வாட்போரிலும், குறி தவறாது ஈட்டியெறிவதிலும் இணையற்றவனென்று ராஷ்டிரகூடத்தில் பெயரெடுத்திருந்த ராகுலனின் அந்த ஈட்டி அன்றும் குறி தவறாமல் பாயத்தான் செய்தது.

**பி**றப்பும் இறப்பும் எக்காலத்திலும் மனிதனின் கரங்களில் இருந்ததில்லை. ஆண்டவன் நிர்ணயித்திருக்கும் நேரம் வந்தாலொழிய, பிறப்பும், இறப்பும் நிகழ்வதுமில்லை. ராகுலனுக்கு அந்த உண்மை அந்தக் காவிரிக் கரையில், அன்று தெளிவாகவே புரிந்தது.

ராகுலனும், ராஷ்டிரகூட வீரரும், ஏன், அசுர வேகத்தில் வாட்களைச் சுழற்றிக் கொண்டிருந்த பாண்டியர் படைத் தலைவருங்கூட எதிர்பாராத நிகழ்ச்சியொன்று அடுத்து நிகழ்ந்தது.

ஈட்டியின் பாதையை மறித்து, பெரும் புரவியொன்று காற்று வேகத்தில் வந்தது. உயர்த்திய வாளுடன் புரவியிலமர்ந்து வந்த வாலிபன், அந்த ஈட்டியைப் பாதியில் மறித்து இரண்டாக வெட்டியெறிந்தான். அடுத்து அந்தப் புரவி அரைவட்டமடித்து ராகுலனை நோக்கிப் பாய்ந்தது. ராகுலன் பிரமித்தான்.

வந்தவனது நெற்றியில் சோழ நாட்டவன் என்று எழுதி ஒட்டியிருந்தது. அவன் கரத்திலிருந்த வாளைக் கண்ட ராகுலனின் தலை சுழலத் தொடங்கியது.

"இந்த வாள்... இந்தச் சோழநாட்டவன் கரத்தில்... எப்படி வந்திருக்கக் கூடும்?" அந்த வாள் அதற்கு மேல் ராகுலனைச் சிந்திக்கவிடாமல், அவனை நெருங்கி தாக்கத் தொடங்கியது. ராகுலனது திகைப்பை அந்த வாளும், அதைத் தாங்கிய வாலிபனின் வாள் வீச்சும் அதிகரித்ததென்றால், அதை

இன்னும் உயர்த்த, இன்னுமொரு புரவியும் அங்கே நுழைந்தது. அதில் அமர்ந்து வந்தவரைக் கண்டதும் ராகுலனின் முகம் பேயறைந்தது போலாயிற்று. சோழ நாடு முழுவதும் ராஷ்டிரகூட வீரர்கள் சல்லடை போட்டுச் சலித்துக் கொண்டிருக்கும் சோழர் படைத்தலைவர் விக்கிரம வரையர் அந்த நேரத்தில், அங்கு, அதுவும் தன் திட்டங்களில் முதலாவதாக, பாண்டியர் படைத்தலைவரைத் தீர்க்க யத்தனிக்கும் நேரத்தில் வரக்கூடுமென்று கனவிலும் நினைத்திராதவனுக்கு, அச்சம் பிடரியைப் பிடித்துத் தள்ளியது. இரு படைத்தலைவர்களும் ஒன்று சேர்வதும், போதாக்குறைக்கு புதிதாக வந்த வாலிபனின் அந்த வாளும், அதன் வீச்சும் இனித் தானும் தன் வீரர்களும் உயிர் பிழைத்துத் தப்பிப்பதே பெரும் காரியம் என்பது திட்டவட்டமாகப் புரிந்தது அவனுக்கு.

தன் வீரர்களைப் பின்வாங்கித் தப்ப உத்தரவிட்டவன், அந்த வாலிபனை பலமாகத் தாக்கிவிட்டுப் புரவியைத் திருப்ப முயன்றான். அடுத்தகணம் ராகுலனின் வாள் அவன் கரத்திலிருந்து பிடுங்கியெறியப்பட்டு, காவிரியின் வெள்ளத்தை நோக்கிப் பறந்தது. புரவியின் முதுகில் தழைந்து அதை மரங்களினிடையே இருளில் பாயவிட்ட ராகுலன், தப்பியோடி மறைந்தான்.

**பா**ண்டியரின் பழம்பெரும் தலைநகரான மதுரையம் பதியின் அரண்மனை உச்சியில் பறந்த மீன்கொடி, அந்த முன்னிரவில் வீசிய காற்றில் படபடத்துக் கொண்டிருந்தது. அரண்மனை வாயிலிலும் உட்புறத்திலும் கூடியிருந்த வீரர்களுக்கும், பிரதானிகளுக்கும், உபதலைவர்களுக்கும் படபடப்பு கொடியைவிட சற்று அதிகமாகவே இருந்தது. அதிலும் மதுரையின் கோட்டைத் தலைவனும், புரவிப் படைத்தலைவனுமான சொக்கத்தேவனின் இறுக்கிப் பிடித்த



முஷ்டியும், நட்நட்டென்று எடுத்து வைத்த காலடியும், அவன் கொதிப்பு உச்சத்திலிருப்பதைப் புலப்படுத்தின.

அரை நாழிகை நேரத்தில் மன்னனின் வருகை அறிவிக்கப்பட்டது.

பல்லவ நந்திவர்மனை வெற்றி கொண்டதால், ஜடில பராந்தகனான நெடுஞ்சடையன் என்று மெய்க்கீர்த்திகள் எழுதப்பட்டவனும், குரு சரிதை கொண்டாடிய பரம வைணவன் என்பதால் சீவரன் என்ற விருதுப் பெயருடையவனும், வரகுண மகாராஜன் என்று போற்றப்பட்டவனுமான பாண்டிய வரகுணன், சபையில் பிரவேசித்தான். அப்போதே உறங்கச் சென்ற மன்னன் உடனே வந்திருக்கிறான் என்பதை, சாதாரண நூலாடையும், சற்றே கலைந்த குழல்களும் தெரிவித்தாலும், மன்னனின் சித்தம் முழு விழிப்பி லிருப்பதை தீர்க்கமான விழிகள் புலப்படுத்தின.

மன்னன் இருக்கையில் அமரும் வரையில் கவலை தோய்ந்த முகத்துடன் நின்றிருந்த பேரமைச்சர், "மன்னவா, தங்களை இந்த நேரத்தில் எழுப்பியதற்கு மன்னிக்க வேண்டும். வந்திருக்கும் செய்திகள் அத்தகையவை" என்றார். தொடர்ந்து,

"மன்னவா, கொற்கையிலிருந்து இன்று முன்னிரவில் வந்து சேர்ந்த முத்துக்களும் முழுவதுமாக வரவில்லை. வழக்கமான காவலுடன், எங்கும் நிற்காமல்தான் வந்திருக்கின்றன. முத்திரைகளுக்கும் சேதமேதும் இல்லை. ஆனால் முத்திரை ஓலையில் குறிப்பிட்டிருப்பதில் பாதியளவே இருக்கின்றன. எப்படி மாயமாகின்றன என்பதும் புரியவில்லை. இது இரண்டாவது முறை மன்னா," என்ற அமைச்சரின் குரலில் குழப்பம் பலமாக ஒலித்தது.

மன்னனின் முகத்தில் முறுவல் நெளிந்தது. அவன் விழிகள் அமைச்சரின் அருகில் சொக்கத்தேவன் அமைதி யின்றித் தவிப்புடன் நிற்பதைக் கவனித்தன.

"சொக்கத்தேவா, நீயும் ஏதோ கூற விரும்புவதாகத் தெரிகிறது" என்றான் மன்னன்.

"ஆம் பிரபு, பொன்னமராவதியிலிருந்தும், கோட்டாற்றுக் கரையிலிருந்தும் செய்திகள் வந்திருக்கின்றன" என்றான் படபடப்புடன்.

"என்ன செய்திகள்?"

"நம் வீரர்களுக்காக சேமித்த நெற்கிடங்குகள் தீக்கிரை யாக்கப்பட்டிருக்கின்றன. கோட்டாற்றுக் கரை ஆயுத சாலை தாக்கப்பட்டிருக்கிறது. தாக்கியவர் யாரென்பதும் அடையாளம் புலப்படவில்லை."

"மன்னவா."– அமைச்சரின் குரல் மீண்டும் ஒலித்தது.

"சொல்லுங்கள் அமைச்சரே."

"உறையூரில் நம் படைத்தலைவரும் இரு தினங்களுக்கு முன் தாக்கப்பட்டிருக்கிறார். ஆனால் செய்தியைத் தாமதமாகவே அனுப்பியிருக்கிறார். ஓலை கொண்டு வந்த வீரனும் விவரம் கூற மறுக்கிறான். காரணம் புரிய வில்லை."

"ஓலை கொண்டு வந்த வீரனை அழைத்து வாருங்கள்" என்ற மன்னன் முகத்தில் சிந்தனை தெரிந்தது.

சற்று நேரம் கழித்து உள்ளே நுழைந்து வணங்கிய வீரன் "மன்னவா, இந்த ஓலையை அவையில் கொடுக்கும்படியும், தங்களிடமும் இளவரசியாரிடமும் தனித்து விபரங்களைக் கூறும்படியும் படைத்தலைவர் உத்தரவு" என்றபடி, ஓலை யொன்றை எடுத்து பேரமைச்சரிடம் நீட்டினான்.



பேரமைச்சரிடமிருந்து ஓலையைப் பெற்று, பிரித்து, இரண்டு கணங்களே அதன்மீது விழிகளை ஓட்டிய மன்னன், "வீரனே, பொதுவாக என்ன நடந்ததென்பதை அவையில் கூறலாம்" என்றான் உத்தரவிடும் தொனியில்.

சற்றே தயங்கிய வீரன், "மன்னவா, நம் படைத்தலைவர் மாலையில் பயிற்சிகளை முடித்து, வழக்கமான காவிரித் துறைக்குச் சென்று நீராடித் திரும்பும்போது ராஷ்டிரகூடர் இருபதின்மரால் சூழ்ந்து தாக்கப்பட்டார். நம் பழைய எதிரி ராகுலன் தலைமையில் அவர்கள் வந்திருப்பதாகத் தெரிகிறது" என்றான்.

வீரன், ராகுலன் பெயரை உச்சரித்ததுமே, அவையில் பலவித ஆவேச ஒலிகள் எழுந்தன. "ஆகா, ராகுலனா– மறுபடியுமா?... ஓகோ... இப்போதே புறப்படலாம்– உறையூர் வீரர்கள் விட்டார்களா?" படைப்பிரிவுகளின் ஆவேசக் குரல்கள் பலவிதமாக ஒலிக்க, சொக்கத்தேவனின் வாள் உறையிலிருந்து பாதிக்குமேல் வெளிவந்திருந்தது.

மன்னனின் கரம் உயர்ந்து அனைவரையும் தேக்கியது. கூர்விழிகள் அவையை ஒருமுறை அளந்தன. அந்த வீரனை ஒருமுறை உற்று நோக்கியவன், "வீரனே, நீ உள்ளே சென்று இளவரசியாரைக் கண்டு, விபரங்களைக் கூறிவிட்டு அங்கேயே இரு. நான் பிறகு வருகிறேன்" என்றான்.

வீரன் உள்ளே சென்றதும் அவையை நோக்கியவன், "அமைச்சரே, உபதலைவர்களே, நடந்திருப்பவை அனைத்தும் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை. எவரிடமும் இதுபற்றிப் பேச வேண்டாம். அமைச்சரே, நான் கூறும் வரை, காணாமற் போன முத்துக்களைப் பற்றி எந்த விசாரணையும் வேண்டாம். சொக்கத்தேவா, நம் படைத்தலைவருக்கு ஓலையனுப்பி, பயிற்சி முடித்த வீரர்களை உடனே அனுப்பி வைக்கச் சொல். எல்லாக் கோட்டைத் தலைவர்களுக்கும்

எச்சரிக்கை ஓலை அனுப்பிவிடு. அன்னியர் எவர் இருந்தாலும் தீர விசாரிக்கச் சொல்" என்றான்.

மன்னன் முகத்தில் விரிந்த சிந்தனையும், நிதானமாக வெளிவந்த திடமான உத்தரவுகளும், நடந்திருக்கும் புதிர்களுக்கு அவன் விடை கண்டு விட்டானென்பதையும், அதைத் தீர்க்க பலமான திட்டம் வகுத்து விட்டானென்பதையும் புலப்படுத்தின.

**அ**வையை முடித்து அரண்மனைக்குள் திரும்பிய மன்னன் அந்தப்புர வாயிலை அடைந்ததும் சற்று நிதானித்தான்.

உறையூரிலிருந்து வந்த வீரன், இளவரசியிடம் நடந்தவற்றை விவரித்துக் கொண்டிருந்தான். இடையே வீரன் உச்சரித்த பெயர்களைக் கேட்ட மன்னன் முகத்தில் பெரும் வியப்பு பரவியது. தொடர்ந்து அவன் முகத்தில் கனவுச் சாயை மெல்லப் படர்ந்து முழுவதுமாக ஆக்கிரமித்தது.





6

## முத்துக் கனவு

**வா**ழ்க்கைப் பயணத்தில் மனிதன் வெகு தூரம் வந்து விட்ட போதும், முதுமையை அடைந்துவிட்ட போதும், பால்யப் பருவத்து நினைவுகள் தரும் இன்பமே அலாதியானதுதான். அதிலும், அப்போது அன்னியோன்னியமாகப் பழகியவர்களின் அண்மை மீண்டும் கிட்டும்போது, பசுமையான நினைவுகளை சித்தத்தில் கொண்டு வந்து கனவுலகில் மிதக்கச் செய்துவிடும். அனுபவித்தவர்களுக்கே அந்த அலாதியான அன்பின் தன்மை புரியும்.

உறையூரிலிருந்து வந்த வீரன் விக்கிரமவரையனின் பெயரை உச்சரித்ததும், அப்படியொரு கனவுலகிற்குச் சென்றான் பாண்டிய வரகுணன். போர்ப் பயிற்சியைத் தன்னோடு ஒன்றாகப் பயின்றவனும், ராஷ்டிரகூடருடனும், களப்பிரருடனுமான போர்களில் தோளோடு தோள் நின்று வாள் வீசியவனுமான விக்கிரமவரையனின் வருகை

தெரிந்ததும், பாண்டிய மன்னன் முகத்தில் அலாதியான சந்துஷ்டி நிலவியது.

அந்தப்புரத்தின் முன்னறையில் நுழைந்ததும் அவனது ஆனந்தம் இன்னும் அதிகரித்தது. உறையூர் வீரனுடன் பேசிக்கொண்டிருந்த இளவரசி குமுதவல்லியின் தோற்றம், எந்தச் சங்கடமான சூழ்நிலையையும் இனிமையானதாக மாற்றக் கூடியதாகத்தான் இருந்தது. மகள் பிறந்தவுடன் அந்த அழகிய முகத்தைக் கண்டு மன்னன் வைத்த பெயர்தான் அது. அகன்று விரிந்த அந்த விழிகள், குமுத மலருடன் சேர்ந்து வந்துவிட்ட இரு கயல்களாகவே தெரிந்தன. செண்பக மொக்குப் போன்ற நீண்ட நாசியும், மாதுளையின் உட்புறத்து மணிகள் போல சிவந்து பளபளத்த இதழ்களும், அவள் பெயருக்கான விளக்கத்தை அளித்துக் கொண்டிருந்தன. சோழநாட்டு அறிவும், பாண்டியரின் அழகும் கலந்த அவள் உருவம், மன்னன் முகத்தில் பெரும் சாந்தியையும் நிலவவிட்டது.

"குமுதவல்லி, நம் படைத்தலைவர் என்ன கூறி அனுப்பியிருக்கிறார்?" என்றபடியே உள்ளே நுழைந்தான் மன்னன்.

மன்னனைக் கண்டதும் வணங்கிய வீரனை நோக்கியவன், நேரடியாக விஷயத்துக்கு வந்தான்.

"வீரனே, நம் படைத்தலைவரின் உதவிக்கு வந்தவர்கள் யார்? ஓலையில் விவரமேதும் கூறப்படவில்லையே."

"பிரபு, ஒருவர் சோழர் படைத்தலைவர் விக்கிரம வரையர். இன்னொருவர் பராந்தகர், சோழ வண்டாழஞ்சேரியில் ஒரு விவசாயியின் மகன் என்கிறார்கள். ஆனால் அவர் தோரணை வெறும் விவசாயியாகவோ, சாதாரண வீரராகவோ தெரியவில்லை. அவரது வாள் வீச்சில்



ராஷ்டிரகூட ராகுலனின் வாள் பறந்துவிட்டதாக, நம் படைத்தலைவரே சிலாகித்துச் சொன்னார்."

குமுதவல்லியின் விழிகள் இன்னும் அகன்றன. "யார், காவிரிக் கரையில் ராஷ்டிரகூடரிடம் சண்டையிட்டு சோழர் மாணிக்கத்தை மீட்டதாகக் கூறப்பட்டதே. அவரா?" என்றாள்.

"ஆம் இளவரசி."

"ஆனால்... இந்த ராகுலன்...?" என்றவள், மன்னனை நோக்கினாள் சந்தேகத்துடன்.

"ஆம் மகளே, கொற்கை முத்துக் களவை நிகழ்த்துவதாக நீ சந்தேகப்பட்ட அதே ராகுலன்தான். ஆக இவன் அங்கு களவில் ஈடுபடவில்லையென்பது உறுதியாகிறது" என்ற மன்னன், வீரனை நோக்கி, "சரி, வீரனே, சோழர் படைத் தலைவரும் அந்தப் பராந்தகனும் எங்கிருக்கிறார்கள்?" என்றான்.

"அவர்களை உறையூர் அரண்மனையில் தங்க வைத்திருக்கிறார் நம் படைத்தலைவர். தங்களை நேரில் காணவும், ஏதோ உதவி கோரவும் வந்ததாகச் சொன்னார். தங்களின் அனுமதி தேவையென்றும் கூறினார்."

"அவர்களை எச்சரிக்கையுடன் அழைத்து வரச் சொன்னதாகத் தெரிவித்துவிடு" என்ற மன்னன், வீரனுக்கு விடை கொடுத்தான்.

குமுதவல்லியின் முகத்தில் சிந்தனை தெரிந்தது. "தந்தையே, நீங்கள் கூறியபடி அனைத்தும் ஒன்றோடொன்று தொடர்பு கொண்டவை என்றே தோன்றுகிறது."

"ஆம் மகளே. இதில் ராஷ்டிரகூடருடன், தெற்கில் மலைநாட்டுச் சிற்றரசும் கலந்திருக்க வேண்டும். மொத்தமாக அவர்களது நோக்கம், நாம் படை திரட்டுவதைத் தடை

செய்வது. படைபலத்தை உயர்த்த பொருள் வேண்டும். நமக்குச் செல்வம் முத்துக்கள். அவற்றை அபகரிக்கவும், படைத்தலைவர்களை நீக்கவும், உணவுக் கிடங்குகளை அழிக்கவும் திட்டமிட்டிருக்கிறார்கள்."

"ஆனால் தந்தையே, பல்லவச் சக்கரவர்த்தி நந்திவர்மரா இப்படி?..."

"இல்லை மகளே. நந்திவர்மன் சுத்த வீரன். இவற்றை நடத்துபவர்கள் ராஷ்டிரகூடர். அவர்களைத் தடுக்க நந்திவர்மனுக்குச் சக்தியில்லை. பெண்ணாகடப் போரில் அழிந்தவை சோழர் படைகள் மட்டுமல்ல, பல்லவ வீரரும் முக்காலுக்கும் மேல் மடிந்து போனார்கள். பெரும் போர் அது. காஞ்சியின் காவலுக்கே இப்போது ராஷ்டிரகூடரை நம்பியிருப்பதாகக் கேள்வி."

சற்று மௌனமாக நின்ற குமுதவல்லி கூறினாள். "தந்தையே, கொற்கையின் முத்துக்களவைக் கண்டறிய நாளையே நான் புறப்படுகிறேன்."

மன்னன் பலமாக மறுத்தான். "வேண்டாம் மகளே. ராஷ்டிரகூடரின் வலிமையான கரமொன்று இதை இயக்குவதாகத் தெரிகிறது. அபாயமும், சூழ்ச்சியும் நிரம்பிய சதி இது. என்னதான் அறிவும், திறமையும் இருந்தாலும், நீ பெண். இதில் சென்று சிக்க வேண்டாம்."

குமுதவல்லி நேரிடையாக பதிலளிக்கவில்லை. "தந்தையே, பல்லவ மன்னனைவிட இதில் நேரிடையாக சம்பந்தப்பட்டிருப்பது ராஷ்டிரகூடர்தானே?"

"ஆம். உண்மை அதுதான்."

"பல்லவ மகாராணி ரேவாதேவியின் அனுமதியின்றி, ராஷ்டிரகூடர் எந்த அசைவும் மேற்கொள்வதில்லை என்பது உலகறிந்தது. எனவே சதியை மறைவிலிருந்து இயக்குபவள் அவளாகத்தான் இருக்க வேண்டும்."







"அப்படித்தானிருக்க வேண்டும்."

"சக்கரவர்த்தினியானாலும் அவளும் பெண்தானே? பாண்டிய நாட்டைக் கவிழ்க்க ஒரு பெண் சதியிலிறங்கக் கூடுமானால், அதை முறியடிக்க ஒரு பெண்ணால் இயலாதா, ராஷ்டிரகூடருக்கு பாண்டியர்கள் எந்தவிதத்தில் தாழ்ந்தவர்கள்? அதிலும் என் அன்னை சோழ இளவரசி. செங்கட்சோழரின் மகள். சோழ ரத்தமும் என் உடலில் ஓடுகிறது. சோழரும், பாண்டியரும் எந்தவிதத்தில் ராஷ்டிர கூடருக்குக் குறைந்தவர்கள். அறிவிலா, திறமையிலா, வீரத்திலா? கூறுங்கள் தந்தையே."– குமுதவல்லியின் குரலில் உஷ்ணம் ஏறிக் கிடந்தது.

பாண்டிய வரகுணன் பலமாக நகைத்தான். "சரி குமுதவல்லி, இனி நான் மறுப்பேதும் கூறவில்லை. ஆனால் உதவிக்கு நம் முகுந்தன் வந்ததும், உடன் அழைத்துச் செல்" என்றான்.

இளவரசியின் புருவ விற்கள் கூடின. "முகுந்தனா, அவன் அதிகப்பிரசங்கி ஆயிற்றே தந்தையே."

வாசலிலிருந்து புதுக்குரலொன்று ஒலித்தது. "ஆம் பிரபு. முகுந்தன் கொஞ்சம் அதிகப்பிரசங்கிதான்" என்று.

திரும்பிய இருவருக்கும் தலைவணங்கி நின்றிருந்தான், பாண்டியர் ஒற்றர் படைத்தலைவன் முகுந்தன். பார்வைக்கு அதீதமான பணிவைக் காட்டினாலும், விஷமம் சொட்டும் விழிகளும், சதா இதழ்களில் தொக்கி நிற்கும் முறுவலும், அவன் பணிவு வெறும் வேஷமென்பதை அறிவித்தன. அடுத்து அந்த அதிகப் பிரசங்கி தன் சுய ரூபத்தையும் காட்டினான்.

"மன்னவா, நான் நாளை கொற்கைக்குச் செல்கிறேன். இளவரசியாரும் அங்கு செல்ல விரும்புவதாகத் தெரிகிறது. போனால் போகட்டும். ஆசைப்பட்டுக் கேட்கிறார். வேண்டு

மானால் என்னுடன் வரட்டும். அனுமதி கொடுத்து விடுங்கள்'' என்றான் அவன்.

இளவரசியின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிப்பதைக் கவனியாத முகுந்தன், மன்னனை நெருங்கி ஓலைக் குழலொன்றை எடுத்து நீட்டினான்.

ஓலை மீதிருந்த முத்திரையை வியப்புடன் கவனித்த மன்னன், அதைப் பிரித்துப் படித்ததும், முகத்தில் பிரமிப்பைக் காட்டினான். அவன் விழிகள் முகுந்தனைச் சந்தேகத்துடன் ஏறிட்டன.

முகுந்தனின் பதில் திடமாக வந்தது. "ஆம் மன்னவா, இந்த ஓலை அவருடையதுதான். நான் நேரிடையாக இதைப் பெற்றேன். ராஷ்டிரகூட அரசையும், தமிழகத்தின் தலைவிதியையும்கூட இதைக் கொண்டு மாற்றியமைக்கலாம். ராஷ்டிர கூடரின் அரியணைக்காக எழுந்துள்ள இந்தப் போட்டியை நமக்குச் சாதகமாக்கிக் கொள்ளலாம்.''

அந்த ஓலை எவரிடமிருந்து வந்தது என்பதையோ, அதிலுள்ள செய்தி என்னவென்பதையோ அறிந்து கொள்ள ஆர்வம் காட்டாத இளவரசி, "நீங்கள் அதைப் பிறகு முடிவு செய்து கொள்ளுங்கள். நான் நாளை கொற்கைக்குப் புறப்படுகிறேன்'' என்றபடி திரும்பி அந்தப்புரத்தினுள் நடந்தாள்.

**பா**ண்டிய நாட்டின் இரண்டாவது தலைநகரான கொற்கையின் துறைமுகத்தை அடுத்து, அதன் புகழ் பெற்ற முத்துக்களை நாடி வந்த பல நாட்டுக் கலங்கள், கடலில் ஆடி நின்றன. கலங்களிலிருந்து இறங்கிய யவன, அராபிய, சீன, கடார வணிகர் பேசிய கதம்ப ஒலிகளாலும், அவர்களைச் சுங்கச் சாவடிக்கு வழி நடத்திய காவலர்களின் கூச்சலாலும், அந்தப் பகுதி நிறைந்து கிடந்தது. சுங்கச்



சாவடிக்கு வெளியே கடற்கரையை ஒட்டி நீண்ட விடுதி களுக்கு, வணிகர்களை அழைத்துச் செல்ல தமிழகத்து பரதவர் பேசிய பல மொழிகளும் காற்றில் கலந்து ஒலித்தன. சுங்கச் சாவடிக்குத் தெற்கே கடற்கரையை ஒட்டிச் செல்லச் செல்ல, மனித நடமாட்டமும், ஒலிகளும் தேய்ந்து கொண்டே வந்தன. விடுதிகளும், அடுத்து பரதவர் குடிசைகளையும் தாண்டி வெறும் அலைகளும், கடற்காற்றும் மட்டும் ஒலி யெழுப்பிய பகுதியில் நின்றுகொண்டிருந்தார் அந்த மனிதர்.

பட்டாடைகளுடனும், படோடோபமான அலங்காரத் துடனும் தமிழனல்லாத சாயலுடன் ராஜதோரணையாகத் தெரிந்த அந்த மனிதரின் விழிகளில் மட்டும் கபடமும், திருட்டுத்தனமும் தாண்டவமாடின. அந்தக் கபட விழிகள் தூரத்தில் ஒற்றைப் பந்தத்துடன் வந்துகொண்டிருந்த ரதத்தைக் கண்டதும் பளிச்சிட்டு மகிழ்ச்சியையும் காட்டின. ரதம் நெருங்கி நிற்குமுன்பே அதை நோக்கி நடந்தவர், ரதம் நின்று அதிலிருந்து இறங்கிய கறுத்த மனிதனை "வா, வில்லவா. ஏன் இத்தனை தாமதம்?'' என்று வரவேற்கவும் செய்தார். கறுப்பு என்ற வண்ணத்திற்கே அவனைத் தொட்டு வண்ணம் தீட்டலாமென்ற அளவுக்குக் கறுத்துக் கிடந்த அந்த வில்லவனின் விழிகளும், பற்களும் மட்டுமே பளீரிட்டு, இருளில் அவனை அடையாளம் காட்டின.

படோடோப மனிதரை நெருங்கிய வில்லவன் "ராஜ மாதுலரே, இம்முறை பத்துப் பேழைகளே கொண்டு வர முடிந்தது. நாம் இந்தப் பணியைச் சற்று நிறுத்தி வைப்பது நல்லது'' என்றான்.

ராஜமாதுலர் என்று அழைக்கப்பட்டவர் "ஏன் நிறுத்த வேண்டும்?'' என்றார் சற்று உஷ்ணமாக.

"தலைநகருக்கு வரும் முத்துக்கள் குறைவதை, பாண்டியன் உணர்ந்து விட்டதாகத் தெரிகிறது. இன்று

காலை கோட்டைத் தலைவருக்கு ஓலையொன்று வந்தது. அது முதல் முத்துக் குளிக்கும் பகுதியிலிருந்து பொக்கிஷ மாளிகை வரை காவல் இரட்டிப்பாகி விட்டது. அது மட்டுமல்ல..."

"வேறென்ன?"

"மன்னர் விஜயத்தின்போது தங்கும் மாளிகையும் தயாராகிறது. ஆனால்..."

"ஆனால் என்ன?"

"வரப் போவது மன்னரல்ல."

"பின் யார்?"

"அதைவிட அபாயமானவர். பாண்டிய இளவரசி."

"இளவரசிதானா?"

"குறைவாக எண்ணாதீர்கள் இளவரசியை. அவரது விசாரணை முறைகளும், அப்போதே தண்டனையை நிறைவேற்றும் முறையும் வெகு பிரசித்தம். அவர் விழிகளிலிருந்து தப்புவது மிகக் கடினம்."

சற்று சிந்தித்த ராஜமாதுலர், "சரி, வில்லவா, நீ திடீரென்று மறைந்து விட்டால் சந்தேகம் எழும். எப்போதும் போல பொக்கிஷ மாளிகையில் உன் பணியைக் கவனி. எனது கலமொன்று வரவிருக்கிறது. நான் பேழைகளுடன் சென்று, பிறகு வந்து மீண்டும் உன்னைச் சந்திக்கிறேன். தற்போது நீ இரண்டு பேழைகளை எடுத்துக் கொள்" என்றார்.

ஆவலும் பேராசையும் பளபளத்த விழிகளுடன், இரண்டு பேழைகளை விடுத்து மற்றவற்றை ரதத்திலிருந்து இறக்கிய வில்லவன், விடைபெற்றுக் கொண்டு இருளில் ரதத்தைச் செலுத்திக்கொண்டு மறைந்தான்.



ரதம் மறைந்ததும் கரங்களைத் தட்டினார் ராஜமாதுலர். கரையையொட்டி வளர்ந்து கிடந்த தென்னை மரங்களின் மறைவிலிருந்து வெளிவந்த வீரர் பதின்மரை பேழைகளை எடுத்துவர உத்தரவிட்ட ராஜமாதுலர், சற்றுத் தள்ளி, அலை மோதுமிடத்தில் நின்றிருந்த பெரும் படகு ஒன்றை நோக்கி நடந்தார். கடலை உற்றுக் கவனித்தவர், அதிக விளக்குகளின்றிக் கலமொன்று அந்தப் பகுதியை நோக்கி வந்து கொண்டிருப்பதையும் கவனித்து, முகத்தில் முறுவலொன்றைப் படரவிட்டுக் கொண்டார்.

படகை அவர் நெருங்கியதும், மறுபுறத்திலிருந்து எழுந்த ஒலிகள் அவரைச் சற்றுத் திடுக்கிட வைத்தன. படகின் மறுபுறத்திலிருந்து திடீரென பந்தமொன்று எரிந்தது. பூரண ஆயுதபாணிகளாய் பாண்டிய வீரர் இருபதின்மர் படகின் மறைவிலிருந்து எழுந்து நின்றனர்.

ராஜமாதுலர் முகத்தில் திகைப்பு பரவியது. அவர் பின்னால் பேழைகளைத் தூக்கியபடி வந்த பதின்மரும், பேழைகளைக் கீழே இறக்கிவிட்டு, வாட்களை உருவ யத்தனித்தனர்.

"யாரும் அசைய வேண்டாம்." உறுதியுடன் ஒலித்த குரலொன்று கடற்கரையை ஊடுருவியது.

எடுத்துக் கட்டிய சுருண்ட குழல்கள் காற்றில் அலைபாய, கரத்தில் பிடித்த நீண்ட வாளுடன், ஏதோ வானத்திலிருந்து தப்பிக் குதித்துவிட்ட போர்த் தேவதை போல், முன்னால் வந்து நின்றாள் பாண்டிய இளவரசி குமுதவல்லி.





7

## மகாராணி ரேவாதேவி

கடலின் அலைகளைவிடச் சுருண்டு கிடந்த கூந்தல் கடற்காற்றில் அலைபாய, முகத்தில் விஷமப் புன்முறுவல் மின்ன, உருவிய வாளுடன் எதிரில் வந்து நின்ற பாண்டிய இளவரசியைக் கண்ட ராஜமாதுலர் திகைத்துத்தான் போனார். வில்லவன் கூறிய செய்தி எத்தனை உண்மை என்பதும், முத்துக் களவைக் கண்டறிய இளவரசி முன்னதாகவே வந்துவிட்டிருக்க வேண்டுமென்பதும் புரிந்தது அவருக்கு. அவர் விழிப்பதைக் கவனித்த இளவரசியின் முறுவல் விரிந்தது.

"வரவேண்டும் ராஜமாதுலரே, பல்லவச் சக்கரவர்த்தினியின் சகோதரரின் விஜயம் பிரமிக்க வைக்கிறது. அரசாங்க விருந்தினராக வரவேண்டியவர், கள்வனாக வந்திருப்பது இன்னும் வியக்க வைக்கிறது."



ராஜமாதுலர் பதிலேதும் கூறவில்லை. அவரது வெறித்த பார்வை, இளவரசியையும் தாண்டி, வீரர்களையும் கடந்து மணல் வெளியில் சென்று மீண்டு கொண்டிருந்தது.

குமுதவல்லி தொடர்ந்தாள். "ராஜமாதுலரே, நீரோ உம் சகோதரியோ, பாண்டி நாட்டு முத்துக்களை விரும்புவதாகத் தெரிவித்திருந்தால், நானே பரிசாக அனுப்பியிருப்பேன்– ஆனால் உங்கள் நோக்கம் முத்துக்களைக் கவர்ந்து பாண்டியர் படைபலத்தைத் தேக்குவது. கையும் மெய்யுமாகப் பிடிபட்டிருக்கும் உம்மைச் சிறை செய்துவிட்டு, உங்கள் மகாராணிக்கு ஓலையனுப்புகிறேன்."

ராஜமாதுலர் இப்போதும் பதிலேதும் கூறவில்லை.

"உமது வாளை ஒப்படைத்துவிட்டு, உமது வீரர்களைப் பேழைகளுடன் அப்படியே திரும்பி நடக்கச் சொல்லும்." உத்தரவிட்டாள் இளவரசி.

"இளவரசி!" ராஜமாதுலரின் அழைப்பில் அதீதமான கனிவும், பணிவும் தொனித்தன.

"என்ன?"

"வாளை ஒப்படைக்க வேண்டிய அவசியமில்லை இளவரசி," என்றார் விஷமம் வழிந்த குரலில்.

"என்ன உளறுகிறீர்?"

"நான் உளறவில்லை இளவரசி. சற்றுப் பின்னால் திரும்பிப் பார்த்தால் புரியும்" என்றார் ராஜமாதுலர்.

இப்போது திகைப்பது இளவரசியின் முறையாயிற்று. கடலில் பெரும் கலமொன்று நங்கூரம் பாய்ச்சி நிற்க, பெரும் படகுகளில் வீரர்கள் பலர் கரைக்கு வந்து கொண்டிருந்தனர். முன்னதாக வந்து, சற்றுத் தள்ளியே கரையை அடைந்திருந்த படகிலிருந்து, ஐம்பதுக்கும்

குறையாத வீரர்கள் உயர்த்திப் பிடித்த வாட்களுடனும், ஈட்டிகளுடனும் அலைமோதிய கரைப் பகுதியிலே நெருங்கி விட்டிருந்தனர்.

"சிறைப்பட்டிருப்பது நீதான் இளவரசி," என்ற ராஜ மாதுலர் இடி இடியென்று நகைத்தார் பலமாக.

**வை**கையில் தவழ்ந்து, குளிர்ந்து, மதுரை நகரெங்கும் உலவி, அரண்மனை நந்தவனத்து மலர்களின் சுகந்தங் களையும் சுமந்து வந்த தென்றல், சாளரத்தினருகே நின்று வானத்தை வெறித்துக்கொண்டிருந்த மன்னனின் சித்தத் தைக் குளிர வைக்க முயன்று தோற்றுக்கொண்டிருந்தது. நெரிந்த புருவங்களும், புடைத்துக் கிடந்த நெற்றி நரம்புகளும் அவன் சிந்தனையின் வேகத்தைக் காட்டின. பின்புறம் சற்றுத் தள்ளி நின்றிருந்த அமைச்சரும், முகுந்தனும் மௌனமாக மன்னன் சிந்தனையில் குறுக்கிடாமலே நின்றிருந்தனர். அவர்கள் குறுக்கிட அஞ்சிய மன்னன் சிந்தனையில், மீனாட்சி ஆலயத்து மணியோசை உரிமையுடன் குறுக்கிட்டு சற்று ஆறுதலையும் அளித்தது.

மெல்லத் திரும்பிய பாண்டிய வரகுணனின் குரலில் கேள்வி ஒலித்தது. "அமைச்சரே, தற்போது போர் சாத்திய மல்ல என்கிறீரா?"

அமைச்சர் நிதானமாகவே பதிலளித்தார்: "ஆம் மன்னவா. நம் படைகளின் பயிற்சி முற்றுப் பெற இன்னும் ஒரு திங்களாவது ஆகும் என்று படைத்தலைவர் கூறி யிருக்கிறார். போதிய பயிற்சியற்ற வீரர்களுடன் போர் தொடுப்பது அனர்த்தமாகவே முடியும். நந்திவர்மன் தற்போது காஞ்சியில் இல்லை. ராஷ்டிரகூடர் நம் இளவரசியைச் சிறையெடுத்ததை அவன் அறிந்திருக்க வாய்ப்பில்லை. அதனால்..."



"அதனால்...?"

"இளவரசியை மீட்க வேறு வழிகளும் இருக்கின்றன மன்னா."

அமைச்சர் வார்த்தைகளை முடிக்கு முன், அரண்மனை வாயிலில் பெரும் கோஷம் எழுந்தது. வீரன் ஒருவன் ஓடி வந்தான். "மன்னவா, நம் படைத்தலைவர் வந்து கொண் டிருக்கிறார்" என்றான் முகத்தில் உணர்ச்சிகள் தெறிக்க.

அவன் வேகத்தைக் கண்ட மன்னன் முகத்தில் முறுவல் பூத்தது. போர் தொடுக்காமல் இளவரசியை மீட்கும் சிக்கலுக்கு விடையளிக்கக் கூடியவர் வந்துவிட்டார் என்ற எண்ணம், அவன் முகத்தின் முறுவலை இன்னும் விரிய வைத்தது.

சற்று நேரத்தில் உள்ளே நுழைந்து வணங்கிய படைத் தலைவரைக் கண்டு மன்னன் முகத்தில் ஆனந்தம் தெரிந்த தென்றால், உடன் வந்து வணங்கி மௌனமாக ஏறிட்ட வனின் பார்வையைக் கண்ட மன்னனுக்கு, மகளைப் பற்றிய கவலையும் மறைந்து, சந்துஷ்டி அபரிமிதமாகவே கூடியது. நீண்ட காலம் கழித்து அந்த மனிதரைக் காணும் அமைச்சரின் விழிகளிலும் அன்பு வழிந்தது.

புலிச்சின்னம் பதித்த பெரும் பதக்கம் மார்பில் ஊசலாட, பழங்கதைகள் மிதந்த விழிகளும், இதழ்களும் விரிய வந்து நின்ற விக்கிரமவரையனை நெருங்கி அணைத்துக் கொண்டான் பாண்டியன் வரகுணன்.

"இப்போதாகிலும் என் நினைவு வந்ததா விக்கிரம வரையா?" என்று ஒரு கேள்வியும் உதிர்ந்தது மன்னனிட மிருந்து.

ஓரிரு கணங்களில் சுயநிலைக்கு வந்த அந்த மகா வீரர்கள் இருவரும் சற்று விலகி, தாங்கள் பேசுவதற்கு பல

நூறு கதைகளிருப்பதைப் புரிந்து முறுவலித்தனர். மன்னன் விழிகள் மீண்டும் வாயிலை நோக்கின. அங்கு யாரும் காணப்படாததால், சோழர் படைத்தலைவனை நோக்கிய விழிகளில் கேள்வியொன்றும் எழுந்தது. "விக்கிரமவரையா, உன்னுடன் வந்ததாகக் கூறப்பட்ட பராந்தகன் எங்கே? வரவில்லையா?" என்றான் மன்னன்.

சோழர் படைத்தலைவன் அளித்த பதில் மன்னனை அசர அடித்தது.

"மன்னவா, பராந்தகன் காஞ்சிக்குச் சென்றிருக்கிறான், பாண்டிய இளவரசியை மீட்டு வர."

அநிருத்தர் விளக்கினார், "மன்னவா, இளவரசியைப் பற்றிய செய்தி கிடைத்ததும் விக்கிரமவரையன் பராந்தகனை காஞ்சிக்கு அனுப்பத் தீர்மானித்தான். காஞ்சியில் சோழ வீரர்களும், ஒற்றர்களும் மட்டுமல்ல, நம் அனைவருக்குமே நெருங்கிய மற்றொருவரும் அங்குதானிருக்கிறார். நான் தங்களின் முத்திரை மோதிரத்துடன் அவரைச் சென்று காண பராந்தகனிடம் கூறியனுப்பி இருக்கிறேன்."

மன்னனின் விழிகள் அடுத்து திரும்பி அதுவரை மௌனமாக நின்றிருந்த முகுந்தனை நோக்கின. அந்தப் பார்வையிலிருந்த உத்தரவைப் புரிந்துகொண்ட முகுந்தன் தலைவணங்கி, வெளியே விரைந்தான்.

"சரி, வாருங்கள். உள்ளே சென்று அமர்ந்து பேசலாம்" என்று அழைத்த மன்னனுடன் உள்ளே நடந்தனர் அனைவரும்.

'நகரேஷு காஞ்சி' என்று வர்ணிக்கப்பட்ட காஞ்சி மாநகரம், அந்த மாலைப் பொழுதில், நகரெங்கும் நிறைந்து கிடந்த ஆலயங்களில் எரிந்த தீபங்களாலும், மாளிகைகளில்



எரிந்த விளக்குகளாலும், ஜாஜ்வல்யமாக ஜொலித்துக் கொண்டிருந்தது. காஞ்சியின் அழகையோ, கம்பீரத்தை ரசிக்கவோ, அனுபவிக்கவோ மனம் இடம் தராததால், மகாராணி ரேவாதேவியின் மாளிகைக் கூடத்தின் சாளரத்தின் வழியே வெறித்த பார்வையுடன் அமர்ந்திருந்த ராஜமாதுலர், பெரும் வெறுப்பை முகத்தில் வழிய விட்டுக் கொண்டு அமர்ந்திருந்தார்.

தமது வருகை அறிவிக்கப்பட்ட பின்பும், வெகு நேரம் காக்க வைத்திருக்கும் சகோதரியின் போக்கு, அவரது எரிச்சலை உயர்த்திக் கொண்டிருந்தது. அவரது உஷ்ணத்தைத் தணிக்க இறுதியாக வந்து சேர்ந்தாள் ஒரு பணிப்பெண். வெகு ஒய்யார நடை நடந்து வந்தவள், அவரை இடிக்காத குறையாக நின்று, "மகாராணியார் இப்போதுதான் அழைத்தார். என்னுடன் வாருங்கள்" என்று திரும்பி, மீண்டும் அதே ஒய்யார நடையுடன் உள்ளே சென்றாள்.

அடுத்தடுத்து விரிந்த அலங்கார வாயில்களும், அறைகளும், அழகிய சிற்பங்களும் அவர் சித்தத்தைக் குளிர வைக்கத் தொடங்கின. படையெடுப்புகளால் அடிமைப் படுத்தப்பட்டவர்களும், பரிசுகளாக வந்து சேர்ந்த அயல் தேசத்து மங்கையரும், சிறையெடுக்கப்பட்டவர்களுமாக, அந்தப் பகுதி முழுவதும் அழகிய பெண்கள் நிறைந்து கிடந்தனர். அதைவிட, காவலுக்கு நின்ற யவன மங்கையரின் செக்கச் செவேலென்ற நிறமும், உயரமும், பருத்த ஆகிருதியும் அவரை பிரமிக்க வைத்தன. வாட்களையும், ஈட்டிகளையும் ஏந்தி நின்ற அந்த யவன மங்கையர் ஓரளவு அச்சத்தையும் ஏற்படுத்தினர்.

இறுதியாக பெரும் கூடமொன்றை அடைந்தவரின் பிரமிப்பு உச்சத்தை அடைந்தது. அறையின் சுவர்களில்

இருந்த சித்திரங்களும், சரவிளக்குகளும், தூண்களில் செதுக்கப்பட்ட சிற்பங்களும், பெரும் பாவை விளக்குகளும், சிலைகளும், அந்தக் கூடத்தை அசல் தேவலோகமாகவே அடித்திருந்தது.

மஞ்சமொன்றில் சரிந்து அமர்ந்து, அவர் வருகையை நோக்கிய மகாராணி ரேவாதேவியும்கூட, ஓர் அழகிய சிற்பமாகவே தெரிந்தாள். நீண்டு அடர்ந்து கிடந்த கூந்தலில் ஆங்காங்கே முற்றத் தொடங்கிய இளமையின் சாயல் புலப்பட்டாலும், சிவந்த முகத்தில் செவிகளை நோக்கி நீண்டு, சரேலென இறங்கிய புருவங்களின் கீழ் ஒளி வீசிய விழிகள், அசாத்தியக் கூர்மையுடன் பளபளத்துக் கிடந்தன. மடிந்து விரிந்து பளபளத்த இதழ்களில் ஊசலாடிய முறுவல், எந்த மன்னாதி மன்னனையும் மயக்க வல்லது என்பதை அறிவித்தது. அவள் கழுத்திலிருந்து இறங்கிய முத்துக்களும், ஆரங்களும், ஓர் அரசை விலைக்கு வாங்கப் போதுமானவையாக இருந்தன. அத்தனை அழகையும் மீறி, அவள் தோற்றத்தில் ராஷ்டிரகூடர்களின் மூர்க்கத்தனமும் புலப்பட்டது.

கையசைப்பினால் ராஜமாதுலரை அமரப் பணித்தவள், பின்னால் மெய்க் காவலாக நின்ற யவன மங்கையரை ஒரு பார்வையால் விலகியிருக்கப் பணித்தாள். எதிரிலிருப்பவரை முதலில் சங்கடத்துக்குள்ளாக்கி, பலவீனப்படுத்திப் பணிய வைப்பது, அவளுக்குக் கைவந்த தந்திரக் கலையென்பது, அவளது முதல் கேள்வியிலேயே புரிந்தது.

"சகோதரருக்குப் பெண்களின் மீதுள்ள மோகம் இன்னும் தீரவில்லை போலிருக்கிறது. பெண்களைச் சிறையெடுப்பதும் நிற்கவில்லையென்று தெரிகிறது."

ராஜமாதுலரின் முகம் இருண்டது. 'பாண்டிய இளவரசியைச் சிறையெடுத்தது பற்றி மூச்சு விடலாகாது'



என்று வந்து சேருமுன்பே தம் வீரர்களை எச்சரித்திருந்தார். ஒரே இரவில் அதைப் பற்றி மகாராணி அறிந்திருக்க வாய்ப்பில்லை என்ற நம்பிக்கை, அவருக்கு இன்னும் மீத மிருந்தது.

ரேவாதேவியின் விழிகளில் அலட்சியம் உதயமாகி இதழ்களிலும் நெளிந்தது.

“ராஜமாதுலா, சாதாரணக் குடிகளைச் சிறையெடுப்ப தற்கும், ஒரு நாட்டின் இளவரசியைச் சிறையெடுப்பதற்கும் பெரும் வேறுபாடுகள் இருக்கின்றன. அதிலும் எதிரி நாட்டின் இளவரசியைச் சிறையெடுப்பதால் ஏற்படும் விளைவுகளை சற்று எண்ணிப் பார்க்க வேண்டும்,” என்றவளின் குரல் உஷ்ணம் ஏதுமின்றி சாதாரணமாகவே ஒலித்தாலும், ஆழத்தில் புதைந்து கிடந்த அபாயம் நன்றாகப் புரிந்தது ராஜமாதுலருக்கு.

தம் சாயம் சுத்தமாக வெளுத்துவிட்டதும் புரிந்தது அவருக்கு.

“சோழரைப் போல படைபலமற்ற, மன்னனற்ற நாடென்று எண்ணினாயா பாண்டியரை? வரகுணன் போர் தொடுக்கவே வேண்டாம். இளவரசியை நீ சிறை யெடுத்ததைத் தெரிவித்தாலே போதும். பல்லவ மன்னரின் நீதியை அறிவாயல்லவா?”— மகாராணியின் கேள்வி, அவர் முகத்தை வெளுக்க வைத்தது. நந்திவர்மனின் நீதி, மகாராணியாயிருந்தாலும் விட்டு வைக்காதென்பதை அறிந்திருந்தார் அவர்.

மென்று விழுங்கியவர், “நான் என்ன செய்வது சகோதரி? அவள் என்னைச் சிறை செய்ய வந்தாள். நான் அவளைச் சிறையெடுத்தேன். இனி என்ன செய்ய வேண்டு மென்பதை நீயே தீர்மானித்துக் கொள். அவளைக் கொண்டு

வந்து உன்னிடமே ஒப்படைத்து விடுகிறேன்" என்றார் கெஞ்சலாக.

மகாராணியின் முகத்தில் விஷமம் வழிந்தது.

"நீ கொண்டு வந்து ஒப்படைக்க அவசியமில்லை ராஜமாதுலா."

"அவசியமில்லையா? ஏன்?" ராஜமாதுலர் விழித்தார்.

வெகு நிதானமாக வந்தது மகாராணியின் பதில், "ஆம் ராஜமாதுலா. அவசியமில்லை. ஏனெனில், நேற்றிரவே அவள் இங்கே கொண்டு வரப்பட்டுவிட்டாள். நீ தனியாக ஒதுக்கி வைத்திருந்த முத்துப் பேழைகளும் வந்துவிட்டன."





8

## புல்லே போதுமானது!

குழப்பம், சந்தேகம், அச்சம் மூன்றும் மனிதனின் நிதானத்தை எத்தனை தூரம் குலைக்க முடியுமென்பதற்கு, மிகச் சரியான உதாரணமாக அமர்ந்திருந்தார் ராஜமாதுலர் அன்று.

இளவரசியையும், முத்துக்களையும் தாம் கொண்டுவந்து சேர்த்த ஒரே இரவில், மகாராணியால் எப்படி இதை அறிய முடிந்தது, எப்படி தான் அறியாமல் இளவரசியையும் முத்துக்களையும் கொண்டு செல்ல முடிந்தது என்ற குழப்பம் அவரைக் கலக்கியது. தவிர, விஷயம் பல்லவ மன்னனை எட்டினால் ஏற்படக்கூடிய விளைவுகளாக மகாராணி கூறியவையும், சித்தத்தில் அச்சத்தை ஊட்டியதால், அடித்து வைத்த சிலையாகவே நெடுநேரம் அமர்ந்திருந்தார் அவர்.

அவரது நிலையைக் கவனித்த மகாராணியின் மனம் சற்று இளகியிருக்க வேண்டுமென்பது, அடுத்து அவள் கேட்ட கேள்வியில் புலப்பட்டது.

"சரி, ராஜமாதுலா, இனி நடப்பவற்றை நான் கவனித்துக் கொள்கிறேன். ராகுலனிடமிருந்து செய்தியேதும் வந்ததா? உறையூரில் . அவனது முயற்சி பலிக்கவில்லை என்று தெரிவித்திருந்தானே?"

"ஆம். அங்கு சோழர் படைத்தலைவனும், யாரோ ஒரு சோழ வீரனும் வந்து குறுக்கிட்டதாகத் தெரிவித்திருந்தான்."

"இதன் பொருள் புரிகிறதா உனக்கு?"

ராஜமாதுலர் விழித்தார்.

"சோழர் படைத்தலைவன் பாண்டியர் உதவியை நாடிச் சென்றிருக்க வேண்டும். சோழர்களிடம் தற்போது இருக்கும் சொற்பப் படைகள், பாண்டியர் பெரும்படையுடன் இணைந்துவிடும். நம் எதிரிகளின் பலம் உயர்ந்துவிடும்."

"புரிகிறது." ராஜமாதுலர் முணுமுணுத்தார்.

"இனியும் நாம் தாமதிப்பது தவறு. நம் திட்டங்களை விரைவில் செயல்படுத்த வேண்டுமென்று ராகுலனுக்கு ஓலையனுப்பி விடு. அடுத்த தாக்குதலை எங்கே தொடங்கப் போகிறான் அவன்?"

"திருவெள்ளறையில்."

மகாராணி சற்று சிந்தித்தாள். "திருவெள்ளறைக் கோட்டை சிறியதென்றாலும் பலமானதென்று கேள்வி. அங்கிருப்பவன் இந்தளதேவன் என்பது நினைவிலிருக்கிறது. அவன் சாமான்ய வீரனல்ல என்றும், எளிதில் உணர்ச்சி வசப்படுபவனென்றும் கேள்வி."

காஞ்சியிலிருந்தபடியே பாண்டிய நாட்டின் நிலையையும், கோட்டைத் தலைவர்களைப் பற்றியும் கரதலப்



பாடமாக அறிந்து வைத்திருந்த மகாராணியின் திறமை, ராஜமாதுலரை வியக்க வைத்தது.

"ஆம் சகோதரி. இந்தளதேவன் சற்று முன்கோபிதான். ஆனால் பெரும வாள்வீரன். பாண்டியர் படைகளுக்கு வாட்போர் பயிற்சியளிப்பவன்."

"ராகுலனுக்குச் செய்தியனுப்பி விடு. கோட்டைத் தலைவனை வெளியே இழுக்க வழியிருக்கிறதா என்று பார்க்கச் சொல். பிறகு காரியத்தை முடிக்கலாம். புரிகிறதா?"

"அப்படியே ஓலையனுப்பி விடுகிறேன்."

"கொற்கை முத்துக்களை இனி கொண்டு வருவது_"

"அது அரும்பாடுபட்டு கண்டுபிடித்த ரகசியம். அந்த வழிகளைக் கண்டறிவது அத்தனை எளிதல்ல. அங்கிருக்கும் குழப்பங்கள் ஓய்ந்தபிறகு, நான் மீண்டும் சென்று பார்க்கிறேன்."

"சரி, தெற்கில் அந்த மலைநாட்டு வில்லவனையும் எச்சரித்து விடு."

"அப்படியே ஆகட்டும். நான் சென்று வருகிறேன்" என்று ராஜமாதுலர் எழுந்தார்.

மாளிகையை விட்டு வெளியே வந்த ராஜமாதுலரின் உள்ளம் எரிமலையாயிருந்தது. கொள்ளைக்கும், களவாடவும், சகல அக்கிரமங்களுக்கும் தன்னுடன் சேர்ந்து உடன் வந்த வீரர்களில், மகாராணிக்கு சகலவற்றையும் தெரிவித்து, முத்துக்களையும், இளவரசியையும் கொண்டு செல்ல யார் உதவியிருக்க முடியும் என்பதைக் கண்டறிய முடியாத அவர் சித்தம், ஆத்திரத்தில் கொதித்துக் கிடந்தது. தம் மாளிகையை அடைந்தவர், தமது வீரர் தலைவனை மட்டும் அழைத்துக் கொண்டு அறையை அடைத்துத் தாளிட்டுக் கொண்டார்.

வீரர் தலைவன் விழித்துக்கொண்டு நின்றான்.

"ஜெயதுங்கா, நம் வீரர்களில் எத்தனை பேர் நம்மைச் சேர்ந்தவர்கள்?" என்றார் உஷ்ணமாக.

ஜெயதுங்கன் இன்னும் விழித்தான், "நம் வீரர்கள் அனைவருமே ராஷ்டிரகூடர்கள்தானே பிரபு?" என்றான் குழப்பத்துடன்.

"அதல்ல நான் கேட்பது. நேற்று நாம் கொண்டு வந்த பேழைகளையும், இளவரசியையும் எப்படி மகாராணியின் மாளிகைக்குக் கொண்டு சென்றனர்?"

"நீங்கள் உத்தரவிட்டதாகக் கூறித்தான் நம் வீரர்கள் கொண்டு சென்றார்கள்."

"முட்டாளே, நான் உத்தரவேதும் இடவில்லை. மகாராணிக்கு நான் தெரிவிக்கவில்லை. ஆனால் விஷயம் அவளுக்குத் தெரிந்திருக்கிறது. புரிகிறதா?"

ஜெயதுங்கன் திகைத்தான்.

"திகைக்காதே ஜெயதுங்கா. இங்கிருக்கும் நம் வீரர்களைக் கலைத்துவிடு. நான் தரும் ஓலையுடன் இன்றே நீ ராஷ்டிரகூடத்துக்குச் சென்று, நம் தனிப்படையிலிருந்து மூவாயிரம் வீரர்களை அழைத்து வந்துவிடு. நாம் சுதந்திர மாகச் செயல்பட அதுதான் வழி. இங்கிருப்பவர்கள் அனைவருமே மகாராணியின் அடிமைகள்."

ராஜமாதுலரின் ஓலையைப் பெற்றுக்கொண்ட ஜெயதுங்கன் அப்போதே ராஷ்டிரகூடத்தை நோக்கிக் கிளம்பினான்.

**ரா**ஜமாதுலர் அகன்ற பின் சற்று நேரம் சிந்தனை வசப்பட்டுக் கிடந்த மகாராணி, பணிப்பெண்ணைத் தன் வீரர்களில் ஒருவனை அழைத்து வரப் பணித்தாள்.



உள்ளே நுழைந்து வணங்கிய வீரனை நோக்கியவள், "வீரனே, ராஜமாதுலரின் மாளிகையில் என்ன நடக்கிற தென்பதைக் கண்டறிந்து, உடனுக்குடன் எனக்குத் தெரிவி" என்றாள்.

பின் தன் மெய்க்காவலரான யவன மங்கையரை நோக்கி, "இன்று மன்னரிடமிருந்து ஓலையேதும் வந்ததா?" என்றாள்.

"இல்லை, மகாராணி. மன்னர் உதயேந்திரபுரியிலிருந்து இரு தினங்களில் புறப்படுவதாகத் தெரிவித்த பின்னர், ஓலையேதும் வரவில்லை" என்றாள் யவன மங்கை.

தலையசைத்தபடியே நடந்த மகாராணி, அந்தப்புரத்தின் உள் பகுதியை நோக்கி நடந்தாள். இரண்டாவது வாயிலில் சற்றுத் தயங்கியவள், அடுத்திருந்த அறையின் காவலுக்கு நின்ற யவன மங்கையரை விலக்கிவிட்டு உள்ளே நுழைந்தாள்.

விசாலமான அந்த அறையின் சாளரத்தருகே நந்த வனத்தை வெறித்தபடி நின்றிருந்தாள் பாண்டிய இளவரசி. அரவம் கேட்டுத் திரும்பிய குமுதவல்லியின் அகன்ற விழிகள், ரேவாதேவியின் விழிகளுடன் இரு வேல்களைப் போல் கலந்து நின்றன.

"இளவரசிக்கு இங்கு குறையேதும் இருக்கிறதா?"— மகாராணியின் கேள்வியில் அதீத பரிவு ஒலித்தது.

"ஆம். இருக்கிறது."— பளிச்சென்று வந்தது குமுத வல்லியின் பதில்.

மகாராணியின் முகம் இன்னும் சிவந்தது. "என்ன குறை குமுதவல்லி? பணிப்பெண்கள் சரிவர நடந்து கொள்ளவில்லையா?"— அவள் குரல் உஷ்ணத்துடன் ஒலித்தது.

"இந்த மாளிகையில் சிறையிருப்பதே குறைதான்."

கணப்பொழுதில் முகம் மாறிய மகாராணியின் பதில் நிதானமாக வந்தது, "குமுதவல்லி, உன் தந்தை படை திரட்டுவதைத் தேக்க நான் வகுத்த திட்டங்கள் இன்னும் முழுமையாக நிறைவேறவில்லை. நீ என்னிடம் சிக்கி யிருப்பது, என் எண்ணத்தை எளிதாக நிறைவேற்றிக் கொள்ள உதவும். அதுவரை இந்தக் குறையை நீ பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டும்."

"தவறு மகாராணி. உங்கள் சூழ்ச்சிகளாலோ, படை களின் எண்ணிக்கையாலோ பாண்டிய மன்னரைப் பணிய வைக்க முடியாது. நானும் அதிக நாட்கள் இங்கு சிறை யிருக்கப் போவதில்லை. இங்கு வந்தபின் இன்னொன்றையும் புரிந்துகொண்டேன்."

"என்ன புரிந்து கொண்டாய்?"

"உங்கள் சூழ்ச்சிகளையும், ராஷ்டிரகூடர் செயல் களையும் பல்லவ மன்னர் விரும்பவில்லை. பல்லவ வீரர்கள் தனித்தேதான் இயங்குகிறார்கள். அவ்வப்போது மோதிக் கொள்ளவும் செய்கிறார்கள்."

"வேறென்ன அறிந்தாய்?"— மகாராணியின் குரலில் உஷ்ணம் தொனித்தது.

"இந்தக் காஞ்சியைப் பெரும் அபாயம் சூழ இருக்கிறது."

"பாண்டியர் படைகள் வந்துவிடும் என்கிறாயா?"

"பாண்டியர் படைகளை அத்தனை அலட்சியமாக நினைக்க வேண்டாம் மகாராணி. போர் மூளும்போது அதைப் புரிந்து கொள்வீர்கள். அந்த அபாயத்தை நான் கூறவில்லை. உங்கள் நாட்டிலிருந்தே அபாயம் உங்களை நோக்கி வந்து கொண்டிருக்கிறது. உங்களைச் சூழ்ந்த பிறகே அதைப்பற்றிப் புரிந்து கொள்வீர்கள்."



தங்கத் தட்டில் ரத்தினங்களைக் கொட்டியது போல கலகலவெனச் சிரித்தாள் ரேவாதேவி.

குமுதவல்லியின் வார்த்தைகளை அடியோடு அவள் நம்பவில்லையென்பதை அவள் முகம் காட்டியது. சிறைப் பட்ட பின்பு வழக்கமாக வீரம் பேசும் தமிழ்ப் பெண்களைப் போல்தான் அவள் பேசுகிறாள் என்றே தீர்மானித்தவள், "சரி குமுதவல்லி, வீணாகப் பிதற்றிக் கொண்டிராதே. இங்கு உனக்கு வேறு ஏதேனும் தேவையென்றால் கூறு. நிவர்த்தி செய்கிறேன். சிறைப்பட்டிருக்கிறாய் என்பதைத் தவிர இங்கு உனக்கு வேறெந்தக் குறைவுமின்றிப் பார்த்துக் கொள்வது என் பொறுப்பு" என்றாள்.

ஒருகணம் சிந்தித்த குமுதவல்லி, "மகாராணி, வாயிலில் நிற்கும் யவனப் பெண்கள் வெறும் முரட்டுப் பெண்களாக இருக்கிறார்கள். என் சுத்தத் தமிழ் அவர்களுக்கு வெறும் சத்தமாகத்தானிருக்கிறது. புரிந்துகொள்ள இயலவில்லை" என்றாள்.

"அவ்வளவுதானே. அவர்கள் வாயிலிலேயே நிற்கட்டும். உனக்கு உதவியாக தமிழகத்துப் பெண்ணொருத்தியை அனுப்பி வைக்கிறேன்" என்ற மகாராணி, வாயிலில் நின்ற யவன மங்கையரிடம் ஏதோ கூறிவிட்டு அகன்றாள்.

சிறு பணிகளை முடிப்பதற்கும் மனிதனுக்கு பெரும் முயற்சியும், கருவிகளும், காலமும், உழைப்பும் தேவை. ஆனால் ஆண்டவனின் விருப்பத்திற்கு வளைந்து கொடுக்க, சிறு புல்லேகூடப் போதுமானது.

புல் என்று சொல்ல முடியாமல், பெரும் மரமாகவே இருந்த யவனக் காவல் மங்கை, "எங்கள் பணிவிடை பிடிக்கவில்லையோ இந்த இளவரசிக்கு?" என்று முணுமுணுத்தபடி, மாளிகைக்கு உள்ளே நடந்தாள்.

மகாராணியின் உத்தரவுப்படி, முதலில் கண்ணில் பட்ட தமிழகத்துப் பெண் ஒருத்தியைத் தரதரவென்று இளவரசி யிருந்த அறைக்கு இழுத்து வந்தவள், "இனி நீ இந்த இளவரசிக்குப் பணிவிடை செய்தால் போதும்" என்று நெட்டித் தள்ளிவிடாத குறையாக உள்ளே அனுப்பி வைத்தாள்.

குனிந்த தலையுடனும், அமைதியான நடையுடனும் உள்ளே நுழைந்து வணங்கினாள் அந்தப் பெண். அவளது அழகிய விழிகளில் பெரும் சோகம் அப்பிக் கிடந்தது. வெறித்துக் கிடந்த அவள் பார்வையில், துன்பத்தின் ரேகைகள் பலமாகப் படர்ந்து கிடப்பதைக் கண்ட குமுத வல்லியின் மனம் உருகியது.

அவளும் தன்னைப் போல சிறையெடுக்கப்பட்டவளாக இருக்க வேண்டுமென்பது புரிந்தது.

அருகில் நெருங்கி அவள் முகத்தை மெல்ல நிமிர்த்திய குமுதவல்லி, "பெண்ணே, உன் பெயர் என்ன? நீயும் ராஷ்டிரகூடரால் சிறையெடுக்கப்பட்டவளா?" என்றாள் குரலில் அன்பு வழிய.

அந்தப் பெண்ணின் அழகிய விழிகளில் நீர்த் திரை யிட்டது. குரலிலும் பெரும் சோகம் ஒலித்தது.

"ஆம் இளவரசி. நான் சோழ நாட்டின் வண்டாழஞ் சேரியைச் சேர்ந்தவள். பெயர் கார்குழலி. இந்த மகாராணி யின் பொன்னாரமொன்றை என் சகோதரன் களவாடி விட்டானென்று கூறி, எங்கள் ஊருக்குத் தேடி வந்த ராஷ்டிரகூடர்கள் என்னை இங்கு சிறையெடுத்து வந்து விட்டார்கள்" என்றாள் அந்தப் பெண்.



(9)

## விஷ்ணு சித்தர்

'**ஒ**ளிமாடங்கள் சூழ்ந்தழகாய கச்சி' என வர்ணிக்கப் பட்ட காஞ்சி, இரவின் அந்த இரண்டாவது ஜாமத்திலும், உயர்ந்த மாடங்களிலும், மாளிகைகளிலும், கோபுரங்களிலும் எரிந்த தீபங்களாலும், பந்தங்களாலும் ஜாஜ்வல்யமாக ஒளிர்ந்து கொண்டிருந்தது. சாதாரண மக்கள் நடமாட்டம் குறைந்திருந்தாலும், மல்லைத் துறையிலிறங்கி, ஓயாது வந்து கொண்டிருந்த வணிகர் கூட்டம், வடக்கு வாயில் வழியே ரதங்களிலும், பொதி வண்டிகளிலும் தொடர்ந்து வந்து கொண்டேயிருந்தது.

யவன வணிகர்களையும், கடாரத்து வணிகர்களையும் அடுத்து, ராட்சதர்களைப் போலிருந்த கறுப்பு அடிமைகள் சூழ்ந்து வர, சீனத்துப் பொதி வண்டிகள் வந்தன. மஞ்சள் முகங்களுடனும், தட்டையான மூக்குகளுடனும் ரதங்களில் அமர்ந்து வந்த சீனத்து வணிகர்கள், கோட்டையின்

வாயிலில் நின்ற ராஷ்டிரகூடர்களுக்கு வெகு தாராளமாக பொற்காசுகளைக் கொண்ட முடிப்புகளை அளித்துக் கொண்டே வந்தனர்.

வடக்கு வாயிலின் வழியே உள்ளே நுழைந்த ரதங்கள் ராஜ வீதியில் நுழைந்து, தெற்கு நோக்கி வரிசையாகச் சென்றன. அந்த வரிசையிலிருந்து பிரிந்த ரதமொன்று வணிகர் வீதியை அடுத்து குறுகிய தெருவொன்றில் திரும்பி, நகரப் பிரமுகர்கள் இருக்கும் வீதியை அடைந்து, மரம் செடிகொடிகள் அடர்ந்த தோட்டப்பகுதிகள் வழியே, பெரும் மாளிகையொன்றின் பின்புறத்தை அடைந்து நின்றது.

ரதத்திலிருந்து குதித்து இறங்கிய வணிகனும், ரதத்தை ஓட்டி வந்த அடிமையும், புரவிகளைப் பிரித்து மரமொன்றில் பிணைத்து விட்டு, நீண்ட அங்கிகளையும், சதுரத் தலைப் பாகைகளையும் களைந்தனர். சற்றுப் பருத்த உடலுடனும் வலுவான கரங்களுடனும், உருண்ட பெரும் விழிகளுடனும் நின்ற வணிகன், அடிமை வேஷத்தைக் கலைத்து முகத்தைத் துடைத்துக் கொண்டிருந்தவனைப் பார்த்து, "பராந்தகா, இது நம் சோழ வணிகர் இல்லம். நாம் சந்திக்க வேண்டியவர் இங்குதான் இருக்கிறார். வா" என்றபடி மாளிகையின் பின்புறத்து வாயிலை நோக்கி நடந்தான்.

கதவை அடைந்து மும்முறை தட்டிய வணிகன், சற்று இடைவெளி கொடுத்து மீண்டும் மும்முறை தட்டினான். சற்று நேரம் கழித்துக் கதவைத் திறந்தவன் அசல் பிரும்ம ராட்சதனாகவே தெரிந்தான். அவனது அதீத உயரமும், கறுத்துப் பருத்துக் கிடந்த தேகமும், முரட்டுக் குழல்களும் பார்வைக்கு அச்சத்தை ஏற்படுத்தின. மொச்சை மொச்சை யான பற்களைக் காட்டி வணிகனைப் பார்த்துச் சிரித்தவன், பின்னால் நின்ற பராந்தகனைப் பார்த்ததும் சட்டென்று தன் பல்வரிசையை மூடினான்.



"பகதத்தா, யாரிவன்? புதிதாக எவரையும் இங்கு அழைத்து வரலாகாது என்று தெரியாதா உனக்கு?" என்றான் ராட்சதன்.

பகதத்தனின் பெருவிழிகள் அவனை நோக்கி உருண்டன. "முட்டாளே, இவர்தாம் நம் பராந்தகர். படைத் தலைவர் அனுப்பிய ஓலை கிடைக்கவில்லையா? விலகு அப்பால்" என்றான் கடுமையாக.

அந்த ராட்சதனின் கறுத்த முகத்தில் அடுத்தகணம் வியப்பும் மதிப்பும் வேகமாகப் பரவின. "வரவேண்டும் பராந்தகரே, வரவேண்டும். மாலையிலிருந்தே தலைவர் தங்களைத்தான் எதிர்பார்த்துக் காத்திருக்கிறார். இன்னா ரென்று அறியாமல் நான் பேசிவிட்டேன். மன்னிக்க வேண்டும்" என்றான் தலைவணங்கி.

அவனை அலட்சியமாக ஒதுக்கிய பகதத்தன், பராந்தகனை அழைத்துக் கொண்டு உள்ளே நுழைந்தான். முதலில் தென்பட்ட நீண்ட கூடத்தில் பெரும் பேழைகள் பல அடுக்கப்பட்டிருந்தன. அவற்றின் மேலும் கீழும், ஆரங்களும், முத்துச்சரங்களும், வேறு பல ஆபரணங்களும், கற்களும் சிதறிக் கிடந்தன. மறுமுனையிலிருந்த படிகளில் ஏறி மேல் மாடத்தின் நீண்ட தாழ்வரையைக் கடந்து, பகதத்தனுடன் வந்த பராந்தகன் அங்கிருந்த பெரும் அறையை அடைந்ததும் பிரமித்து நின்றான். அறையின் சுவர்களிலும், தூண்களிலும் பொன் தகடுகளால் இழைக்கப் பட்ட சிலைகளும் பதுமைகளும் மின்னின. தரையிலிருந்த ரத்தினக் கம்பளத்தில் அரபுநாட்டுக் கலைத்திறன் விழி களைக் கவர்ந்தன. மேலிருந்து தொங்கிய யவனநாட்டுச் சர விளக்குகள் அந்த அறையை தேவலோகமாகவே அடித்தன.

அறையின் மற்றொரு மூலையை நோக்கிய பராந்தகனின் விழிகள் வியப்பைக் கொட்டின. அறையி

விருந்த பெரும் அலங்கார மஞ்சங்களையும், விரிப்புகளையும் விடுத்து, வெறும் தரையில், காவி உடைகளுடன் சலனமற்ற கூர் விழிகளால் உற்றுப் பார்த்தபடி அமர்ந்திருந்தார் ஒரு மனிதர். பளீரென்ற திருமண் துலங்க, எல்லையற்ற சாந்தம் விழிகளில் தவழ, பார்வைக்கு மெல்லிய, ஆனால் வைரம் பாய்ந்த தேகத்துடன் அமர்ந்திருந்த அந்த மனிதரைக் கண்டதும், பராந்தகன் மனத்தில் அவரை இதற்கு முன்பாக எங்கோ பார்த்திருப்பதான நினைவு எழுந்தது.

பராந்தகனின் பார்வையைக் கவனித்தவர் முறுவலித்தார். "உள்ளே வா, பராந்தகா, படைத்தலைவர் கூறியனுப்பிய ரத்தின வணிகன் குணவர்மன் நான்தான்" என்றார்.

பராந்தகன் அவரை நெருங்கி வணங்கியபடி, முத்திரை மோதிரத்தை கச்சையிலிருந்து எடுக்க முயன்றான். குண வர்மரின் கரம் உயர்ந்து தடுத்தது. "முத்திரை மோதிரம் அவசியமில்லை பராந்தகா. நீ யாரென்பதை நான் நன்றாகவே அறிவேன். உன்னை மட்டுமல்ல, உன் தந்தையையும் அறிவேன்."

"ஆம் குணவர்மரே, என் தந்தையுடன் தங்களை குடந்தையின் ஆலயத்திலும், காவிரித்துறையிலும் சந்தித் திருப்பதாக நினைவிருக்கிறது எனக்கு. என் யூகம் சரியானால், குணவர்மன் என்பதும் தங்கள் பெயரல்ல" என்றான் பராந்தகன்.

அவரது விழிகள் ஜொலித்தன. "ஆம் பராந்தகா. நீ கூறுவது உண்மைதான். இந்த இடத்தின் சூழ்நிலை என்னை ரத்தின வணிகனாகக் காட்டிக்கொள்ளத்தான். நீ என்னிடம் என்றோ வந்து சேர்ந்திருக்க வேண்டியவன். உன் தந்தை கருணாகரர் தடுத்தார். ஆனால் வைகுந்தன் திருவுள்ளம் இப்படித்தான் என்றால், அதை மாற்ற நாம் யார்?" என்றவர்



எழுந்து, "பகதத்தா, ஏற்கெனவே தாமதமாகிவிட்டது. நாம் புறப்பட வேண்டும். உன் நண்பனுக்கு மீதி விவரங்களைச் சொல். உங்கள் உடைகளையும் மாற்றிக் கொள்ளுங்கள். இதோ வருகிறேன்" என்றவர் திரும்பி, ஏதோ காற்றில் மிதப்பவரைப் போல வேகமாக உள்ளே நடந்தார்.

அவரது வேகம் பராந்தகனை வியக்க வைத்தது. "பராந்தகா, இவரது வேகத்தைக் கண்டு வியக்காதே. நம் படைத்தலைவரின் வலதுகரமாக போர்களில் பங்கேற்றவர் இவர். மன்னர் மறைந்தபின் ஆழ்வாரின் சீடரிடம் தீட்சை பெற்றுக் கொண்டார்" என்றான் பகதத்தன்.

பராந்தகன் பிரமித்தான். "ஆழ்வாரின் சீடரிடமா?... இவரா... அப்படியானால்...?" என்றவனைக் கையமர்த்திய பகதத்தன், "ஆம். திருமங்கை மன்னரின் நான்கு சீடர்களை உலகம் அறியும். அவர்களில் தோரா வழக்கனிடம் தீட்சை பெற்றவர் இவர். குருவின் உத்தரவின் பேரில் இப்போது சோழ நாட்டுப் பணியாற்ற, வணிகராக இருக்கிறார்."

"அப்படியானால் விஷ்ணுசித்தர்... பரகாலதாஸர்...?"

"இவரேதான். அதிருக்கட்டும்..." என்ற பகதத்தன், சற்று நேரம் பராந்தகனை வெறித்து நோக்கினான். அவன் முகத்தில் சற்று உஷ்ணம் தெரிந்தது. "பராந்தகா, நீ அந்தக் கேள்வியைக் கேட்கவே மாட்டாயா?" என்றான் உஷ்ணம் குரலிலும் ஒலிக்க.

"எந்தக் கேள்வியை?"– குழப்பத்துடன் வந்தது பராந்தகனின் பதில்.

பகதத்தனின் குரல் உயர்ந்தது. "அடேய், நீ மனிதன் தானா? அன்பு, பாசம், பந்தம் எதுவும் கிடையாதா உனக்கு? இத்தனை மனஅழுத்தமா உனக்கு?"

பராந்தகனின் குழப்பம் உயர்ந்தது. "என்ன சொல்கிறாய் பகதத்தா? அன்புக்கும், பாசத்துக்கும் என் நிலைக்கும் என்ன தொடர்பு? பாராட்டி வளர்த்த தந்தையை இழந்தேன். உற்ற நண்பர்கள் கொல்லப்பட்டார்கள். இல்லமும் அழிந்தது. உயிருக்குயிரான உடன் பிறந்தவளையும் அந்தப் பாதகர்கள் கொன்று விட்டார்கள். பிறந்த மண்ணைவிட்டு பாண்டிய நாடு, பல்லவ நாடு என்று அலைகிறேன். அன்பும் பாசமும் நான் யாரிடம் காட்ட?"– பராந்தகனின் குரலில் சோகம் வழிந்தது.

பகதத்தனுக்கு உண்மை புரிந்தது.

"பராந்தகா."

"சொல்."

"உன் தந்தை இறந்து கிடந்ததையும், நம் நண்பர்கள் மடிந்ததையும் கண்டாய்."

"கண்டேன்."

"கார்குழலி என்னவானாள்?"

"அவளை அந்த அரக்கர்கள் தூக்கிச் செல்ல முயன்ற போது தன்னையே மாய்த்துக் கொண்டாளா, அல்லது அவர்களால் கொல்லப்பட்டாளா, தெரியவில்லை. குருதி படிந்த மேலாடைகளையும் உடைந்த வளையல்களையும்தான் கண்டேன்."

"முட்டாளே, மூடனே, அவள் இறந்திருந்தால் உடலை அவர்கள் தூக்கிச் செல்வார்களா? எங்கேனும் எறிந்து விட்டல்லவா செல்வார்கள்?"

"என்ன கூறுகிறாய் நீ?"

"கார்குழலி மடிந்து போகவில்லையடா முட்டாளே. இதே காஞ்சியில் உயிருடன்தான் இருக்கிறாள்."



பராந்தகனின் இதயம் ஒருகணம் நின்று மீண்டும் இயங்கியது. வார்த்தைகள் குழறின. "கார்குழலி, கார்குழலி... நீ கண்டாயா?... எங்கே... எப்படி?"

"பராந்தகா, பதறாதே, பதறாதே. முழுவதுமாகக் கேள்" என்ற பகதத்தன் சற்றுத் தயங்கிவிட்டுக் கூறினான். "உன்னிடம் உண்மையை மறைத்தது தவறுதான். தானே கூறுவதாக கார்குழலி கூறியதால் நான் தாமதித்தேன். அதற்குள் இப்படியெல்லாம் நடந்துவிட்டது."

"புரியும்படி சொல் பகதத்தா."

"அன்று கார்குழலி, ஆலயத்துக்கு வந்தது என்னைக் காணத்தான். எங்கள் சந்திப்பு ஓராண்டு காலமாக நடக்கிறது. உன் தந்தையிடம் அவளை மணம் புரிந்து கொள்ள அனுமதி கேட்டபோது, நல்ல வாழ்வுக்குத் தேவையான பொருளையும், நல்ல பணியையும் பெற்று வந்து மணம் செய்து கொள் என்றார். அதன் பேரிலேயே நான் காஞ்சிக்கு வந்தேன். அவ்வப்போது வந்து கார்குழலியையும் சந்தித்தேன். அன்றும் என்னைச் சந்தித்துவிட்டுச் செல்லும்போதுதான் ராஷ்டிர கூடர்களிடம் சிக்கிக்கொண்டாள். அவர்களை எதிர்த்துப் போராடிய போது, அவள் தோளில் வாள் வெட்டு ஒன்றும் விழுந்தது. மயங்கிய அவளை மகாராணி ரேவாதேவியிடம் கொண்டு சேர்த்து விட்டார்கள்."

"பிறகு?"

"நான் பின்தொடர்ந்து வந்து அவளைத் தப்பிக்க வைக்க இருமுறை முயன்றேன். முடியவில்லை. மகாராணி யின் மாளிகையிலும் சென்று ரகசியமாகச் சந்தித்தேன். அதுமுதல் சந்தர்ப்பத்தை எதிர்நோக்கிக் காத்திருக்கிறேன்."

பராந்தகனின் விழிகள் பனித்துக் கிடந்தன. "பகதத்தா, உனக்கு நான் எப்படி நன்றி கூறுவேன்... சரி... பாண்டிய

இளவரசியை மீட்கும்போது, கார்குழலியையும் மீட்டுச் சென்றுவிட வேண்டும்."

"அது மட்டுமல்ல பராந்தகா..." உள்அறையின் வாயிலி லிருந்து குணவர்மரின் குரல் ஒலித்தது. "கொற்கையின் முத்துக்களையும் மீட்டுச் செல்ல வேண்டும்," என்றவரின் தோற்றம் பெரிதும் மாறியிருந்தது.

சரிகைகள் மின்னிய தலைப்பாகையுடன், உயர்ரகப் பட்டு அங்கியும், கழுத்தில் ஆடிய மகர கண்டியும் மின்ன பெரும் வணிகனின் தோற்றத்துடன் நின்றார் குணவர்மர். மாறாமலிருந்தது அவரது முறுவலும், நெற்றியிலிட்ட திருமண்ணும்தான்.

அவரது கரங்களில் தந்தத்தாலான, வேலைப்பாடமைந்த பேழையொன்றும் இருந்தது. அந்தப் பேழையைக் கண்ட பகதத்தனின் விழிகள் வியப்பில் விரிந்தன.

"தலைவரே, இதையா இப்போது பயன்படுத்தப் போகிறீர்கள்?" என்றான் வியப்பு குரலில் வழிய.

"ஆம்... இதைப் பயன்படுத்தும் தருணம் வந்துவிட்டது. காஞ்சியில் என் வாணிபத்துக்கு ஒரு முடிவும் வந்து விட்டது. புறப்படுங்கள். நாம் இப்போது மகாராணியின் மாளிகைக்குச் செல்ல வேண்டும்" என்றார் குணவர்மர்.

மகாராணியின் மாளிகையில் அந்தப் பேழையிலிருந்த பொருள் விளைவித்த ஜாலம், இந்திர ஜாலமாயிருந்தது. எவரையும் தன் கைப்பாவையாக்கி ஆட்டி வைக்கும் மகாராணி ரேவாதேவியையே மயங்க வைத்தது அது.



10

## இந்திர ஜாலம் - சந்திர காந்தம்

இரவு நன்றாக ஏறிவிட்ட அந்த நேரத்திலும்கூட குண வர்மரின் ரதம் மகாராணி ரேவாதேவியின் மாளிகையை அடைந்ததும், எந்தத் தடையுமின்றி உள்ளே பிரவேசித்தது. கிடைத்த வரவேற்பும் அபரிமிதமாயிருந்தது. மாளிகை வாயிலை அடைந்ததும் குதித்து இறங்கிய குணவர்மரைத் தொடர்ந்து, இரு சீன வணிகர்களும் தந்தப் பேழையைச் சுமந்தபடி பின்தொடர்ந்தனர். மகாராணியின் மெய்க்காவல் யவனப்பெண் வெளியே வந்து குணவர்மரை வரவேற்றாள். வழியில் நின்ற காவலர்களுக்கும், பணிப் பெண்களுக்கும் சிறு சிறு முடிப்புகளை அளித்தபடியே வந்த குணவர்மர், மகாராணி இருந்த அறையில் நுழைந்து வணங்கினார்.

குணவர்மரைக் கண்டதும் மகாராணியின் முகத்தில் மகிழ்ச்சி பொங்கியது. "வாருங்கள் குணவர்மரே, வெகு காலமாக நீங்கள் தேடிய அபூர்வமான கல் கிடைத்ததாகச்

செய்தி அனுப்பியிருந்தீர்கள். அந்த அபூர்வக் கல்லைக் கொண்டு வந்திருக்கிறீர்களா?" என்றவள் சீன வணிகர்கள் இருந்த பக்கம் திரும்பி, "யாரிவர்கள்? புதிதாகத் தெரிகிறதே" என்றாள்.

"ஆம் மகாராணி. இவர் காஞ்சிக்குப் புதிதாக வாணிகம் செய்ய வந்திருக்கிறார். ஈழத்திலிருக்கும் எனது நண்பரொருவரின் அறிமுக ஓலையுடன் இன்றுதான் வந்தார். நான் கூறிய அபூர்வக்கல் இவரிடம் இருக்கிறது. எனவேதான் இவரை அழைத்து வந்தேன்" என்றார் குணவர்மர்.

சீன வணிகர் இருவரும் மகாராணியை வணங்கினர்.

"வணக்கம் மகாராணி. என்னிடம் இருக்கும் அபூர்வக் கல்லைப்பற்றித் தங்களிடம் கூறியிருப்பதாக குணவர்மர் தெரிவித்தார். உடனே தங்களுக்கு அதை அளிக்க வேண்டுமென்று அடிமைகள் ஓடோடியும் வந்தோம் மகாராணி. தாங்கள் உத்தரவிட்டால் இப்போதே அந்தக் கல்லைத் தங்களுக்குக் காட்டுகிறோம்" என்றான் முதலில் நின்ற சீன வணிகன்.

"சரி, அந்தக் கல்லைக் காட்டுங்கள். அதில் என்ன அத்தனை அபூர்வமாக இருக்கிறதென்று பார்க்கிறேன்" என்ற மகாராணி, மஞ்சத்தில் சென்று அமர்ந்தாள்.

சீன வணிகன் தந்தப் பேழையுடன் முன்னால் வந்தான். "மகாராணி, இந்த அறையிலிருக்கும் பந்தங்களையும், சர விளக்குகளையும் சற்று நேரம் அணைத்துவிட உத்தர விடுங்கள்."

மகாராணியின் முகத்தில் ஆவல் தெரிந்தது. திரும்பி யவன மங்கையரைப் பார்த்தவள், பார்வையாலேயே உத்தர விட்டாள்.



அறைக்குள் இருள் சூழ்ந்தது.

"மகாராணி, உங்கள் கரங்களை முன்னால் நீட்டுங்கள்" கேட்டுக் கொண்டான் சீன வணிகன்.

மகாராணியின் நீட்டிய கரங்களில் பனித்துளிகளின் குளிர்ச்சியோடு, உருண்டையான வழுவழுத்த பொருள் ஒன்று வைக்கப்பட்டது. மங்கலான வெண்ணிற ஒளியுடன் வட்ட வடிவமாகத் தெரிந்த அந்தக் கல், மெல்ல உயிர் பெற்றது. மெல்ல மெல்ல ஒளி கூடத் தொடங்கிய அந்தக் கல், அரை நாழிகை நேரத்தில் பளீரென்ற வெண்ணிற ஒளியுடன் ஜொலித்தது. அறை முழுவதும் ஒளி வெள்ளத்தைப் பாய்ச்சியது. சரவிளக்குகளும், பந்தங்களும் சேர்ந்து அளித்ததைவிட, அதிக ஒளி வெள்ளத்தைப் பாய்ச்சிய அந்தக் கல்லைக் கண்ட மகாராணி பிரமித்தாள்.

மகாராணியின் அறையில் இருள் சூழ்ந்து, பின் திடீரென ஒளி வெள்ளம் பரவியதைக் கண்ட பணிப் பெண்களும், காவல் மங்கையரும், காவல் வீரர்களும் அந்த அறையின் வாயிலில் நெருக்கியடித்து நின்று அந்த அற்புதத் தைக் கண்டு அதிசயித்தனர். மாளிகையே ஆச்சரியத்தில் ஆழ்ந்து கிடந்தது வெகு நேரம்.

அற்புதங்களை நிகழ்த்திய சித்தர்களின் மெய்ஞ்ஞான அறிவும், விஞ்ஞான அறிவும் தமிழகத்தில் அன்றும் இன்றும் ஏராளம். அவற்றை உலகுக்கு உதவுமாறு அவர்கள் எழுதி வைத்துச் சென்ற சுவடிகளும் ஏராளம். அவநம்பிக்கை யாலும், புரிந்துகொள்ளவும், பாதுகாக்கவும் தகுதியுள்ள வர்கள் அற்றுப்போய் விட்டதால், அத்தகைய அற்புதங்கள் பல மறைந்து போய்விட்டன. பல அயல்நாடுகளுக்குச் சென்றுவிட்டன.

ஏதோ முழுநிலவைத் தரையிலிறக்கி, மகாராணியின் தந்தக் கைகளில் வைத்துவிட்டது போல ஒளி வீசிய அந்தக் கல்லும், அத்தகைய அற்புதங்களில் ஒன்றுதான்.

இருள் சூழ்ந்த கணம் முதல், ஒளி பரவத் தொடங்கிய வரையிலும், அதற்குப் பின்னரும்கூட, மற்றொரு சீன வணிகன் அந்த அறையில் காணப்படவில்லை என்பதை, எவரும் கவனித்ததாகத் தெரியவில்லை.

கரங்களில் ஒளி வீசிய அந்தக் கல்லைக் காண விழிகள் கூசியதால், ஒரு பக்கமாக முகத்தைத் திருப்பிக் கொண்டிருந்த மகாராணியின் ஒரு பக்கக் கன்னமும், செவியும் பளிங்குகளாக மின்னின. அறையிலிருந்த சிற்பங்களும், சித்திரங்களும் புதுவிதமாகத் தெரிந்தன.

அந்தக் கல்லை யவன மங்கையிடம் அளித்த மகாராணி, குணவர்மரையும் சீன வணிகனையும் ஏறிட்டாள். அப்பொழுதே பின்னால் வந்து அதிபவ்யமாக சேர்ந்து நின்றுகொண்ட மற்றொரு சீனனின் வருகைகூட, எவராலும் கவனிக்கப்பட்டதாகத் தெரியவில்லை.

குணவர்மர் தமது வலையை விரிக்க ஆரம்பித்தார். "மகாராணி, இதற்கு சந்திரகாந்தம் என்று பெயர். செயற்கை ரத்தின வகைகளில் ஒன்று. சில கடல்மீன்களின் விழிகளும், மூலிகைகளும், முத்துக்கள் சிலவும் குறிப்பிட்ட பதத்தில் கலந்து உருவாக்கப்படுகிறது. இத்தகைய அற்புதங்கள் பல இங்குள்ளவர்களின் அசிரத்தையாலும், பாதுகாக்கும் மனம் இல்லாததாலும் அயல்நாடுகளுக்குச் சென்றுவிட்டன."

சீனத்து வணிகன் குறுக்கிட்டான்: "ஆம் மகாராணி. மலையிலும், கொற்கையிலும் கிடைத்த பொருள்களை வைத்தேதான் இதை உருவாக்கினேன். உங்கள் பொருளை அயல் நாட்டவன் உங்களுக்கே பரிசாக அளிக்கும்போது அதன் மதிப்பு உயர்ந்து விடுகிறது பாருங்கள்! மகாராணி உத்தரவிட்டால் நாளையே இந்த மாளிகை முழுவதும் இந்த சந்திரகாந்தங்களைப் பொருத்தி விடுகிறேன். மகாராணி மனம் குளிர்ந்து, எங்கள் வாணிபம் காஞ்சியில் நடக்க அனுமதியளித்தால் போதும்."



"இன்னும் சில கற்களும் இவரிடமிருக்கின்றன. அதன் நீலநிற ஒளியில் இருநாழிகை நேரம் நிற்பவர்கள் மயக்கமடைவார்கள். விழித்ததும் அவர்கள் அறிந்த உண்மைகளைக் கூறி விடுவார்கள். சீனத்தில் ஒற்றர்களை வசப்படுத்தப் பயன்படும் கற்கள் அவை" என்றார் குணவர்மர்.

ஆவல் பொங்கியது மகாராணிக்கு. பாண்டியரின் படைபலத்தையும் திட்டங்களையும் அறியவும், உடைக்கவும், தனது திட்டங்களையும், பாண்டிய இளவரசி சிக்கியிருப்பதையும் எண்ணியவள், "சீன வணிகரே, அப்படியொரு நீலக்கல் உங்களிடமிருந்தால், அதையும் நாளை நான் கூறும் அறையில் பொருத்தி விடுங்கள்" என்றாள்.

"நாளை மாலை வந்து, மகாராணியின் உத்தரவை நிறைவேற்றிவிடுகிறோம். விடை கொடுங்கள் மகாராணி" என்று வணங்கியவர்கள், குணவர்மருடன் வெளியேறினார்கள்.

மறுதினம் பெரும் பேழைகளுடன் வந்து இறங்கிய சீன வணிகர்களுக்கு, மகாராணியின் மாளிகையில் கிடைத்த வரவேற்பு அபரிமிதமாயிருந்தது.

"மகாராணி, தாங்கள் மேன்மாடத்தில் சற்று ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். கீழ்த்தளம் முழுவதும் சந்திரகாந்தத்தைப் பொருத்தி விடுகிறேன். தாங்கள் கீழே இறங்கி வரும்போது மாளிகை ஒளி வெள்ளத்தில் மூழ்கி

யிருப்பதைக் காணலாம்,"– சீன வணிகன் வெகு அடக்க மாகக் கேட்டுக் கொண்டான்.

இளவரசியிருந்த அறையில் நீலக்கல்லைப் பொருத்த உதவுமாறு யவன மங்கைக்கு உத்தரவிட்ட மகாராணி, மேன்மாடத்துக்குச் சென்றாள்.

அடுத்து சரவிளக்குகளையும் பந்தங்களையும் முழுவதுமாக அணைத்துவிடும்படி கேட்டுக் கொண்ட சீன வணிகர்கள், பேழைகளைத் திறந்து, சிறு மூங்கில் குழாய் களையும், கறுப்புத் துணிகளில் சுற்றப்பட்ட சந்திரகாந்தங் களையும் கூடத்தில் பரப்பி கடை விரித்தார்கள். பணிப் பெண்களும், காவலரும் வணிகன் கேட்ட உதவிகளைச் செய்ய போட்டி போட்டனர்.

ஒவ்வொரு சந்திரகாந்தத்தையும் பொருத்தி, அருகில் இரு பணிப்பெண்களை நிற்கவும், தான் கூறும்போது துணி களை அப்புறப்படுத்தவும் கேட்டுக் கொண்டான் வணிகன்.

**மா**ளிகையின் கீழ்த்தளம் முழுவதும் இருள் சூழ்ந்து கிடந்தது. பணிப்பெண்களோ, காவலரோ தென்படாத தையும் கவனித்த இளவரசி, கார்குழலியை அழைத்தாள்.

"கார்குழலி, அருகில் பணிப்பெண்களைக் காண வில்லையே, மாளிகையும் ஏன் இருளடித்துக் கிடக்கிறது?" என்றாள்.

"தெரியவில்லை இளவரசி. ஆனால் நேற்று வந்து ஓலை கொடுத்துச் சென்ற சீனன் வருவதாகச் சொன்ன நேரம் இதுதான்."

"எனக்கு நம்பிக்கையில்லை கார்குழலி. இத்தனை கட்டுக்காவலை மீறி, நம்மைத் தப்புவிக்க அந்தச் சீனனால் இயலுமா?"



கார்குழலி பதில் கூறுமுன் அறைக்கதவு திறக்கப் பட்டது.

யவன மங்கையொருத்தி சிறு தீபத்துடன் உள்ளே நுழைந்தாள். தொடர்ந்து சீன வணிகர் இருவர் நுழைந்தனர். அடுத்த நேர்ந்த நிகழ்ச்சிகள் குமுதவல்லியின் திகைப்பை உயர்த்தின.

ஒரு சீனன் கதவைத் தாளிட, சற்றுப் பருத்திருந்தவன் யவன மங்கையைப் பின்னாலிருந்து இறுக்கி, அவள் முகத்தில் சீலையொன்றை வைத்து அழுத்தினான். அவள் மயங்கிச் சரிந்தாள்.

கதவைத் தாளிட்ட சீனன் தன் சதுரத் தலைப்பாகை யையும் நீண்ட மீசையையும் விலக்கி, இளவரசியை நெருங்கி வணங்கினான். கீழே உருண்டு கிடந்த தீபத்தின் ஒளியில், அவன் கரத்தில் முத்திரை மோதிரமொன்றும் பளபளத்தது.

"இளவரசி, நான் பராந்தகன். உங்கள் படைத்தலைவ ராலும், எமது விக்கிரமவரையராலும் அனுப்பப்பட்டவன்" என்றான்.

அவன் வார்த்தைகளை முடிக்குமுன்பாக, அறையில் கார்குழலியின் குரலில் "அண்ணா" என்ற விம்மல் வெடித்தது. துக்கம் பொங்கிவரப் பாய்ந்த கார்குழலி, கண்களில் நீர் வழிய பராந்தகனின் மார்பில் சரிந்து அணைத்தபடி கேவினாள்.

ஒரு கரத்தால் அவளை அணைத்து, குழல்களைக் கோதிய பராந்தகன் குரலில் சோகம் வழிந்தது. "கார்குழலி, நீயும் மடிந்து விட்டாயென்றே எண்ணிவிட்டேனம்மா. இங்கு வந்தபின் பகதத்தன்தான் அனைத்தையும் கூறினான்" என்றான் பராந்தகன்.

பராந்தகன் மார்பில் புதைந்து கிடந்த முகத்தைத் திருப்பி, விழிகளை உருட்டிக் கொண்டு சீன வணிகனாக நின்ற பகதத்தனைக் கண்ட கார்குழலியின் முகத்தில், கண்ணீரோடு சேர்த்து வெட்க நகையொன்றும் பூத்து மின்னியது. இளவரசிக்கு சகலமும் ஒருகணத்தில் புரிய, உணர்ச்சி பொங்க நின்றாள்.

பகதத்தனின் குரல் சற்று உயர்ந்து ஒலித்தது. "அடேய், பராந்தகா, இளவரசி, கார்குழலி... நாம் உணர்ச்சிவசப்பட்டு நிற்கும் நேரமல்ல இது. இருவரையும் சாளரத்தின் வழியே வெளியே இறக்கிவிடு."

கார்குழலியை விலக்கி சாளரத்தை அடைந்த பராந்தகன், "இளவரசி, வாருங்கள்" என்று அழைத்தான். அருகில் நெருங்கியவளை, ஏதோ சிறு குழந்தையைத் தூக்குவது போல் தூக்கி, மறுபுறம் இறக்கியவன், "இளவரசி, வலதுபுறச் சுவரோரமாகச் சென்றால் மாளிகையின் முகப்பில் நிற்கும் எங்கள் சீன ரதத்தை அடையலாம். அதன் பின்புறத்தில் அடிமைகளுக்கான இருக்கை, சீலைகள் மூடப்பட்டு இருக்கிறது. சென்று அமர்ந்து கொள்ளுங்கள். சற்று நேரத்தில் வந்துவிடுகிறோம். காவலர் எவரும் இல்லை. அஞ்ச வேண்டாம்" என்றான்.

கார்குழலியையும் சாளரத்தின் வழியே மறுபுறம் இறக்கி, இருவரும் சுவரோரமாக, அரவமின்றிச் சென்று முகப்பில் நின்ற ரதத்தின் பின்பகுதியில் பதுங்குவதைப் பார்த்து, பின்பே உள்ளே திரும்பிய பராந்தகன், "அந்த நீலக்கல்லை எடு" என்றான்.

நீலநிறச் சந்திரகாந்தக் கல்லை அறைக்குள் பொருத்திய இருவரும், மீண்டும் சீன வணிகராக தலைப்பாகையையும், நீண்ட மீசையையும் பொருத்திக் கொண்டனர்.



கீழே உருண்டு கிடந்த யவன மங்கை இலேசாகப் புரண்டு முனக ஆரம்பித்தாள்.

மயக்கம் தரும் மூலிகைச் சீலையை மீண்டும் அவள் முகத்தில் வைத்து அழுத்திய பகதத்தன், "பராந்தகா, வா, நாம் விரைவில் வெளியேற வேண்டும்" என்றான்.

இருவரும் இருளில் மெல்லத் தடவியபடி, கூடத்தை அடைந்தபோது, "என்ன, சீன வணிகரே, உங்கள் பணி முடிந்துவிட்டதா?" என்ற அதிகாரக் குரல் ஒலித்தது.

மேன்மாடத்திலிருந்து இறங்கிய படிகளில், மகாராணி ரேவாதேவி வெகு ஒயிலாக நின்றிருந்தாள்.





(11)

## நெருங்கும் அபாயம்!

இருளில் கானகத்தில் செல்லும்போது திடீரென்று ஒலிக்கும் ஒற்றை யானையின் பிளிறலும், சிறுத்தையின் உறுமலும் ஏற்படுத்தக் கூடிய பதற்றத்தையும், அச்சத்தையும், சாதாரண மனிதக்குரலொன்று, இருக்கும் சூழ்நிலையைப் பொறுத்து ஏற்படுத்த இயலும் என்பதை நிரூபித்துக் கொண்டிருந்தார்கள் பகதத்தனும், பராந்தகனும்.

சற்றே அதிகாரம் கலந்திருந்தாலும், மகாராணி ரேவா தேவியின் குரல் இனியகுரல்தான். எனினும் திட்டமிட்டபடி அனைத்தையும் முடித்துக்கொண்டு வெளியேறும் தருணத்தில் மகாராணியை எதிர்பார்க்காததால் "பணி முடிந்து விட்டதா சீன வணிகரே?" என்றவளின் குரல் பகதத்தனுக்கும், பராந்தகனுக்கும் சற்றுப் பதற்றத்தை ஏற்படுத்தவே செய்தது.



ஒரு கணப்பொழுதே விழித்த சீன பகதத்தன், திரும்பிப் பராந்தகனைப் பார்த்து, "சிங் தூ யாங் ஹூ சிய்..." என்று தொடர்ந்து சீன மொழியில் இலேசாகக் குரலை உயர்த்தி இரைந்தான். மீண்டும் மகாராணியை நோக்கி வணங்கியவன், "மகாராணி, மன்னிக்கவேண்டும். கீழ்த்தளம் முழுவதும் சந்திரக்காந்தங்களைப் பொருத்திவிட்டேன். அந்த நீலக் கல்லையும் தாங்கள் கூறிய அறையில் பொருத்திவிட்டேன்" என்றான்.

"பிறகென்ன?"

"அந்த நீலக்கல் ஒளிவிடத் தொடங்கும்போது இரு நாழிகைக்குள் அதன்மீது மூலிகைச் சாறொன்றைத் தடவ வேண்டும். அதைக் கொண்டு வர மறந்திருக்கிறான் இந்த முட்டாள். மகாராணி அனுமதியளித்தால் நான் இப்பொழுதே சென்று அதைக் கொண்டு வந்துவிடுகிறேன்."

"அவ்வளவுதானே, சரி, விரைவில் சென்று கொண்டு வாருங்கள்" என்றாள் மகாராணி.

வணங்கி நகர்ந்த பகதத்தன், வாசல் வரையில் சீன மொழியில் பராந்தகனை ஏசியபடியே வெளியே வந்து, ரதத்தில் பாய்ந்து ஏறினான்.

மாளிகையை விட்டு வெளியேறிய ரதம், கோட்டையின் வடக்கு வாயிலையடைந்து, வணிக ரதங்களுடன் மல்லைத் துறைக்குச் செல்லும் சாலையில் சென்று, பின்பு தென் மேற்கில் திரும்பி கனவேகத்தில் பறந்தது.

**கா**ஞ்சி அரண்மனையில் சீன வணிகர்கள் விட்டுச் சென்ற சந்திரகாந்தங்களின் ஒளியில் மகாராணி ரேவாதேவியின் அழகிய முகம் சிவந்து, விழிகள் ஜொலித்து அனலை வாரிக் கொட்டிக் கொண்டிருந்தன. பணிப்பெண்களும்,

காவலரும் அவள் காலடியோசை கேட்டதுமே பதுங்கி மறைந்தனர். அடிபட்ட வேங்கையைப் போல் முன்னும் பின்னும் உலவியவள், வணிகர்களைத் தேடவும், குண வர்மரை அழைத்து வரவும் உத்தரவிட்டுக் காத்திருந்தாள். குணவர்மர் முந்தைய இரவே மல்லைத் துறைக்குச் சென்று விட்டதாகவும், அந்த மாலைப் பொழுதில் திரும்பக்கூடும் என்றும் வீரர்கள் தெரிவித்திருந்தனர்.

பல்லவ மன்னருக்கு குணவர்மர் மீதிருந்த அன்பும், மதிப்பும் அவள் ஏற்கெனவே அறிந்தவைதாம். இதற்கு முன்பும் அவர் பல வணிகர்களை அறிமுகப்படுத்தி யிருப்பதை நினைத்துக் கொண்டவள், சீன வணிகர்கள் செயலுக்கு அவர் எத்தனை தூரம் பொறுப்பேற்க முடியும், உதவியிருக்க முடியும் என்பதைத் தீர்மானிக்க இயலாமல் திணறினாள்.

அவள் குழப்பத்தைத் தீர்க்க, குணவர்மரின் ரதம் வேகமாக வந்து வாயிலில் நின்றது.

ரதத்திலிருந்து இறங்கியவர் வெகு நிதானமான நடை யுடன், முறுவல் மாறாத முகத்துடன், வெகு சகஜ பாவத்துடன் உள்ளே நுழைந்தார். சுற்றிலும் பார்வையை ஓடவிட்டவர், "மகாராணி, சீன வணிகர் தம் பணியை திறம்படவே செய்திருக்கிறார். நன்று, நன்று" என்றார் மலர்ந்த முகத்துடன்.

அவரது நிதானமும், பாராட்டும் மகாராணியை அசர அடித்தன. "அவர்கள் உங்கள் இல்லத்தில் இல்லையா?" என்றாள் மகாராணி.

"இல்லை மகாராணி. அவர்களது உறவினர் பலர் இங்கு இருப்பதாகவும், அவர்களுடன் தங்கியிருப்பதாகவும் கூறினார்கள்."



"இதற்கு முன் அவர்களை அறிவீர்களா?"

குணவர்மரின் முகத்தில் சந்தேகச் சாயை பரவி, புருவங்கள் முடிச்சிட்டுக் கொண்டன. "இல்லை மகாராணி. தங்களிடம் நேற்றே கூறினேனே. என் ஈழத்து நண்பரின் அறிமுக ஓலையுடன் நேற்றுதான் வந்தனர். சந்திர காந்தம் அவர்களிடம் இருந்ததால் அழைத்து வந்தேன். ஏன் மகாராணி, தவறு ஏதும் நேர்ந்துவிட்டதா? தங்களின் விசாரணை ஐயத்தை ஏற்படுத்துகிறது" என்றார் குணவர்மர்.

அவரது நேர்ப்பார்வையும், தெளிவான பதில்களும் மகாராணியின் சந்தேகத்தை அறவே துடைத்துவிட்டன. "குணவர்மரே, நான் ராஜாங்க நலனுக்காகச் சிறை வைத் திருந்தவர்களை, சீன வணிகர்கள் தப்பிக்க வைத்து விட்டனர். என் பொக்கிஷத்திலிருந்து முத்துப் பேழை களையும் எடுத்துச் சென்றுவிட்டனர்" என்று தொடங்கி, நடந்ததை விவரித்தாள்.

குணவர்மரின் முகத்தில் வருத்தம் பூரணமாகப் படர்ந்தது. "மகாராணி, காஞ்சியில் இதுவரை நான் பெற்றிருந்த நற்பெயர் சீன வணிகர்களால் பாழ்பட்டு விட்டது. ராஜாங்க நலன் என்பதால் தாங்கள் என்னை இப்போதே சிறை செய்துவிடுங்கள். உரிய தண்டனை எதுவானாலும் ஏற்கச் சித்தமாக இருக்கிறேன். என் வாணிபத்தையும் இன்றோடு முடித்துக் கொள்கிறேன். மன்னர் வந்ததும் என்னை ஒப்படைத்து விடுங்கள்" என்றார் வருத்தம் பூரணமாகத் தொனித்த குரலில்.

பல்லவ மன்னர் வந்தபின் இதை விசாரிப்பதால், தான் இளவரசியையும், முத்துக்களையும் கடத்தியதும், ராஜ மாதுலரை இதில் ஈடுபட வைத்ததும் வெளிவரும் என்பதைச்

சிந்தித்த மகாராணி, "வருந்த வேண்டாம் குணவர்மரே. சீன வணிகர்களின் உள்நோக்கம் அறியாமல் நீங்கள் அழைத்து வந்தீர்கள் என்பதைத் தவிர, வேறு குற்றமேதும் நீங்கள் செய்யவில்லை. சென்று வாருங்கள். மன்னர் வந்தபின் தங்களை அழைக்கிறேன்" என்று விடை கொடுத்தாள்.

குணவர்மர் அகன்றபின் நெடுநேரம் சிந்தனையில் ஆழ்ந்த மகாராணி, அடுத்து ராஜமாதுலரை அழைத்துவர உத்தரவிட்டாள்.

ராஜமாதுலரிடம் நடந்தவற்றை விவரித்தவள், பாண்டிய இளவரசியை மீண்டும் சிறைப்பிடிக்கவும், அதைப் பல்லவ மன்னரும் ஏற்கும் வகையில் நிறைவேற்றவும், தான் வகுத்த திட்டத்தை மெல்ல விவரிக்க ஆரம்பித்தாள்.

கிருஷ்ணபட்சம் துவங்கி ஐந்து தினங்களுக்கு மேல் ஓடிவிட்டதால், ஓரத்தில் கிள்ளியெடுக்கப்பட்ட நிலவு மெல்ல வானின் உச்சியை அடைய முயன்றபடியே, மங்கலான ஒளியை வீசிக் கொண்டிருந்தது. தென்மேற்கே அதிவேகமாக விரைந்து கொண்டிருந்த அந்த ரதம், பல்லவ நாட்டு எல்லையை நெருங்கிக் கொண்டிருப்பதையும், எந்த நேரத்திலும் எல்லைக் காவலுக்கு இருக்கும் ராஷ்டிர கூடராலோ, காஞ்சியிலிருந்து தேடியபடியே தொடர்ந்து வந்த வீரர்களாலோ சூழப்பட்டு விடலாமென்பதை உணர்ந்த தால், விண்மீன்களும் அச்சத்தில் கண்களைச் சிமிட்டிய படியே உற்று நோக்கிக் கொண்டிருந்தன.

ரதத்தினுள் கார்குழலி, தான் வண்டாழஞ்சேரியிலிருந்து கொண்டுவரப்பட்டது முதல், நடந்தவற்றை விம்மல் களுக்கிடையே கூறக் கேட்டபடியே வந்தான் பராந்தகன். அவள் பட்ட இன்னல்களைக் கேட்ட இளவரசியின் மனம் பாகாக உருகிக் கிடந்தது.



சற்று நேரம் மௌனமாக இருந்த பராந்தகன், மெல்லக் கேட்டான்: "கார்குழலி, நீ அன்று ஆலயத்துக்கு வந்தது இந்த பகதத்தனைக் காணத்தானா?"

ரதத்தைச் செலுத்திக் கொண்டு வந்த பகதத்தன், குரலைச் செருமிக்கொண்டான்.

கார்குழலியின் தலை கவிழ்ந்து, இளவரசியின் தோளுக்குப்பின் பதுங்கியது. சிறு நகைப்புடன் அவளை இழுத்துத் தன்னோடு அணைத்துக் கொண்டாள் இளவரசி. காற்றில் குளிர் அதிகரிப்பதை உணர்ந்த பராந்தகன், ரதத்தின் பின்புறமிருந்த சீலையை எடுத்து இருவரையும் போர்த்தினான். கனத்த சீலை அளித்த வெம்மையில், ரதத்தின் பக்க அசைவில், புரவிகளின் சீரான குளம்படி ஓசையில், இளவரசியின் மென்மையான தோள்களில் தலை சாய்த்த கார்குழலியின் விழிகள் மெல்ல மூடின. மகாராணியின் மாளிகையிலிருந்து மீண்டுவிட்ட நிம்மதி அவள் இதழ்களில் முறுவலாக மலர்ந்து கிடந்தது.

பராந்தகனின் விழிகள் கார்குழலியைப் பரிவுடன் அணைத்துக்கொண்ட இளவரசியின் மீது பதிந்தன. பின்பு உயர்ந்து வானத்து விண்மீன்களை ஆராயத் தொடங்கின.

பராந்தகனின் சலனமற்ற முகத்தையும், வெறித்த பார்வையையும், விசாலமான நெற்றியையும், சுருண்டு பக்கங்களில் இறங்கிய குழல்களையும் கவனித்தபடியே வந்த இளவரசியின் விழிகளில் ஏதோ பளிச்சிட்டது. மதுரை அரண்மனையின் சித்திரக் கூடத்தில், தான் கண்டிருக்கும் முகங்களும், சித்திரமாகத் தீட்டப்பட்டிருக்கும் சம்பவங்களும் அவள் நினைவில் எழுந்தன.

தன் தோளில் சாய்ந்து கொண்டிருந்த கார்குழலியையும் நோக்கிய இளவரசி, "இவர்கள் வண்டாழஞ்சேரியின்

சாதாரண விவசாயக் குடிகளுமல்ல, இவர் சாதாரண வீரருமல்ல. தந்தையிடம் இதுபற்றி விசாரிக்க வேண்டும்'' என்று முணுமுணுத்துக் கொண்டாள்.

அடுத்து அவள் விடுத்த "சோழ வீரரே" என்ற அழைப்பில் கனிவு தெரிந்தது.

"என்ன இளவரசி" என்றான் பராந்தகன்.

"என்னைக் காஞ்சியிலிருந்து மீட்டிருக்கிறீர்கள். அதற்கு எனது நன்றி. உங்கள் விருப்பமென்ன என்று கூறினால், தந்தையிடம் நீங்கள் விரும்புவதை பரிசாக அளிக்கச் செய்கிறேன்."

"நன்றி கூற வேண்டியது நான்தான் இளவரசி. உங்களை மீட்க வந்ததால்தான் கார்குழலி உயிருடன் இருப்பதையும், பகதத்தனின் அன்பின் ஆழத்தையும் அறிய முடிந்தது. நான் விரும்புவதும் ஒன்றே ஒன்றிருக்கிறது. சோழ நாட்டின் விடுதலை. அதை வேண்டியே, உங்கள் தந்தையிடம் உதவி கோரி நானும் படைத் தலைவரும் வந்தோம்."

"பாண்டிய மன்னர் நிச்சயம் உங்களுக்கு..." இளவரசியின் வார்த்தைகள் சட்டென்று நின்றன. பிரதான பாதையிலிருந்து ரதம் திடீரென்று கரடுமுரடான பாதையொன்றில் திரும்பியது.

"பகதத்தா, ஏன் ரதத்தைத் திருப்பினாய்?"– பராந்தகன் கேட்டான்.

"தூரத்தில் புரவிகள் வருவதாகத் தெரிகிறது பராந்தகா. எல்லைக் காவலுக்கிருக்கும் ராஷ்டிரகூடரின் படைப் பிரிவென்று எண்ணுகிறேன்," என்றான் பகதத்தன்.

"சரி, வேறு பாதையேதும் இருக்கிறதா?"



"இந்தப் பாதையின் முடிவில் என் நண்பரொருவரது சத்திரம் இருக்கிறது. அங்கு சென்று சற்று ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். நான் சென்று நிலைமையைக் கண்டறிந்து வந்தபின் நாம் மீண்டும் புறப்படலாம்" என்ற பகதத்தன், ரதத்தை அந்த கிளைப்பாதையில் தொடர்ந்து செலுத்தினான்.

சற்றுத் தொலைவு சென்றதும் பெரும் மாளிகையொன்று புலப்பட்டது. பார்த்தவுடன் அது எல்லைப் புறத்தில் அரச குடும்பத்தினர் வந்து தங்கும் மாளிகையாக இருக்க வேண்டுமென்பதும், தற்போது வழிப் போக்கர் தங்கும் சத்திரமாகியிருக்க வேண்டுமென்பதும் புரிந்தது.

உயர்ந்த தூண்களும், வலுவான சுவர்களும், பெரும் சாளரங்களும், மரக் கதவுகளுமாகத் தெரிந்த அந்த மாளிகையின் முகப்பில் ரதத்தைக் கொண்டு நிறுத்தினான் பகதத்தன்.

கீழே குதித்து உள்ளே சென்ற பகதத்தன், சற்று நேரத்தில் ஒரு பருத்த யவனனுடன் வந்தான்.

"பராந்தகா, தற்போதைக்கு இங்கு ஏதும் அபாயமில்லை. பாலும், கனிவகைகளும் இருக்கின்றன. இறங்கி உள்ளே வந்து சற்று ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். நான் சென்று எல்லைப்புறத்தின் நிலைமையைக் கண்டு வருகிறேன்" என்றான் பகதத்தன்.

சத்திரத்தின் உள்ளே கூடமும், அறைகளும் விசாலமாகத் தெரிந்தன. மஞ்சங்களும், இருக்கைகளும் உயர்ந்த வகையாகவும், அதிகம் பயன்படுத்தாதவையாகவும் புலப்பட்டன.

கனி வகைகளையும் பாலையும் அருந்தியவர்கள் ஓய்வு கொள்ள, பகதத்தன் புறப்பட்டுச் சென்றான்.

சாளரத்தின் வழியே வந்த இளங்காற்றும், சுகமான மஞ்சமும் உறக்கத்தை வரவழைக்க, கார்குழலியும், இளவரசியும் சற்று நேரத்தில் உறக்கத்தின் வசப்பட்டனர்.

அபாயம் நெருங்குவதை உணராத பராந்தகனும்கூட, மெல்லக் கண்ணயர முயன்றான். விடிவதற்கு அரை ஜாம நேரமிருக்கையில் அந்த அபாயம், சத்திரத்திலிருந்தவர்களை அதிவேகமாக நெருங்கியது.





(12)

## மாதுலர் மயக்கம், வீரர் தயக்கம்

காஞ்சி அரண்மனையில், மகாராணியின் மாளிகைக் கூடத்தில் சந்திரகாந்தங்களின் ஒளியில், எதிரே அமர்ந்திருந்த ராஜமாதுலரின் சித்தம் சலித்துக் கிடப்பதை மகாராணியால் எளிதில் புரிந்துகொள்ள முடிந்தது. 'மதுவும் மங்கையும் தேவைப்படாதவன் உலகில் பிறக்கவே தேவையில்லை' என்ற சித்தாந்தத்தில் பூரண ஈடுபாடு அவருக்கிருப்பதையும் அறிந்தே தானிருந்தாள் அவள். சலனப்பட்ட அவரது விழிகள் சந்திரகாந்தத்தின் ஒளியில் பேராசை மின்ன, அந்த யவன மங்கையர் மீது பதிந்திருப்பதையும் கவனித்தாள். தான் கூறும் திட்டமெதுவும் அவரது சித்தத்தில் தற்போது ஏறாது என்பதும் புரிந்ததால், அந்த யவன மங்கையரிடம் விழிகளால் அவரை கவனிக்க உத்தரவிட்டு, எழுந்து உள்ளே நடந்தாள் மகாராணி.

அடுத்து அவரை நெருங்கி மேலே விழாத குறையாக, உயர்ந்த யவனநாட்டு மது வகையை கிண்ணங்களில் ஊற்றிக் கொடுத்து உபசரிக்கத் தொடங்கினர் அந்த மங்கையர்.

சற்று நேரத்தில் திரும்பி வந்த மகாராணியின் கரங்களில் இரு ஓலைக் குழல்கள் இருந்தன.

"ராஜமாதுலா, இப்போது நம் திட்டங்களைத் தொடர, உன் ஒத்துழைப்பு அவசியம். இந்த ஓலைகளில் அடுத்து ராகுலன் திருவெள்ளறையில் செய்ய வேண்டிய பணியும், கொங்குநாட்டு செந்ததேவராயனைத் தொடர்பு கொள்ளவும் உத்தரவுகளிருக்கின்றன. இவற்றை நீயே எடுத்துச் சென்று அவனிடம் கொடுத்துவிடு." என்றாள் மகாராணி. தொடர்ந்து,

"ராஜமாதுலா, உன் அற்ப சந்தோஷங்களுக்காக நம் திட்டங்களில் கவனமின்றி இருந்துவிடாதே. தேவையானால் இந்த இரு யவன மங்கையரையும் உன்னுடன் அழைத்துச் செல். நாளைக் காலை ராகுலனைச் சந்திக்க நீ புறப்பட்டு விட வேண்டும், புரிந்ததா?"

"உன்னை சகோதரியாகப் பெற்றது என் பாக்கியம் மகாராணி" என்ற ராஜமாதுலர் யவன மங்கையருடன் புறப்பட்டார், தமது மாளிகைக்கு.

அவரது மாளிகையை அடைந்தபின் அவர் இழுத்த இழுப்பிற்கெல்லாம் வளைந்து கொடுத்த யவன மங்கையர், குவளை குவளையாக மதுவைக் கொடுத்து அவரைப் பூரண மயக்கத்தில் ஆழ்த்தினர். முழுவதுமாக மயங்கிக் கிடந்தவரை மஞ்சத்தில் கிடத்திய யவன மங்கையர் முகங்களில் விஷமப் புன்முறுவல் மின்னின.

தமிழில் கூறுவதை ஓரளவு புரிந்து செயல்பட மட்டுமே தெரியும் என்றும், எழுதவோ, வாசிக்கவோ அறியாதவர்கள்



என்றும் மகாராணியாலும், ராஜமாதுலராலும் பூரணமாக நம்பப்பட்ட அந்த மங்கையரில் ஒருத்தி, அடுத்தவளுக்கு ஏதோ சைகை காட்டினாள். அடுத்து ராஜமாதுலரிடமிருந்து அந்த இரு ஓலைக் குழல்களையும் எடுத்துப் பிரித்தவள், வேறு ஓலைகளை எடுத்து, அதில் அப்படியே நகலெடுக்கத் தொடங்கினாள்.



நகலெடுத்து முடித்ததும் மீண்டும் அடுத்தவளிடம் ஏதோ கூறிவிட்டு, மாளிகையின் பின்பக்கமிருந்த இரண்டொரு காவலரிடமும் பேசிவிட்டு இருளில் வெளியேறி, அந்த ஓலைகளைச் சேர்க்க வேண்டிய இடம் நோக்கி விரைந்தாள்.

**அ**ரண்மனையில் பிறந்து வளர்ந்தாலும், விடியலில் எழுந்துவிடும் பழக்கமுடைய குமுதவல்லிக்கு, அன்றும் கருக்கல் நேரம் முடியுமுன்பே விழிப்பு வந்தது. அருகில் அயர்ந்து உறங்கிய கார்குழலியை எழுப்ப மனமின்றி மெல்ல எழுந்து, சத்திரத்தின் பின்பகுதிக்கு வந்தாள்.

விடிவதற்கு இன்னும் சில நாழிகைகளே இருந்தன. கீழ் வானத்தில் வெளிச்சக் கீற்றுகள் புலப்படத் தொடங்கியதை வானத்து வெள்ளி விழித்து விழித்துப் பார்த்துக் கொண்டிருக்க, விரிந்து கிடந்த வயல் வெளிகளில், மாடுகளின் கழுத்தில் கட்டப்பட்டிருக்கும் மணிகளின் ஓசையும், கிராமத்து மனிதர்களின் அதட்டும் குரல்களும் தொலைவில் ஒலித்தன. தூரத்தில் மெல்லத் தெரியும் நிழலுருவமாய் அழகிய கிராமமொன்றும் புலப்பட்டது.

சத்திரத்தைச் சுற்றியிருந்த மரங்களில் கிள்ளைகளும், மைனாக்களும் கீச்கீச்சென்று குரல் கொடுக்கத் தொடங்கின. வயல்களுக்கு நடுவே நீண்டு கிடந்த பாதையொன்றும், நீண்ட ஸர்ப்பம் படுத்துக் கிடப்பதுபோல் வளைந்து வளைந்து புலப்பட்டது.

ஆடம்பரமும், ஆரவாரமுமின்றி அமைதியாக விடியலை எதிர்கொண்டிருந்த அந்த எளிய கிராமத்தைக் கண்டவளுக்கு, சற்று ஏக்கமும் பிறந்தது. அடுத்து,

'அந்தச் சோழவீரரின் கிராமமும் இப்படித்தானிருக்கும் அல்லவா? சோழநாட்டு கிராமங்கள் இன்னும் அழகானவை. அவரும் இப்படித்தான் விடியலில் மாடுகளுடன் வயல் வரப்புகளில் சென்றிருப்பார். ஆனால் இப்போது அவரது தோரணையும், நடையும் சாதாரண கிராமத்து மனிதராகத் தெரியவில்லையே. விசாலமான நெற்றியும், சுருண்டு பக்கங்களில் தொங்கும் குழல்களும், கூர் நாசியும், வலுவான கரங்களும்... என்ன, நான் அவரைப் பற்றி அதிகமாக சிந்திக்கிறேனோ!' என எண்ணியவளின் முகம் சிவந்து அசல் குமுதமாயிற்று. அதுவரை அவள் அனுபவித்தறியாத உணர்வும், வெட்கமும் அவளை ஆக்கிரமித்தன. தன் உணர்வுகளைக் குறித்து, தன்னையே வியந்து கொள்ளவும் செய்தாள் இளவரசி. அவளது உணர்ச்சிகளை இன்னும் கிளற பின்னாலிருந்து ஒலித்தது ஒரு குரல்.

"இளவரசியார் விடியலின் அழகில் ஈடுபட்டிருப்பதாகத் தெரிகிறது."

சட்டெனத் திரும்பியவள், சத்திரத்தின் பின்புறக் கதவில் சாய்ந்து பராந்தகன் நிற்பதைக் கண்டாள். அவன் சாய்ந்து நின்ற விதம், நெடுநேரமாகத் தன்னை கவனித்தபடி அவன் நின்று கொண்டிருக்க வேண்டுமென்பதைப் புலப் படுத்தியது.

மெல்ல தன்னைத் திடப்படுத்திக் கொண்ட குமுதவல்லி, "ஆம் சோழ வீரரே, எதிரில் தெரியும் கிராமம் எத்தனை எளிமையாக, அழகாய்த் தெரிகிறது! பார்க்கும்போதே மனதுக்கு இதமும் நிம்மதியும் பிறக்கிறது" என்றாள்.



"ஆம் இளவரசி, தேவைகளை உயர்த்திக்கொண்டு, வாழ்க்கையின் தரம் உயர்ந்துவிட்டதாக எண்ணுகிறோம். ஆனால் ஒவ்வொரு தேவைக்கும் மனநிம்மதியில் ஒரு பங்கைக் கொடுத்துத்தான் பெறுகிறோம். மனிதன் ஏனோ இதைப் புரிந்து கொள்வதே இல்லை. ஆனால்..."

எளிமைக்கு இதைவிட அழகான விளக்கம் இருக்க முடியாதென நினைத்த இளவரசி, "ஆனால் என்ன வீரரே?" என்றாள்.

பராந்தகன் மெல்லச் சிரித்தான். "இளவரசி, தற்போது நம் தேவை இங்கிருந்து முழுதாகத் தப்பி, பாண்டிய நாட்டை அடைவது. அதற்கும் தடை வந்து கொண்டிருக்கிறதென்று நினைக்கிறேன். அதோ பாருங்கள்" என்றான்.

அவன் சுட்டிக்காட்டிய திசையில், வயல்களுக்கிடையே நீண்டுகிடந்த பாதையும், அதில் வெகு தூரத்தில் புழுதிப் படலமும் புலப்பட்டன.

அதே சமயத்தில் சத்திரத்தின் வாயிலில், புரவியொன்று கனவேகமாக வந்து நிற்கும் ஒலியும், அடுத்து பகதத்தனின் குரலும் கேட்டன.

"பராந்தகா... பராந்தகா... கார்குழலி..."

பராந்தகனும் குமுதவல்லியும் சத்திரத்தின் கூடத்தை அடைந்து, விழிகளை உருட்டிக்கொண்டு பதற்றத்துடன் நின்ற பகதத்தன் முன்பாக நின்றனர். கார்குழலியும் எழுந்து வந்தாள்.

"என்ன நேரிட்டது பகதத்தா?"

"பராந்தகா, யவக்கிரீவனைத் துரத்திய பூதத்தைப் போல, காஞ்சியிலிருந்து ராஷ்டிரகூடர்கள் சினத்து ரதத்தை

விசாரித்துக் கொண்டே நம்மைத் தொடர்ந்து வந்து விட்டார்கள்."

பராந்தகன் கடகடவென்று பலமாகச் சிரித்தான்.

"அடேய், இது சிரிப்பதற்கான சமயமா?"

"ஒன்றுமில்லை பகதத்தா, உன் புராணக் கதைகளை காஞ்சியிலேயே விட்டுவிட்டாயோ என்று நினைத்தேன். மூன்று தினங்களாகக் காணவில்லையே. மீண்டும் ஆரம்பித்துவிட்டாயே என்று சிரித்தேன்" என்றான் பராந்தகன்.

"என்ன செய்வது? அங்கு என் கதையைக் கேட்பார் யாருமில்லை. சரி. நாம் விரைவில் புறப்பட வேண்டும். அபாயம் நெருங்கிக் கொண்டிருக்கிறது."

அனைவரும் நிலைமையைப் புரிந்து, விரைவாக வாயிலை அடையத்தான் செய்தார்கள். அவர்கள் ரதத்தை அடையுமுன்பாக, சத்திரத்தின் முன்னாலிருந்த கிளைப் பாதையில் புரவிகள் பல பாய்ந்து வந்தன. வாட்களையும் ஈட்டிகளையும் உயர்த்தியபடி, இருபதுக்கும் குறையாத ராஷ்டிரகூடர்கள் பாய்ந்து வந்தனர்.

நிலைமை விஞ்சிவிட்டதை உணர்ந்த இளவரசி, விழிகளில் அச்சம் படர நின்ற கார்குழலியை அணைத்து, "அஞ்சாதே கார்குழலி" என்றாள். அவள் விழிகள் பராந்தகனை நோக்கின.

அவன் முகத்தில் சலனமேதுமில்லை. சற்றுமுன் பலமாகச் சிரித்ததன் மிச்சம் இன்னுமிருக்க, ரதத்தை அணுகியவன் இருக்கைக்குக் கீழிருந்து பகதத்தனின் பட்டையான வாளை எடுத்து அவனிடம் நீட்டிவிட்டு, தன் பெரும் வாளையும் எடுத்துக்கொண்டான்.



சீனத்து ரதத்தையும், சத்திர வாயிலில் நிற்பவர்களையும் கண்டுவிட்ட ராஷ்டிரகூடர்கள், புரவிகளிலிருந்து இறங்கிப் பாய்ந்து வந்தனர். பராந்தகன் நிதானமாக முன்னே நடந்தான்.

பராந்தகனுக்கு முன்பாகப் பாய்ந்துவிட்ட பகதத்தனின் நீண்ட சீனத்து அங்கி பறந்து சுழல, பட்டையான அவன் வாள் கனவேகத்தில் சுழன்று, வருபவர்களைத் தேக்கியது. பார்வைக்குச் சற்றுப் பருத்த தேகமும், உருண்ட பெரு விழிகளுமாய் பகதத்தன் வாளை வீசிய லாகவமும், வேகமும் ராஷ்டிரகூடர்களை அசர அடித்தன.

பராந்தகனை நெருங்கியவர்கள் அவன் கரத்திலிருந்த வாளைக் கண்டு திகைத்தார்கள்.

பராந்தகனின் கைவாள் அவர்களை பிரமிக்க வைத்தது என்றால், நீண்ட அவன் கரமும் வாளுமாகச் சேர்ந்து தொலைவிலேயே தங்களை நிறுத்தியதையும், பக்கவாட்டில் அணுக முயன்றவர்கள், பட்பட்டென்று சரிந்து விட்டதையும் கண்டவர்கள், அது சுத்தமான சோழப் படைத்தலைவர்களின் அதிவேக வாள் வீச்சு என்பதைப் புரிந்து இன்னும் பிரமித்தார்கள். போதாக்குறைக்கு, பக்கத்துச் சாளரத்தி லிருந்து சத்திரத்து யவனனின் பெரும் வில் விடுத்த அம்புகள், ராஷ்டிரகூடர்களை மளமளவெனச் சரிக்கத் தொடங்கின.

இளவரசியை மீண்டும் சிறை செய்வது அத்தனை சுலபமல்ல என்பதைப் புரிந்துகொண்ட ராஷ்டிரகூட வீரர் தலைவன், தன் வீரர்களில் ஒருவனை அழைத்து, உடனே சென்று பிரதான சாலையிலும், எல்லைக் காவலிலும் நிற்கும் ராஷ்டிரகூட வீரர்களை அழைத்து வருமாறு பணித்தான்.

அடுத்த அரை நாழிகையில் அவன் உத்தரவு நிறை வேறவும் செய்தது.

அனுப்பி வைக்கப்பட்ட வீரன், ஐம்பதுக்கும் மேற்பட்ட ராஷ்டிரகூடர்களுடன் சத்திரத்துப் பாதையில் வேகமாகப் புரவிகளில் வருவதைக் கண்ட வீரர் தலைவன் முகத்தில் திருப்தி பரவியது. விரைந்து வருமாறு அவர்களை நோக்கி சைகை செய்தவன், பராந்தகனை நெருங்கினான்.

வந்து கொண்டிருந்த சிறு படைப் பிரிவை பராந்தகனும் கவனித்தான். வீரர் தலைவன் வாளுடன் தன் வாளை மோத விட்டவன், "இளவரசி, கார்குழலியை அழைத்துக்கொண்டு ரதத்தில் ஏறிவிடுங்கள். பகதத்தா, பின்வாங்கி வந்துவிடு. சத்திரத்து யவனனை பின்புறத்து வாயில் வழியே தப்பித்து விடச் சொல்" என்று மளமளவென்று உத்தரவிட்டபடியே, சுரசுரவென வாளை அதிவேகமாகச் சுழற்றத் தொடங்கினான்.

பராந்தகனின் உத்தேசம் இன்னதென்பதைப் புரிந்து கொண்ட வீரர் தலைவன் இரைந்தான்: "வீரர்களே, ரதத்தைப் பக்கவாட்டில் சூழ்ந்து கொள்ளுங்கள். எவரையும் தப்பிக்கவிடக் கூடாது. பலமாகத் தாக்குங்கள்."

ஆனால் அவன் உத்தரவுகளுக்கு எதிராக, பின்னாலிருந்த வீரர்களின் வாட்கள் பட்பட்டென்று நின்று, உறைகளுக்குள் புகுந்தன. வந்து கொண்டிருந்த படைப் பிரிவும், புரவிகளின் கயிறுகள் இழுக்கப்பட்டு, பலத்த கனைப்பொலிகளுடன் பாதி வழியில் சரேல் சரேலென நின்றன. எழுந்த புழுதி அடங்கத் தொடங்கியது.

"வாருங்கள், ஏன் நின்று விட்டீர்கள்?" என்று பலமாக இரைந்த வீரர் தலைவனுக்கு பதிலேதும் வரவில்லை. வாட்களை உறையிலிட்ட வீரர்கள், ஏதோ அணிவகுப்புக்குத்



தயாராவது போலப் பின்வாங்கி, வரிசையில் நின்றனர். தலைகளைத் தாழ்த்தவும் செய்தனர்.

"என்ன ஆயிற்று உங்களுக்கு?"– இரைந்தபடியே திரும்பிய வீரர் தலைவனின் விழிகள் நிலைகுத்தி நின்றன. அவன் கை வாளும் அவனையறியாமல் தாழ்ந்து, உறைக்குள் சென்று பதுங்கியது.

மாளிகையின் பக்கவாட்டிலிருந்து அதீத அலங்காரங்களுடன், வெகு கம்பீரமாக, ராஜநடை நடந்து வந்தது, ஒரு வெண்ணிறப் புரவி. அதன் பின்னால் சிறு படைப் பிரிவொன்றும் சீரான நடையில் வந்து நின்றது.

அலட்சிய நடை நடந்த அந்த வெண்ணிறப் புரவி மீது ஆரோகணித்து, வீரர் தலைவனை உற்று நோக்கியபடி வந்து கொண்டிருந்தான் 'பல்லவன் வில்லவன் என்று உலகில் பலராய்ப் பலவேந்தர் வணங்கு கழல், பல்லவன் மல்லையர் கோன்' பல்லவச் சக்கரவர்த்தி நந்திவர்மன்.





13

## சித்திரமேழி மல்லன்

**ப**ரம வைணவனென்று போற்றப்பட்டு, சீடனாகவே திருமங்கை மன்னனால் ஏற்றுக்கொள்ளப்பட்டவனும், சித்திரமேழிக் கடிகையின் மிகச்சிறந்த மல்லனும், மகாவீரன் என்று எதிரிகளாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டவனுமான பல்லவ நந்திவர்மனின் எதிர்பாராத வருகை, அங்கிருந்த சூழ்நிலையை அடியோடு ஸ்தம்பிக்கச் செய்தது.

புரவியிலிருந்து இறங்கிய நந்திவர்மன் அசாத்திய உயரத்துடனும், அதற்கேற்ற மல்லனின் திடமான உடலமைப்புடனும் தெரிந்தான். அவன் முழங்கைவரை மட்டுமே தெரிந்த வாள் வடுக்கள், அதற்கு மேல் அவனை காயப்படுத்தக்கூடிய வாள் வீரன் தமிழகத்தில் இன்னும் பிறக்கவில்லை என்பதை அறிவித்தன. ஈட்டிகளைவிடக் கூர்மையாக ஜொலித்த அவன் விழிகள், ரதத்தினருகே நின்றவர்களை நோக்கிவிட்டு, ராஷ்டிரகூட வீரர் தலைவன் மீது தைத்து நிலைத்தன.



அவன் வலதுகரம் உயர்ந்து பக்கவாட்டில் நின்ற பல்லவ உபதலைவனை நோக்கி நீண்டது. நீண்ட கரத்தின் சமிக்ஞையைப் புரிந்துகொண்ட உபதலைவன், வெண்ணிறப் புரவியை அணுகி, அதன் பக்கவாட்டில் தொங்கிய நீண்ட பேழையை இறக்கித் திறந்தான். அதனுள்ளிருந்து அளவில் பெரிதான பெரும் போர் வில், கணைகளும் உடனிருந்தன. வெகு பவ்யமாக அவற்றை எடுத்த உபதலைவன், மன்னனின் நீட்டிய கரத்தில் அவற்றை வைத்தான்.

'பல்லவன் வில்லவன்' என்று பட்டம் பெறக் காரணமாயிருந்த அந்த பெரும் வில்லுடன் நின்ற நந்திவர்மனிடமிருந்து, அடுத்து நிதானமாகச் சொற்கள் உதிர்ந்தன:

"வீரர் தலைவனே, இன்னும் அரை நாழிகை கழித்து என் கண்ணில்படும் எந்த ராஷ்டிரகூடன் உடலிலும் உயிர் இருக்காது. அங்கே நிற்பவர்களைச் சிறைசெய்ய நினைப்பவர் மட்டும் நிற்கலாம்."

அந்த வில்லைக் கண்டது முதல் உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு நின்ற வீரர் தலைவன், அடுத்தகணம் காற்றைவிட வேகமாகப் பறந்தான். கீழே கிடந்தவர்கள் புரவிகளில் எறியப்பட்டு, புரவிகள் தலைதெறிக்கத் திரும்பி பிரதான சாலையை நோக்கிப் பறந்தன.

அரை நாழிகையில் சத்திரத்தின் முன்பகுதி வெற்றிடமாய் நின்றது.

போர்வில்லை உபதலைவனிடம் அளித்த நந்திவர்மன், பராந்தகனை நெருங்கினான். பராந்தகனை ஒருமுறை உற்று நோக்கிய நந்திவர்மன் முகத்தில், இனம் தெரியாத உணர்ச்சிகள் ஓடி மறைந்தன. பராந்தகன் கரத்திலிருந்த வாளையும் தன் இடையிலிருந்த வாளையும் ஒருமுறை

கவனித்தவனுக்கு, அவை இரண்டும் ஒரே அச்சில் வார்க்கப் பட்டவை என்று கணநேரத்தில் புரிந்தது. அவன் இதழ்களில் முறுவலொன்றும் நெளிந்தது.

வலுவான தனது கரமொன்றை பராந்தகனது தோளின் மீது வைத்தவன், "நீதான் அந்தப் பராந்தகனாயிருக்க வேண்டும். வா. நாம் உள்ளே சென்று அமர்ந்து பேசுவோம்," என்று அவனை இலேசாக அணைத்தபடி வாயிலை நோக்கி நடந்தான்.

அனைவருமே விக்கித்துப் பேச்சின்றி நிற்க, இளவரசியை நெருங்கியதும் நந்திவர்மன் சற்று நின்றான். அவன் கூர்விழிகளில் ஓர் ஒளி பளிச்சிட்டது. அடுத்து அவன் செய்த காரியம், அனைவரையுமே ஓர் உலுக்கு உலுக்கிவிட்டது.

தன் வலிய கரங்களை ஒன்று சேர்த்து விழிகளை மூடிய நந்திவர்மன், மண்டியிட்டு குமுதவல்லியை வணங்கினான். மீண்டும் எழுந்தவன், "பாண்டிய இளவரசியை முறையாக வரவேற்க சந்தர்ப்பம் இடந்தரவில்லை. மன்னித்துவிடு மகளே" என்றான் முறுவலுடன்.

திகைப்பில் உறைந்துவிட்ட குமுதவல்லியின் முகத்தில் பதற்றம் பரவியது. அவள் குரலிலும் அது ஒலித்தது.

"மன்னவா... இது முறையல்ல... முறையல்ல" என்றாள் திணறியபடி அவள் உடல் நடுங்கியது.

"நந்திவர்மன் முறை தவறினான் என்ற அபக்யாதி இதுவரை கிடையாது மகளே. எதை முறையல்ல என்கிறாய்?"— அவன் கேள்வி முறுவலுடன் வந்தது.

"தாங்கள் என் தந்தைக்கு இணையானவர். மகளே என்றும் அழைக்கிறீர்கள். என்னை இப்படி மண்டியிட்டு வணங்குவது முறையா?"



நந்திவர்மன் முறுவல் இன்னும் விரிந்தது. "மகளே! நான் வணங்கியது உன்னையல்ல" என்றான் நிதானமாக.

"என்னையல்லவா?... பிறகு?"

"உன் பெயரை..."

"பெயரையா?"— வியப்புடன் வந்தது இளவரசியின் கேள்வி. மற்றவர்கள் முகத்திலும் திகைப்பு பரவிக் கிடந்தது.

"ஆம் மகளே, என்னைச் சீடனாக ஏற்றுக்கொண்ட திருமங்கை மன்னனின் பட்டத்தரசியின் பெயரை நீ தாங்கி யிருக்கிறாய். அந்தப் பெயருக்குரியவரின் வயதையோ, உறவையோ நான் பார்க்கலாகாது. முதலில் வணங்க வேண்டியது என் கடமை."— வெகு நிதானமான தொனியில் விளக்கினான் நந்திவர்மன்.

ஆழ்வாரையே குருவாகப் பெற்றவனின் குருபக்தி எத்தகையதாயிருக்கும் என்பது புரிந்தது குமுதவல்லிக்கும், மற்றவர்களுக்கும்.

சத்திரத்துக் கூடத்தில் அனைவரையும் அமரப் பணித்து தானும் அமர்ந்த நந்திவர்மனை நோக்கிய குமுதவல்லி, "மன்னவா, நாங்கள் இங்கிருப்பதை அறிந்துதான் இங்கு வந்தீர்களா?" என்றாள்.

"மகளே, நீ கொற்கையிலிருந்து கவர்ந்துவரப் பட்டதையும், சீன வணிகர்களை சந்திரகாந்தத்துடன் மகாராணியிடம் அறிமுகப்படுத்தியதையும், தப்புவதற்கு வகுத்த திட்டத்தையும் குணவர்மரது ஓலை மூலம் நேற்று தான் அறிந்தேன்."

"என்ன! குணவர்மர் தெரிவித்தாரா?"

"ஆம் மகளே. ஆழ்வாரின் சீடர்களுக்குள் உண்மையை மறைப்பதென்பதே கிடையாது. அவர் காஞ்சிக்கு வந்த அன்றே தாம் யாரென்பதைத் தெரிவித்தார். உங்களை மகா

ராணியிடமிருந்து மீட்கவே நான் உதயேந்திரபுரியிலிருந்து நேற்றிரவு புறப்பட்டேன். நான் செல்லும் பாதையில் முன்னதாக என் வீரர் இருவரை அனுப்பி வைப்பது என் வழக்கம். வீரர்கள் வந்து தெரிவித்ததும் இங்கு வந்தேன்."— விளக்கினான் நந்திவர்மன்.

சற்று நேரம் மௌனம் நிலவியது அங்கே.

பராந்தகன் மௌனத்தைக் கலைத்தான். "மன்னவா, சோழ நாட்டிலும், பாண்டியர் எல்லையிலும் ராஷ்டிர கூடரின் அக்கிரமங்கள்..."

நந்திவர்மனின் கரம் உயர்ந்து பராந்தகனைத் தேக்கியது. "நன்றாகவே அறிவேன். பராந்தகா, மகளே, சற்று கவனமாக் கேளுங்கள். பெண்ணாகடத்துப் போர், விதிவசத்தால் நேரிட்ட சம்பவம். அதை எப்படியாகிலும் நானோ, சோழ மன்னரோ தவிர்த்திருக்க வேண்டும். தாமதமாகவே அதை உணர்ந்தேன் நான். அந்தப் போரில் மாண்டது சோழ மன்னரும், சோழர் பெரும்படையும் மட்டுமல்ல, முக்காலுக்கும் மேல் பல்லவர் படையும்தான். அதனால் காஞ்சி மண்டலத்தின் பாதுகாப்புக்கே நான் ராஷ்டிர கூடரை நம்பவும், அதை அவர்கள் சாதகமாக்கிக் கொள்ள வும் முற்பட நேரிட்டுவிட்டது. என் மகன் கல்வியையும், பயிற்சிகளையும் முடித்து வந்து இளவலாக முடிசூடும் போது, தமிழகத்தில் அவனை எதிர்க்க மன்னர்களே இருக்கக் கூடாது என்று மகாராணி எண்ணுகிறாள். அதை ராஷ்டிர கூடர்கள் சாதகமாக்கிக் கொள்ள எண்ணுகிறார்கள். இந்த நிலை மாறவேண்டும். தமிழகத்து மன்னர்களிடையே போர் ஏதுமின்றி, மக்கள் நிம்மதியாக இருக்க வேண்டுமென்று எண்ணுகிறேன் நான்."

"அதற்கு வழி இருக்கிறது" என்றான் பராந்தகன்.

"என்ன வழி பராந்தகா?"



"மகாராணியை அவர்கள் போக்கிலேயே விட்டு விடுங்கள்."

"விளக்கமாகச் சொல்."

"மன்னவா, ராஷ்டிரகூடர்கள் பலம் குறைந்தாலொழிய இங்கிருந்து அகல மாட்டார்கள். மகாராணியின் எண்ணத்தை நிறைவேற்ற, ராகுலனைப் போன்றவர்கள் பாண்டிய நாட்டிலும் நுழைந்திருக்கிறார்கள். அவர்கள் திரும்பப் போவதில்லை. தற்போது ராஷ்டிரகூடத்திலும் மாற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன என்றும், போர் மூளக் கூடுமென்றும் அறிந்தேன். இங்கிருப்பவர்கள் ராஷ்டிர கூடத்திற்கு அழைக்கப்படுவார்கள். இந்த நிலையைச் சாதகமாகப் பயன்படுத்தினால் நம் எண்ணம் நிறைவேறும். தமிழகத்தில் ராஷ்டிரகூடர் ஆதிக்கம் மறையும்."

நந்திவர்மனது முறுவல் விரிந்திருந்தது. இளவரசியின் விழிகளில் பிரமிப்பு தெரிந்தது.

"பராந்தகா, நானும் உன் வழியிலேயேதான் திட்டமிட் டிருக்கிறேன். பாண்டிய மன்னருக்கு என் திட்டத்தை விளக்கி ஓலையனுப்புகிறேன். பராந்தகன் உண்மையில் யாரென்ப தையும் தெரிவிக்கிறேன்" என்றான் நந்திவர்மன்.

பராந்தகன் எழுந்தான். "மன்னவா, நான் யார் என்பதை அறிய ஆவலோ, அவசியமோ தற்போது எனக் கில்லை. அது என் நோக்கத்தை பாதிக்கும் என்ற அச்சம் தானிருக்கிறது. நம் நோக்கம் அனைத்தும் நிறைவேறியபின் இதுபற்றிப் பேசலாம்" என்றான் தெளிவான குரலில்.

"சரி, பராந்தகா, இளவரசி, அடுத்து ராகுலனின் தாக்குதல் திருவெள்ளறையில் நிகழப் போவதாக அறிந்தேன். மன்னரிடம் எச்சரிக்கையுடன் இருக்கச் சொல்லுங்கள். இனி நீங்கள் புறப்படலாம்" என்று அனைவரையும் ரதத்தில் ஏற்றி

விடை கொடுத்த மன்னன், பாண்டியர் எல்லை வரை தனது வீரர்களையும் துணையாக அனுப்பி வைத்தான்.

மேற்குக் கடற்கரைத் துறைமுகங்களில் வந்து இறங்கும் ரோமானியரும், யவனரும், கிரேக்க வணிகரும் தமிழகத்திற்குள் நுழையும் வழியாக அமைந்திருந்தது அந்த மலைப் பாதை. உயர்ந்து எழுந்து தொடர்ந்த மலைகளின் மீது நெளிந்தும், உயர்ந்தும், தாழ்ந்தும் சென்ற பாதையின் இரு புறங்களிலும் கானகம் அடர்ந்து கிடந்தது. திருவெள்ளறை என்றும் வெள்ளலூர் என்றும் அழைக்கப்பட்ட அந்தப் பாதையின் முடிவிலிருந்த ஊரும் கோட்டையும், அயல்நாட்டு வணிகர்கள் தமிழகத்தில் கால் பதிக்கும் முதல் இடமாக அமைந்திருந்தது.

அந்த வனாந்திரத்தில் நிறைந்து கிடந்த, பெயர்கூட அறியப்படாத மூலிகைகளின் வாசத்தையும் சேர்த்து, திடீர் திடீரெனச் சுழன்றடித்த குளிர்ந்த மலைக்காற்று, அந்தப் பாதையில் பகல் வேளைகளிலும் வணிகர்களை நடுங்க வைத்தது. போதாக் குறைக்கு அந்தக் கானகத்தின் துஷ்ட மிருகங்கள் அவ்வப்போது மலைப்பாதைக்கு வந்து, தங்கள் ஏகாந்தத்தில் குறுக்கிடும் வணிகர்களை விசாரித்துச் சென்றன. சமயங்களில் தங்களுக்குப் பிடித்தவர்களை உடன் அழைத்துச் செல்லவும் முற்பட்டன. இதனால் மாலைப் பொழுதுக்குப் பின் அந்தப் பாதை வெறிச்சிட்டுக் கிடப்பதே வழக்கமாயிருந்தது.

அந்த மலைப்பாதையிலிருந்து கோபித்துக் கொண்டது போல் விலகிய ஒற்றையடிப் பாதையொன்று, கானகத்தினூடே வளைந்து வளைந்து சென்றது. வேடுவர்களைத் தவிர வேறு எவரும் பயன்படுத்தாத அந்தப் பாதையில் அவ்வப்போது சிறுத்தைகளும், மலைச் சர்ப்பங்களும் கடந்து சென்றன.



கதிரவன் மறையத் தொடங்கிய அந்த நேரத்தில் ஓரிரு நரிகள் பாடிய கானமும், போட்டியாகக் குரல் கொடுக்க முனைந்த ஆந்தைகளும், கோட்டான்களும் அந்த இடத்தில் அச்சம் தரும் சூழ்நிலையை சிருஷ்டித்தன.

நீண்டு கொண்டே சென்ற பாதை மரங்கள் சற்று விலகியிருந்த இடத்தில் சென்று முடிந்தது. இலேசான சமவெளியாகத் தெரிந்த இடமும், அடுத்து நின்ற பாறைகளும், கானகத்து விலங்குகளைவிட துஷ்டர்களான ராகுலனுக்கும், அவன் வீரர்களுக்கும் புகலிடமாக மாறிக் கிடந்தது.

ஓரிரு பந்தங்களே எரிந்து கொண்டிருக்க, பாறையொன்றின் மீது அமர்ந்திருந்த ராகுலன், வீரர்களுக்குத் தன் திட்டத்தை விளக்கிக் கொண்டிருந்தான்.

"வீரர்களே, வெள்ளலூர்க் கோட்டை சிறியதானாலும் வலுவானது. கோட்டைத் தலைவன் இந்தளதேவன், பரம்பரையாக பாண்டிய மன்னர்களின் சேவையிலிருக்கும் பெரும் வீரன். புரவிப்படைகளுக்கும் பயிற்சியளிப்பவன். நாம் கோட்டைக்குள் நுழைவதோ, தாக்குவதோ எளிதல்ல."

"பின் எப்படி அவனை அகற்றுவது?"

"கேள். இந்தளதேவன் பெரும் வீரனென்றாலும் எளிதில் உணர்ச்சிவசப்படுபவன், முன்கோபி. அவனை கோட்டைக்கு வெளியே இழுக்க வேண்டும். அதுவும் அதிக வீரர் துணையின்றி."

"இது சாத்தியமா தலைவரே?"

"அதை சாத்தியமாக்கத்தான், இந்த மலைப்பாதையில் அயல்நாட்டு வணிகர்களின் பொதி வண்டிகள் நாம் ஏற்படுத்திய தடைகளைத் தாண்டி, தாமதமாக வந்து கொண்டிருக்கின்றன" என்ற ராகுலன், பிசாசு நகைப்பதைப் போல பெரிதாக நகைத்தான்.



## (14)

# இளைய வீரன்

**மே**ற்கு மலைத் தொடரின் முகட்டின்மீது வெகு சிரமத்துடன் ஊறிய நிலவு, வானத்தை எட்டிப் பிடித்து விட்டதால் சற்று ஆசுவாசப்படுத்திக்கொண்டு, அந்த மலைப் பகுதியை ஆராயத் தொடங்கியது.

வெள்ளலூர்க் கோட்டையை அடைய சில காதங்களே இருந்தன. வழக்கமில்லாத அந்த நேரத்தில் சில பொதி வண்டிகள் மலைப்பாதையில் பயணித்துக் கொண்டிருந்தன. பயணத்தின் தொடக்கத்தில் பாதையின் குறுக்கே மரங்கள் வெட்டப்பட்டுக் கிடந்ததால், ஏற்பட்ட தடங்கல்களைக் கடந்து சற்றுத் தாமதமாகவே வந்தாலும், வெள்ளலூர்க் கோட்டை நெருங்கிவிட்டதால் பொதிவண்டிகளில் வந்த வணிகர்கள் உல்லாசமாகச் சிரித்துப் பேசியபடியே வந்தனர்.

சரிவொன்றில் இறங்கிய பொதிவண்டிகள், காளை களின் கயிறுகள் பலமாக இழுக்கப்பட்டதால், கழுத்து



மணிகள் ஒலிக்க, சரேல் சரேலென நின்றன. முதலில் நின்ற வண்டியின் முன்பாக, குறுக்கே பெரும் மரமொன்று வெட்டப்பட்டு கிடத்தப்பட்டிருந்தது. பந்தங்களை ஏந்திப் பொதிகளின் பக்கங்களில் ஓடிவந்த அடிமைகளும், வண்டி களிலிருந்து இறங்கிய வணிகர்களும் முன்பகுதியில் குவியத் தொடங்கினர்.

மரத்தை வெட்டி அப்புறப்படுத்த உத்தரவிட்ட வணிகர்கள், திடீரென பொதிவண்டிகளின் வரிசையின் பின்பகுதியிலிருந்து எழுந்த கூச்சலால் திகைத்தனர். அவர்களின் திகைப்பையும் அச்சத்தையும் உயர்த்த, கானகத்தின் மறைவுகளிலிருந்து வாட்களை ஓங்கியபடி பலர் ஓடிவந்து தாக்கவும், வண்டிகளில் இருந்தவற்றைக் கொள்ளையடிக்கவும் தொடங்கினர். அரைநாழிகையில் அந்த இடத்தின் சூழ்நிலை மாறியது. அடிமைகளும் வணிகர் சிலரும் கொல்லப்பட்டனர். இரு பொதிவண்டிகள் தீப்பிடித்து எரியத் தொடங்கின. வரிசையின் நடுவிலிருந்த இரு வண்டிகளில் பணிப்பெண்களாக வந்த யவன மங்கையரின் வீல் வீலென்ற அலறல்களும், கொள்ளையரின் வெறிக் கூச்சல்களும் ஒலித்தன.

கொள்ளைப் பொருள்களுடனும், இழுத்துச் செல்லப் பட்ட மங்கையருடனும், சற்று நேரத்தில் கொள்ளையர் கானகத்து இருளில் நின்ற புரவிகளில் ஏறி, மரங்களினூடே மறைந்தனர்.

இரு ஜாம நேரத்திற்குப் பின், தளர்ந்த நடையுடன், மடிந்த அடிமைகளையும், வணிகர்களையும் சுமந்த வண்டி களுடன், வணிகர்கள் வெள்ளலூர்க் கோட்டையை நோக்கி நகர்ந்தனர். எரிந்து அடங்கிய வண்டிகள் புகைந்தபடி பாதை யோரத்தில் நின்றன.

**உ**தய நேரத்துக் கதிரவன் மலைகளுக்குப் பின்னா லிருந்து வானத்தை செப்புத் தகடடித்து செப்பனிட்டுக்

கொண்டிருக்க, வெள்ளலூர் அரண்மனையின் மேன் மாடத்து உப்பரிகையில், கிழக்கு நோக்கி கூப்பிய கரங்களுடன் நின்று கொண்டிருந்தான், இந்தளதேவன். அகன்ற நெற்றியில் நீறு பளிச்சிட, நிமிர்ந்து நின்ற தேகம் அளவற்ற பயிற்சியைக் காட்டியது. இடையிலிருந்து நீண்ட வாள், பாதத்தைத் தாண்டி சற்று வளைந்து கிடந்தது.

அதே கோலத்தில் அருகில் நின்ற அவன் மகனுக்கு, பிராயம் பதினான்கிற்கு மேல் இராது என்பதை, பிள்ளைத் தனம் மாறாத முகம் தெரிவித்தது. தந்தையுடன் அவனும் இடைவிடாத பயிற்சிகளில் ஈடுபட்டிருக்கிறான் என்பதை, வலுவேறத் தொடங்கியிருந்த கரங்களும், தோள்களும் அறிவித்தன.

பரம்பரையாக பாண்டிய மன்னர் சேவையில் வந்ததாலும், வரகுணரின் தந்தை காலத்திலேயே புரவிப்படைத் தலைமை ஏற்றதாலும், மன்னர் மீதிருந்த அன்பின் காரணமாக, மன்னனின் தந்தையின் பெயரையே தன் மகனுக்குச் சூட்டியிருந்தான் இந்தளதேவன். கதிரவனை வணங்கித் திரும்பி 'ராஜசிம்மா' என்று மகனை அழைத்தவன் குரலில் அன்பு பூரணமாகத் தொனித்தது.

"என்ன தந்தையே?" என்று நிமிர்ந்த இளையவீரனின் விழிகளில் இந்தளதேவனைவிட அதிகக் கூர்மையும், நிதானமும் தெரிந்தன.

"பயிற்சியைப் பிறகு வைத்துக் கொள்ளலாம் மகனே. நகரத்து வணிகர் அவசரமாகக் காண வேண்டி காத்திருக்கிறார்களாம். வா, போகலாம்" என்ற இந்தளதேவன், மகனுடன் உணவை முடித்துக் கொண்டு அரண்மனைக் கூடத்தை அடைந்தான்.

கூடத்தின் முகப்பிலேயே பிரதானி கரங்களில் ஓலைக் குழலொன்றுடன் காத்திருந்தார். குழலிலிருந்த முத்திரையைக் கண்டதும், இந்தளதேவன் முகத்தில் மகிழ்ச்சி பரவியது.



"மன்னரிடமிருந்து வந்திருக்கிறது மகனே" என்றபடி குழலைப் பிரித்தவன் மகனைப் பார்த்து, "மன்னர் வருவதாகத் தெரிவித்திருக்கிறார் மகனே, அதுவும் இன்றே.. ஆனால் நம்மை ஏதோ அபாயம் சூழ்ந்திருப்பதாகவும், எச்சரிக்கையுடனிருக்கும்படியும் கூறியிருக்கிறார். என்ன அபாயமென்று விளங்கவில்லையே" என்றவன் "வா, முதலில் வணிகர்களின் குறை என்னவென்று விசாரிப்போம்" என்று கூடத்தினுள் நுழைந்தான்.

நகரத்து வணிகர் அனைவருமே அங்கு கூடியிருக்க, இந்தளதேவன் உள்ளே நுழைந்ததும் சட்டென்று அமைதி நிலவியது. இருக்கையில் அமர்ந்து அருகில் மகனையும் அமரப் பணித்தவன், "வணிகர்களே, என்ன நேர்ந்தது? உங்கள் முகங்களில் கவலையும், வருத்தமும் மிதமிஞ்சித் தெரிகிறதே" என்றான்.

முன்னால் நின்ற வணிகர் வெடித்தார். "கொள்ளை நடந்திருக்கிறது கோட்டைத் தலைவரே, கொள்ளை. நேற்றிரவு இரண்டாவது ஜாமத்தில் மலைப்பாதையில் வந்த நம் வணிகர்கள் கொள்ளையடிக்கப்பட்டிருக்கிறார்கள்."

"என்ன கூறுகிறீர்? வெள்ளலூரில் கொள்ளையா?" இந்தளதேவனின் முகம் சிவந்து ஜொலித்தது.

வணிகர்கள் நடந்தவற்றைக் கூறக் கூற, இந்தளதேவனின் சினம் உச்சிக்குச் சென்றுவிட்டதால், அவனிடமிருந்து வார்த்தைகள் ஏதுமின்றி, பற்கள் நறநறவென அரைபடும் ஒலி மட்டும் கேட்டது.

ராஜசிம்மனின் குரல் கணீரென்று ஒலித்தது. "வணிகரே, இது இரவின் இரண்டாவது ஜாமத்திலா நடந்தது?"

"ஆம்"

"கொள்ளையர் எத்தனைபேர் இருக்கலாம்?"

"முப்பது பேர் இருக்கலாம். நீண்ட வாட்களுடன் வந்தார்கள். புரவிகளில் ஏறிச் சென்றுவிட்டார்கள். அவர்கள் மொழியும் வேறு விதமாயிருந்தது."

ராஜசிம்மனின் குரல் சிந்தனையுடன் ஒலித்தது: "தந்தையே, கொள்ளைக்கு வருபவர்களுக்கு நீண்ட வாள் ஒரு சுமை. அச்சுறுத்த குறுவாட்களே போதும். அவர்கள் மொழியும் வேறுபட்டு இருந்ததென்றால்... உறையூரில் நம் படைத்தலைவரைத் தாக்கிவிட்டுத் தப்பியதாகச் செய்தி வந்ததே, அவர்களாயிருக்கக் கூடும். இதுவும் ஏதோ சதியென்றே எண்ணுகிறேன் தந்தையே."

இந்தளதேவன் வெடித்தான்.

"சதி என்ன இருக்கிறது இதில்? வாட்களையும் அவர்கள் எங்கேனும் களவாடியிருக்கலாம். இப்போதே சென்று அவர்களைக் கண்டுபிடித்து அழித்துவிடுகிறேன். அந்தக் கானகத்தில் எளிதில் வெகுதூரம் அவர்கள் போக முடியாது. மன்னர் வருவதாகக் கூறியிருக்கும் இச்சமயத்தில், என் காவலுக்கு அவப்பெயர் ஏற்படுவதை சகிக்க மாட்டேன்" என்றவன், தன் உபதலைவனை அழைத்து, அப்பொழுதே ஐம்பது வீரர் கொண்ட சிறு படையை தயாராக நிற்க உத்தரவிட்டான்.

"தந்தையே, நானும் உடன் வரலாமல்லவா?"– ராஜசிம்மனின் கேள்வி ஆவலுடன் வந்தது.

"தாராளமாக வா மகனே" என்ற இந்தளதேவன், அடுத்த ஒரு நாழிகையில் வெகு உக்கிரத்துடன் புறப்பட்டான்.

மலைப்பாதையில் கொள்ளை நடந்த இடத்தை இந்தளதேவன் அடைந்தபோது, எரிந்த வண்டிகளுக்கிடையே திரும்பக் கொண்டு வந்து கொள்ளையரால் விடப்பட்டிருந்த யவன மங்கையர் கிழிந்த ஆடைகளுடன், கண்களில் நீர்



வழிய நின்று கொண்டிருந்தனர். இந்தளதேவனையும், புரவி வீரர்களையும் கண்டு அஞ்சியவர்களைச் சமாதானம் செய்து, தான் கோட்டைத் தலைவன் என்பதைப் புரியவைக்கவே சற்றுத் தாமதமானது இந்தளதேவனுக்கு.

கொள்ளையர்கள் சென்ற திசையைக் காட்டிய அந்த மங்கையருக்குக் காவலாக வீரர் பதின்மரை நிறுத்திய இந்தளதேவன், வீரர்களுடன் அந்த ஒற்றையடிப் பாதையில் பாய்ந்தான்.

பாறைகளையும், அடுத்து விரிந்த சிறு சமவெளியையும் அடைந்தவன் "எங்கே தொலைந்தார்கள் அந்தக் கொள்ளையர்கள்?" என்று இரைந்தபடியே புரவியிலிருந்து இறங்கி, பாறைகளின் உச்சியில் ஏறி, கானகத்தை ஆராய்ந்தான்.

ராஜசிம்மனின் கூர்விழிகள் சமவெளியையும், அதில் தெரிந்த புரவிகளின் தடத்தையும் ஆராய்ந்தன. "வணிகர் சொன்னதுபோல வந்தவர்கள் முப்பது பேர் மட்டுமல்ல. இன்னும் இரு மடங்கு வீரர்கள் வந்திருக்க வேண்டும்," என்று முணுமுணுத்துக் கொண்டான் அவன்.

பாறை மீது உயரத்தில் தனியாக நிற்பவன், மறைவிலிருப்பவர்களுக்கு எத்தனை எளிதான இலக்காக முடியும் என்பதை அப்போது உணராத இந்தளதேவன், பாறை மீதிருந்தே இரைந்தான்: "வீரர்களே, கானகத்தினுள்ளே சென்று தேடுங்கள் அந்தக் கொள்ளை..." அவன் வார்த்தைகளைத் தொடரும் முன்பு, மரங்களின் மறைவுகளிலிருந்து அவனை நோக்கி சரமாரியாக அம்புகள் பறந்தன. அவன் கீழே குதித்து இறங்கும் முன்பாக, அவன் மார்பிலும், தோளிலும், விலாவிலும் அம்புகள் பாய்ந்தன. மரங்களின் மறைவுகளிலிருந்து பெரும் கூச்சலுடன், ராஷ்டிரகூடர்கள் ஓங்கிய வாட்களுடன் ஓடிவந்து அவனைச் சூழ்ந்தார்கள்.

திகைத்து நின்ற பாண்டிய வீரர்களை ராஜசிம்மனின் கணீரென்ற குரல் செயல்பட வைத்தது.

"உபதலைவரே, நீர் பதின்மருடன் தந்தைக்கு உதவச் செல்லுங்கள். மீதிப்பேர் இரண்டாகப் பிரிந்து, வருபவர்களைப் பக்கவாட்டில் தாக்குங்கள்" என்ற ராஜசிம்மனின் புரவி அதிவேகமாக ராஷ்டிரகூடரை நோக்கிப் பாய்ந்தது.

ஒரு கணமே தள்ளாடித் தரையில் நின்ற இந்தளதேவன், தன் மீதிருந்த அம்புகளைப் பிடுங்கி எறிந்து, உடலெங்கும் குருதி வழிய நின்றான். சூழ்ந்துகொண்ட ராஷ்டிரகூடரை ஒருமுறை பார்த்தவனுக்கு, மன்னர் ஓலையில் குறிப்பிட்ட அபாயம் என்னவென்று புரிந்தது. மகன் ராஜசிம்மன் யூகித்ததும் எத்தனை சரியென்பதும் புரிந்தது.

தன் நீண்டு வளைந்த வாளை உருவிக் கொண்ட பாண்டியர் புரவிப்படைத் தலைவனது நெஞ்சுரமும், கைவேகமும் இன்னதென்பது அடுத்த சில கணங்களில் புரிந்தது ராஷ்டிரகூடர்களுக்கு.

ஈட்டிகளுடன் முன்னால் பாய்ந்த ராஷ்டிரகூடர் இருவரின் கரங்கள் வெட்டுப்பட்டன. மூன்றாவது வீரனின் கழுத்து வெட்டுப்பட்டுத் தலை தொங்கியது. அடுத்து இருவர் மார்பில் வாள் பாய்ந்து அலறினர். மற்றொருவனது தோள் வெட்டுப்பட்டது. உபதலைவனும் மறுபுறம் நெருங்கியதால் ராஷ்டிரகூடர் திணறத் தொடங்கினர். இந்தளதேவனைக் குறிவைத்த சதியானதால், பாறைகளின் மறைவிலிருந்து இன்னும் வீரர்கள் அந்த இடத்தில் சேரத் தொடங்க, போர் உக்கிர நிலையை எட்டியது. இறுதியாக வந்த ராகுலன், வாளை ஓங்கியபடியே இந்தளதேவனை பின்புறமாக நெருங்கினான். எதிரிலிருந்த இருவரை வீழ்த்தி, சுழன்று திரும்பிய இந்தளதேவன் மார்பில் ராகுலனின் வாள் வேகமாகப் பாய்ந்தது. கண்கள் இருள, தடுமாறிய இந்தள



தேவன், இறுதியாக பக்கத்தில் ஈட்டியொன்றுடன் வந்த ராஷ்டிரகூடன் உடலில் தன் வாளைப் பாய்ச்சியபடி கீழே சரிந்தான்.

இந்தளதேவன் உடலிலிருந்து வாளை உருவிய ராகுலன், ராஜசிம்மன் இருந்த இடத்தை நோக்கியதும் பிரமிப்பில் வாயைப் பிளந்தான். தந்தை போரிட்ட அதே முறையில் சுழன்ற ராஜசிம்மனின் மெல்லிய வாள், அசாத்திய வேகத்தில் சுழன்று ராஷ்டிரகூடர்களைத் திணறடித்துக் கொண்டிருந்தது. பின்னாலும், பக்கவாட்டிலும் நெருங்கியவர்களின் கழுத்திலும், கண்களிலும் துருவித் துளைத்த அந்த வாளின் வீச்சு, ராகுலனைத் திகைக்க வைத்தது.

இந்தளதேவனால் வீழ்த்தப்பட்ட தன் வீரனின் ஈட்டியை குனிந்து எடுத்த ராகுலன், ராஜசிம்மனின் கழுத்துக்குக் குறி பார்த்தான்.

போராடியபடியே ராஜசிம்மனின் விழிகளும் ராகுலனைக் கவனித்தன. அடுத்து அவன் வீச்சின் முறையும் மாறியது. ராகுலனை நோக்கி முன்னேறினான் ராஜசிம்மன்.

அந்தச் சிறுவனின் கூர்விழிகளின் ஒளி ராகுலனின் மனதில் அச்சமேற்படுத்தியது. எச்சரிக்கைக் குரல் கொடுத்த ராகுலன் ஈட்டியை பலமாக வீசினான். சூழ்ந்திருந்த ராஷ்டிர கூடர்கள் சட்டென்று விலக, நடுவிலிருந்த ராஜசிம்மனை நோக்கி அந்த ஈட்டி பாய்ந்தது.

கழுத்தை நோக்கி வந்த அந்த ஈட்டி, ராஜசிம்மனின் வாளின் சுழற்சியில் பட்டு முழுவதுமாக விலகாமல், திசை மாறி அவன் விலாப் பகுதியில் முழுவதுமாகப் பாய்ந்தது.

ஒரு கரத்தால் ஈட்டியைப் பிடித்தபடி அப்படியே தள்ளாடி சரிந்து, தரையில் விழுந்தான் அந்த இளைய வீரன்.



(15)

## உன்னால் முடியாது மன்னா!

**வீ**ரனான இந்தளதேவனையும், அவன் மகன் ராஜ சிம்மனையும் தந்திரத்தால் வீழ்த்தி, தனது திட்டத்தின் முதல் வெற்றியைப் பெற்றுவிட்ட ராகுலன் சற்று நேரம் அங்கேயே நின்றான். தன்னுடன் வந்த ராஷ்டிரகூட வீரரில் பாதிக்கு மேல், தரையில் பாண்டிய வீரர்களுடன் கிடப்பதைக் கண்டவனுக்கு, இனி தனது திட்டங்களை நிறைவேற்ற இன்னும் அதிக வீரர்கள் தேவையென்பது புரிந்தது. குரூரப் புன்முறுவலுடன் எஞ்சிய தனது வீரர்களுடன், மகாராணி யின் உத்தரவின்படி கொங்குநாட்டு கெந்ததேவராயனைச் சந்திப்பது என்று தீர்மானித்து கானகத்தினூடே தெற்கு நோக்கி விரைந்தான்.

யவன மங்கையருக்கு ஆறுதல் கூறிய பாண்டிய வீரர்கள், கோட்டையிலிருந்து வரும் பாதையில் புழுதிப்



படலம் எழுவதைக் கவனித்தனர். வருவது பாண்டிய மன்னனின் படைப் பிரிவென்பது சற்று நேரத்தில் புலப்பட்டது. முன்னணியில் தன் பெரும் சாம்பல் நிறப் புரவியில் பாண்டிய மன்னனே வருவதைக் கண்ட வீரர்கள் தலைவணங்கி வரவேற்று, கோட்டைத் தலைவன் இன்னும் திரும்பவில்லையென்பதையும் தெரிவித்தனர். யவன மங்கையரை கோட்டைக்கு அழைத்துச் செல்ல உத்தர விட்ட மன்னன், வீரர்களுடன் கானகத்துப் பாதையில் விரைந்தான்.

சமவெளியை அடைந்த மன்னனும், பாண்டிய வீரர் களும் விக்கித்து நின்றனர். பாண்டிய வீரர்களும், ராஷ்டிர கூடரும் நிலத்தில் உருண்டு கிடந்த காட்சி, அங்கு எத்தகைய போர் நடந்தது என்பதைப் புலப்படுத்தியது. அம்புகளும், ஈட்டியும் பாய்ந்து குருதி வெள்ளத்தில் கிடந்த இந்தள தேவனைச் சுற்றிக் கிடந்த ராஷ்டிரகூடரின் உடல்கள், அவனது இறுதிப் போர் எத்தனை உக்கிரமாக நடைபெற்றது என்பதைத் தெரிவித்தன. இறுதியாக ராஷ்டிரகூடனின் உடலில் பாய்ந்திருந்த தன் வாளின் பிடியை, உயிர் பிரிந்த பின்னும் விடாதிருந்த இந்தளதேவனைக் கண்ட மன்னனின் மனம் கனத்தது.

அடுத்து சுற்றிலும் ஓடிய மன்னனின் விழிகள், ராஜ சிம்மனைக் கண்டதும் ஸ்தம்பித்தன. "இந்தச் சிறுவனைப் போய் எதற்காக இந்தளதேவன் அழைத்து வர வேண்டும்?" என்று கடிந்து கொள்ளவும் செய்தான் மன்னன். நிலைகுத்தி நின்ற மன்னன் விழிகளில், ஈட்டியைப் பிடித்திருந்த ராஜ சிம்மனின் கரத்தில் ஏற்பட்ட அசைவு பதற்றத்தை ஏற்படுத்த, புரவியிலிருந்து தாவிக் குதித்தவன், பாய்ந்து சென்று ராஜசிம்மனின் கரத்தைப் பற்றி, சோதித்தான்.

அடுத்து அப்படியே ராஜசிம்மனை இருகரங்களாலும் அசையாமல் அள்ளிக்கொண்ட மன்னன், இந்தள தேவனுடன் மற்ற வீரர்களையும் சோதித்து, கோட்டைக்குக் கொண்டுவர உத்தரவிட்டுத் தன் புரவியில் ஆரோகணித்தான்.

அந்தச் சாம்பல் நிறப் புரவிக்கு மன்னனின் மனநிலை புரிந்திருக்க வேண்டும். ஒரே சீரான வேகத்தில் கோட்டையை நோக்கி விரைந்தது அது. கோட்டை வாயிலில் உபதலைவர்களும் பிரதானிகளும் நிற்க, உடன் காவி உடையில் நெடுநெடுவென்ற உயரத்துடன், விஷ்ணு சித்தரும் தம் ராட்சத உதவியாளனுடன் நிற்பதைக் கண்ட மன்னன் முகத்தில் பெரும் சாந்தி படரத் தொடங்கியது.

அவரை நெருங்கி, புரவியிலிருந்தபடியே, அந்த இளம் வீரனை சிறு குழந்தையைப் போல் நீட்டிய மன்னன், "விஷ்ணு சித்தரே, சரியான சமயத்தில் வந்திருக்கிறீர். நீர் என்ன செய்வீர் என்பது தெரியாது. இந்த இளம் வீரன் உயிர் பிழைக்க வேண்டும்," என்றான் பாதி உத்தரவும், பாதிக் கெஞ்சலும் தொனித்த குரலில்.

பதிலேதும் கூறாமல் ராஜசிம்மனைத் தாங்கிக் கொண்ட விஷ்ணுசித்தர், திரும்பி மாளிகையை நோக்கி நடந்தார். உள்ளே நுழைந்து மேன்மாடத்து அறையொன்றில் மஞ்சத்தில் அவனைக் கிடத்தியவர், மெல்ல அசைத்து அசைத்து, ஈட்டியை எடுத்தார். மெல்லிய நூலிழை போல மூச்சு வந்து கொண்டிருப்பதையும், நாடிகளையும் சோதித்தவர் திரும்பி மன்னனை நோக்கி, "மன்னா, இன்னும் இரு முகூர்த்த காலம் உயிர் இவன் உடலில் இருக்கும். அதற்குள் பராந்தகனை இங்கு அழைத்து வர இயலுமானால், இவனைப் பிழைக்க வைக்கலாம்" என்றார்.



உயிர் ஊசலாடக் கிடக்கும் ராஜசிம்மனுக்கும், பராந்தகனுக்கும் என்ன தொடர்பு என்று மன்னன் கேட்கவில்லை. "விஷ்ணுசித்தரே, நம் படைத்தலைவருடன் பராந்தகன் இங்குதான் வந்து கொண்டிருக்கிறான்" என்றபடியே, அறையின் மூலையில் சோகம் தோய்ந்த முகத்துடன் நின்ற முகுந்தனை நோக்கினான் மன்னன்.

மன்னன் வார்த்தைகளை முடிக்கும் முன்பாகக் கதவை நோக்கிப் பாய்ந்த முகுந்தன், தடதடவெனப் படிகளிலிறங்கி ஓடினான். அடுத்த சில கணங்களில் மன்னனின் போர் ரதம், கோட்டையை விட்டுக் கிளம்பி அசுர வேகத்தில் பறந்தது.

சற்று நேரம் ராஜசிம்மனைச் சோதித்த விஷ்ணுசித்தர், தமது உதவியாளனுடன் கோட்டையின் மேற்கில் விரிந்திருந்த கானகத்தை நோக்கிச் சென்றார். அவர் திரும்பியபோது இருவர் கரங்களிலும் பல மூலிகைகளும், வேர்களும், மரப் பட்டைகளும் இருந்தன. மாளிகைக்குத் திரும்பியவர் சுடுநீரும், தேனும், அகல் விளக்கொன்றும் கொண்டுவரப் பணித்தார். அவை வந்தபின் அறைக்குள் நின்ற மன்னனையோ, மற்றவர்களையோ அவர் நிமிர்ந்தும் பார்க்கவில்லை. மன்னன் இடையே கேட்ட இரண்டொரு கேள்விகளுக்கும், சரிவர பதிலேதும் கூறவில்லை.

மூலிகைகளை அகலில் வாட்டியும், சுடுநீரில் வேக வைத்தும், மரப்பட்டைகளை இடித்துப் பொடியாக்கியும், தேனுடன் கலந்தும், மூலிகைச் சாறுகளைப் பிழிந்து கலந்தும், வெகு மும்முரமாகப் பணியில் ஈடுபட்டார். சற்றுப் பெரிய அளவிலான அகல் விளக்கைக் கொண்டு வரச் செய்து, அதன் சுடரில் கிண்ணத்திலிட்ட மூலிகைச் சாற்றை, மிதமான சூட்டில் வைத்திருக்க உத்தரவிட்டார். அந்தப் பணியைச் செய்பவன் மன்னன்தான் என்றும் கவனிக்

காதவர், "சற்று இறக்கிப் பிடி, அதிகம் உயர்த்தாதே" என்று கடிந்து கொள்ளவும் செய்தார்.

சற்று நேரத்தில் கோட்டை வாயிலிலிருந்து ஊதப்பட்ட கொம்புகள், படைத்தலைவரின் வருகையை அறிவித்து மன்னன் முகத்தை மலர வைத்தன. அரை நாழிகையில் படைத்தலைவர்களுடன், பராந்தகனும் உள்ளே நுழைந்தான்.

அறைக்குள் நுழைந்து மன்னனை வணங்கி நிமிர்ந்த பராந்தகனின் விழிகள், ராஜசிம்மனின் மீது பதிந்ததும் பிரமித்தன. அந்தப் பால் மணம் மாறாத முகத்தையும், அவன் காயங்களையும் கண்டவன், "இந்தச் சிறுவனையும் கொல்ல ஒருவனுக்கு மனம் துணிந்ததா? அந்த ராகுலன் என்ன மனிதன்தானா? இல்லை அரக்கனா?" என்றான் வேகத்துடன்.

விஷ்ணுசித்தர் பதிலேதும் கூறாமல் "பராந்தகா, சோழ உக்ரோதயத்தைக் கொடு" என்று கரத்தை நீட்டினார். உடனடியாக தன் கச்சை முடிப்பிலிருந்த உக்ரோதயத்தை அவரிடம் அளித்தவன், அவர் கூறியபடி அகலில் எண்ணெய்க்குப் பதிலாக மூலிகைச் சாற்றை மெல்லச் சரித்து விட்டான். தீபத்தின் ஒளி மெல்ல சிவந்து ஜொலித்தது. குறுகிய வாயுடைய ஜாடியொன்றின் மீது, உக்ரோதயத்தை, தீபத்திலிருந்து நான்கு விரற்கடை தூரத்தில் பொருத்திய விஷ்ணுசித்தர், மன்னனுடன் பராந்தகனையும், தன் உதவியாளனையும் தவிர மற்றவர்களை வெளியேறப் பணித்து கதவுகளை மூடினார்.

காயத்தின் மீது நுரை ததும்பிய மூலிகைச் சாற்றைத் தடவி, மரப்பட்டைகளைக் கரைத்த தேனை ராஜ சிம்மனுக்குப் புகட்ட உத்தரவிட்டார். உக்ரோதயம் மெல்ல உயிர் பெறத் தொடங்கியது. அதன் சிவந்த ஒளி உயர்ந்து அறையை நிறைத்து, காயத்தின் மீதிருந்த மூலிகைச் சாற்றை



இன்னும் நுரைக்க வைத்தது. அறையின் வெப்பம் உயர்ந்து, உயர்ந்து அறைக்குள்ளிருந்தவர்களை வியர்வையில் குளிக்க வைத்தது.

நாழிகை சென்றதா, ஜாமம் சென்றதா தெரியவில்லை. வெகு நேரம் கழித்து ராஜசிம்மனின் உடல் சிறிது அசைந்தது. அவன் விழிகள் மெல்லத் திறந்தன.

அதுவரை அடித்து வைத்த சிலையாய் அமர்ந்திருந்த விஷ்ணுசித்தர் நிமிர்ந்தார். "மன்னவா, இனி இவன் பிழைத்துவிடுவான்" என்றார் நிதானமாக.

மன்னன் அவரை நெருங்கி மூலிகைச்சாறு படிந்த அவர் கரங்களைப் பிடித்துக்கொண்டான். "விஷ்ணுசித்தரே, தக்க சமயத்தில் வந்து ராஜசிம்மனைப் பிழைக்க வைத்து விட்டீர். நீங்கள் எதைக் கேட்டாலும் தரச் சித்தமாக இருக்கிறேன். என்ன வேண்டும், கேளுங்கள்," என்றான் உணர்ச்சி மிகுந்த குரலில்.

விஷ்ணு சித்தர் மெல்ல நகைத்தார்.

"ஏன் நகைக்கிறீர் சித்தரே?"

"நான் வேண்டுவதைத் தர உன்னால் முடியாது, மன்னா" என்றார் நகைத்தபடி.

"நீங்கள் வேண்டுவது என்ன, கூறுங்கள்."

"வைகுந்தன் திருவடியைத் தவிர நான் வேண்டுவது வேறென்ன இருக்க முடியும்? தர முடியுமா உன்னால்?" என்றவர், "அவன் சம்மதமின்றி இந்த இளைய வீரனின் உயிரைப் பறிக்க காலனுக்கும் உரிமை கிடையாது மன்னா. இதில் என் பங்கும், உக்ரோதயத்தின் பங்கும் மிகச் சிறியவை தான். வித்தை, அறிவு, பொருள், பதவி எல்லாம் மற்றவர்க்குப் பயன்படவில்லையெனில், அவை வெறும் குப்பை. எனக்குத் தெரிந்ததைச் செய்தேன். அவ்வளவே.

அதற்காக நீ எதையும் தரவேண்டாம்" என்றவர் தம் உதவியாளனை மட்டும் நிறுத்திவிட்டு, மன்னனையும் பராந்தகனையும் வெளியே செல்லலாமென்று கூறினார்.

ஸ்நானாதிபாதிகளையும் உணவையும் முடித்து மன்னன் அரண்மனைக் கூடத்தில் நுழைந்தபோது, இரு படைத்தலைவர்களும், பராந்தகனும் பகதத்தனுடன் முகுந்தனும் காத்திருந்தனர். விஷ்ணுசித்தர் இருக்கை யொன்றில் அமைதியாக மற்றவர்களை கவனித்தபடி அமர்ந் திருந்தார்.

அநிருத்தரின் முகத்தில் உஷ்ணம் பரவிக் கிடந்தது. மன்னன் அமரும்வரையே பொறுத்தவர், "மன்னவா, நம் படைகளை இப்போதே அனுப்பி ராகுலனையும் அவன் வீரர்களையும் அழித்து விடலாம். அவன் கொங்கு நாட்டுக்குச் சென்றிருப்பதாக நம் ஒற்றர்கள் தெரிவித்திருக் கின்றனர். கொங்குநாட்டு கெந்ததேவராயனையும் சேர்த்து அழித்து விடலாம்" என்றார் வேகத்துடன்.

அடுத்து நின்ற சோழர் படைத்தலைவனின் முகத்தில் சிந்தனை தெரிந்தது. அவன் விழிகள் பராந்தகன் மீது பதிந்து மீண்டதைக் கவனித்த மன்னன், "விக்கிரமவரையா, நீ ஏதோ கூற விரும்புவதாகத் தெரிகிறது" என்றான்.

"ஆம், மன்னா, பராந்தகன் பல்லவச் சக்கரவர்த்தியைச் சந்தித்து வந்திருக்கிறான். அவன் கூறியபடி, நாம் உள் நாட்டுக் குழப்பங்களில் கவனம் செலுத்தும்போது எல்லையில் ராஷ்டிரகூடரால் அபாயம் நேரிடலாம்."

"பராந்தகன் கூறியவை உண்மைதான். மகாராணி ரேவாதேவியின் திட்டமும் ஏறக்குறைய அப்படித்தான். இதைப் பாருங்கள்" என்றார் விஷ்ணுசித்தர். அவரது நீட்டிய கரங்களில் ஓலைக் குழலொன்றும் இருந்தது.



குழலின் மீது ராஷ்டிரகூட அரச முத்திரை தெரிந்தது. ஓலையின் எழுத்துகள் தெளிவின்றிக் கிடந்தன. பல இடங்களில் அடித்தும் எழுதப்பட்டிருந்தன. மன்னனிடம் ஓலையை அளித்த படைத்தலைவர், "மன்னவா, ஓலையை எழுதியவருக்குத் தமிழில் அத்தனை தெளிவாக எழுத அறிந்திருக்கவில்லை என்பதும், இது வேறோர் ஓலையின் நகல் என்பதும் புலப்படுகின்றன" என்றார்.

ஆமென்று தலையசைத்த விஷ்ணுசித்தர், "மன்னவா, இவை மகாராணியால் கொங்கு மன்னனுக்கும், ராஷ் டிரகூட மன்னனுக்கும் எழுதப்பட்ட ஓலைகளின் நகல்கள். மகாராணியின் மெய்க்காவல் யவன மங்கையால் நகல் எடுக்கப்பட்டு என்னிடம் கிடைத்தவை. இதன்படி ராகுலனின் திட்டம் அடுத்து உத்தமபாளையத்தில் முயற்சி செய்யப்படும். அதேசமயம் எல்லையில் படைகளைக் குவிக்கவும் ராஷ்டிரகூட மன்னரைக் கேட்டுக்கொண்டிருக் கிறாள் மகாராணி."

அநிருத்தர் இடைமறித்தார். "மன்னவா, உத்தம பாளையத்தில் நம் ஆயுதசாலைகளை அழிக்கத் திட்ட மிட்டிருக்க வேண்டும் ராகுலன். ரணதீரப் பாண்டியன்தான் அங்கு கோட்டைத் தலைவன். அவனுக்கு உதவியாக நம் வீரர்களை அனுப்பி வைக்கலாம்."

விக்கிரமவரையன் தெளிவாகக் கூறினான்: "தேவை யில்லை அநிருத்தரே. எல்லையில் ஏற்படப் போகும் நிலைமையைச் சமாளிக்க நம் வீரர்களைத் தயார் செய்வது போதுமானது."

"அப்படியானால் ராகுலன், அவன் வீரர்கள்_?"

விஷ்ணுசித்தர் முடிவாகக் கூறினார்: "மன்னா, ராகுலனை கவனிக்கும் பொறுப்பை பராந்தகனிடம் விட்டு விடு. ராகுலனை இனி ராஷ்டிரகூடம் திரும்ப விடுவ

தில்லையென்று நந்திவர்மனிடம் கூறிவிட்டு வந்திருக்கிறான். படைத்தலைவர், எல்லைகளில் நம் வீரர்களைச் சித்தப் படுத்தட்டும்."

விஷ்ணுசித்தர் கூறியபடி பராந்தகனிடம் தனது முத்திரை மோதிரத்தையும், ரணதீரப் பாண்டியனுக்கும் ஓலையும் அளித்த மன்னன், அன்றே அவனுக்கு விடையளித்தான். வழியில் சந்திக்க வேண்டியவர்களைப் பற்றியும் கூறினான்.

தெற்கே நீண்டு கிடந்த மலைகளையும், கானகத்தையும் நோக்கி ராகுலன் சென்ற திசையில், பகதத்தனுடன் தன் பயணத்தைத் தொடங்கினான் பராந்தகன்.





(16)

## விஷ்ணுசித்தர் விசாரணை

**ப**ளீரென்ற மின்னல் தாழை மடலையும், நிலவின் குளிர்ந்த கிரணங்கள் அல்லிமலரையும் மலர வைத்து விடுவது போல, அரண்மனையையும் அரசியலையும் தவிர வேறொன்றையும் அறியாதிருந்த இளவரசியின் மனமும் மலர்ந்து கிடந்தது. அதுவரை மூடிக்கிடந்த பகுதியொன்று திறந்து நிலவொளியும், தென்றலும் புதிய இசையொன்றை இசைக்கத் தொடங்கியிருந்தது. கற்பனைகளும் கனவுகளும் நிறைந்து, ஏதேதோ மாற்றங்களை ஏற்படுத்திக் கொண் டிருந்தன.

மன்னனும் படைத்தலைவர்களும் திரும்பியபின் நடந்தவற்றைக் கேட்டவள் மனத்தில் ராஜசிம்மனைக் குறித்து வருத்தமும் வியப்பும் ஒன்றாகத் தோன்றின. அடுத்து பராந்தகன் ஏற்றுச் சென்றிருக்கும் அபாயப் பணியை அறிந்த அவள் சித்தம் அவனைக் குறித்து நினைக்கத் தொடங்கி,

தன்னிடம் ஏற்பட்டிருந்த மாற்றங்களை ரசிக்கத் தொடங்கியது. இரண்டே வீரர்கள் சென்று ராகுலனையும், அவன் வீரர்களையும் அழிப்பதென்பது இயலுமா? கொங்குச் சிற்றரசன் வேறு இதில் ராகுலனுக்கு உதவியாக இருக்கிறான். 'எந்த அபாயம் எங்கு காத்துக் கிடக்கிறதோ' என எண்ணியவளது தவிப்பு இன்னும் உயர்ந்தது.

உப்பரிகைச் சாளரத்தினருகே நின்று ராஜ வீதியை வெறித்துக் கொண்டிருந்தவளது புலன்கள் செயலிழந்து கிடந்தன. வீதியில் சஞ்சரித்த மக்களும், வணிகரும், ரதங்களும், புரவிகளும் எழுப்பிய ஒலிகள் அவளது செவிகளை எட்டவோ, காட்சிகள் பார்வையில் படவோ இல்லை. வானில் உயரத் தொடங்கிய நிலவும் அவள் கவனத்தைக் கவரவில்லை. தன்னிடம் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் மாற்றங்களுக்குக் காரணம் அந்த வீரனின் நினைவும், தன் மனம் அவனிடம் லயிப்பதும்தான் என்பதை உணர்ந்தாள் இளவரசி. நாணமும், தாபமும், இன்பமும் கலந்த உணர்வுகள் சித்தத்தை நிறைத்து விட்டதால், பின்னாலிருந்து அழைத்துச் சலித்து, திரும்பச் சென்றுவிட்ட பணிப்பெண்ணின் குரலோ, சற்று நேரம் கழித்து வந்து அழைத்த கார்குழலியின் குரலோ, அவள் செவிகளை எட்டவில்லை.

நெருங்கி வந்து இளவரசியின் தோளைத் தொட்ட கார்குழலி, "இளவரசியார் எந்தக் கோட்டையைப் பிடிக்க இத்தனை சிந்தனையிலிருக்கிறார்?" என்றாள்.

சட்டென்று திரும்பினாள் குமுதவல்லி.

அவள் எதிரே பெயருக்கேற்றபடி கறுத்துச் சுருண்ட கார்குழலில் அல்லி மலர்களைச் சூடி, அந்த அல்லியைவிட மலர்ந்து நோக்கிய விழிகளுடன் நின்ற கார்குழலியை ஒருமுறை ஏற இறங்க நோக்கினாள் குமுதவல்லி.



மதுரை அரண்மனை வாசம் அவள் தேகத்தில் ஊட்டியிருந்த செழுமை, சிவந்து கிடந்த கன்னங்களில் பூரித்திருந்தது. சோழநாட்டு விஷமம் விழிகளில் மீண்டும் குடியேறிக் கிடந்தது. அவளது அகன்ற நெற்றியும், நீண்ட நாசியும் பராந்தகனை நினைவுபடுத்தின. தான் அரண்மனைச் சித்திர மண்டபத்தில் பார்த்து தந்தையிடம் உறுதி செய்து கொண்டதை நினைத்துக் கொண்டாள் குமுதவல்லி.

"என்ன இளவரசி, அப்படிப் பார்க்கிறீர்கள்?"— கார்குழலியின் குரலில் ஆவல் தெரிந்தது.

"கார்குழலி எனக்கொரு உதவி செய்வாயா?"

"என்ன கேள்வியிது இளவரசி? உத்தரவிடுங்கள்."

"இந்த இளவரசிப் பட்டத்தை இதோ இந்தச் சாளரத்தின் வழியே வீசியெறிந்து விட்டு, என்னைப் பெயரிட்டே அழைத்தால் போதும்."

கார்குழலி சற்றுத் திகைத்தாள்.

"இளவரசி, நான் பணிப்பெண்... எப்படி...?"

"உன் மனதைத் தொட்டுச் சொல். பணிப்பெண்ணாகவா நான் உன்னை நினைத்துப் பழகுகிறேன்? என்னை இனிப் பெயரிட்டுத்தான் அழைக்க வேண்டும். இது என் உத்தரவு என்று வேண்டுமானாலும் வைத்துக்கொள்."

"இருந்தாலும் இளவரசி... இல்லையில்லை... குமுதவல்லி... நீங்கள் மன்னரின் ஒரே மகள். நான் ஏழை விவசாயக் குடும்பத்தின்..."

"நிறுத்து." குமுதவல்லியின் குரல் வெட்டியது. "சோழ நாட்டவர்களுக்கு பொய் கூறுவதும், களவு செய்வதும் இயற்கையாகவே வரும் போலிருக்கிறது. காட்டும்

மரியாதையும் அன்பும்கூடப் பொய்தான் போலிருக்கிறது"— படபடவென்றாள் குமுதவல்லி.

கார்குழலி திக்பிரமை பிடித்து நின்றாள். 'தன் செவிகளில் விழுந்தவை இளவரசி கூறியதுதானா' என்ற திகைப்பு அவளை அதிர்ச்சியில் உறைய வைத்தது.

மலர்ந்து கிடந்த விழிகளில் கொற்கையின் முத்துக்களை விடப் பளீரிடும் இரு முத்துக்கள் தோன்றி மின்னின.

"இளவரசி, நான் பொய் கூறினேனா? களவு செய்தேனா?" என்றாள் கார்குழலி பலவீனமான தொனியில்.

"ஆம், நீ கூறியது பொய். உன் தமையன் செய்தது களவு."

கார்குழலியின் விழிகளில் மின்னிய முத்துக்கள் உருண்டு கீழே விழுந்தன. தொடர்ந்து அவள் முகத்தில் ஒரு கம்பீரமும் சினமும் படர்ந்தன.

"இளவரசி, எந்த அவசியத்தை முன்னிட்டும்கூட நான் இதுவரை பொய் கூறியதில்லை. கூறவும் மாட்டேன். உண்மையையும், உழைப்பையுமே கற்றுத் தந்தார் என் தந்தை. பொய்களையும், களவையும் காஞ்சி அரண்மனையில்தான் கண்டேன். இந்த அரண்மனையும் உண்மையை நம்ப மறுப்பவர் இடமென்று அறிந்து கொண்டேன். என்னைத் திரும்பவும் வண்டாழஞ்சேரிக்கு இப்போதே அனுப்பி வையுங்கள். எங்கள் ஊர் மக்கள் சொந்த மகளாகவே என்னைக் காப்பாற்றுவார்கள். என் தமையன் திரும்பியதும் அவரையும் அனுப்பி வைத்து விடுங்கள்."— பொரிந்து தள்ளிய கார்குழலி, திரும்பி வாயிலை நோக்கி நடந்தாள்.

"நில் கார்குழலி, நில்."

திரும்பினாள் கார்குழலி.



"வண்டாழஞ்சேரிதானே உனது ஊர்?"

"ஆம். இப்போதே அனுப்பி வைத்துவிடுங்கள்."

"உன் தந்தையின் பெயர்?"

"கருணாகரர்."

"சரி, உங்கள் இல்லத்தில் வெகு காலமாக நீண்ட பேழையொன்றில் பெரும் வாளொன்று இருந்ததுண்டா?"

கார்குழலியின் முகத்தில் வியப்பு படர்ந்தது. "ஆம், இருந்தது. ஆனால்… அது உங்களுக்கு எப்படித் தெரிந்தது? அதைத்தான் என் தமையன் இப்போது பயன்படுத்துகிறார். அதைப்பற்றி என்ன?"

"அந்த வாளைப்பற்றி உன் தந்தை ஏதும் கூறியிருக்கிறாரா?"

"கூறியிருக்கிறார். என் பாட்டனாரின் அன்னை, யாரோ ஒரு பெரும் வீரரின் வாளுக்கு மாலையிட்டு மணந்து கொண்டதாகவும், அந்த வீரரின் வாள் அது என்றும் கூறியிருக்கிறார்."

"அப்படிச் சொல்லடி பெண்ணே, அப்படிச் சொல். என் சந்தேகம் உண்மையாயிற்று. உன் பாட்டனாரின் அன்னை யாருடைய வாளுக்கு மாலையிட்டார் என்பது தெரியுமா உனக்கு?"

"தெரியாது."

"நான் சொல்கிறேன் கேள். பல்லவச் சக்கரவர்த்தி மகேந்திரவர்மர் குடந்தையில் ஆராவமுதர் ஆலயத்தைக் கட்டும்போது, போர் ஏற்பட்டு பணிகள் பாதியில் நின்றன. அதைப் பிற்பாடு பூர்த்தி செய்தவர் அவர் மகன் நரசிம்ம பல்லவர். மாமல்லரின் வீரத்தில் மயங்கிய சோழ நாட்டுப் பெண்ணொருத்தி. அவர் வாளுக்கு மாலையிட்டாள்

அவரும் ஏற்றுக்கொண்டு குடந்தையிலேயே அவளுடன் வெகுகாலம் வாழ்ந்தார். தம் வாளுக்கு மாலையிட்ட மங்கையை ஆலயத்து மணிமண்டபத்தில் சிற்பமாகவும் வடித்தார். இன்னும் அந்தச் சிற்பம் அங்கேதானிருக்கிறது. போய்ப் பார்."

மாமல்லர் வடிக்காத மற்றொரு சிற்பமாகவே நின்றிருந்தாள் கார்குழலி.

"அந்த வம்சத்தில் வந்தவளடி பெண்ணே நீ. சோழ நாட்டு ரத்தத்துடன் பல்லவ ராஜவம்சத்துக் குருதியும் கலந்து தான் உன் உடலில் ஓடுகிறது. இப்போது சொல். நீ ஏழை விவசாயக் குடும்பத்துப் பெண்ணா? நீ கூறியது பொய் தானே?"

பிரமிப்பில் உறைந்துவிட்ட கார்குழலியின் குரல், சற்று நேரம் கழித்து பலவீனமாக ஒலித்தது: "என் தமையன் எதைக் களவு செய்தார்?... உக்ரோதயத்தையா?"

"இல்லை. அது சோழர் மணிமகுடத்தை அலங்கரித்தது. அதை மீட்டு வந்தது களவல்ல."

"வேறு எதைக் களவாடினார் என் தமையன்?"

"இந்தக் களவு பாண்டிய நாட்டில் நடந்தது. எனக்குச் சொந்தமாயிருந்ததைக் களவாடிவிட்டார் உன் தமையன். அது மட்டுமல்ல."

"வேறென்ன?"

"களவாடியதைத் தன்னுடன் கடத்திச் செல்ல, என் தந்தையும் தம் பட்டத்துப் புரவியைக் கொடுத்து உதவி யிருக்கிறார். அறியாமலேயே, ஏமாற்றப்பட்டுச் செய்திருந் தாலும் இருவருமே குற்றவாளிகள்தாம்."

"பாண்டிய மன்னருமா?"



"ஆம். மன்னரானாலும் களவாடியவர் தப்பிக்க உதவுவது குற்றம்தானே?"

"விளங்கவில்லை. என் தமையன் எதைக் களவாடிச் சென்றார்?"– கார்குழலியின் குரல் உயர்ந்து ஒலித்தது.

குமுதவல்லியின் முகம் சிவந்து குமுதமானது. விழிகள் தாழ்ந்து தரையை நோக்கின. பின் மெல்ல கடைக்கண்ணால் கார்குழலியை நோக்கியவள், "என் இதயத்தை" என்றாள் மிக மெதுவாக, தெளிவாக.

மீண்டும் திகைப்பில் உறைந்தாள் கார்குழலி.

"யார் எதைக் களவாடினார்கள்? யார் உதவி செய்தார்கள்?"– கேட்டபடியே உள்ளே நுழைந்தான் பாண்டிய வரகுணன்.

கார்குழலி முறையிட்டாள்: "மன்னவா, என் தமையன் பராந்தகன் இளவரசிக்குச் சொந்தமாயிருந்ததைக் களவாடி விட்டானாம்."

"ஓகோ, என்ன துணிச்சல் அவனுக்கு? விசாரணை நடத்த வேண்டியதுதான்."

"அதுமட்டுமல்ல மன்னவா, அவன் தப்பிச் செல்ல தாங்கள் பட்டத்துப் புரவியைக் கொடுத்து உதவியிருக் கிறீர்களாம்."

"ஆகா, அப்போது நானும் குற்றவாளிதானா?"

"அறிந்து செய்தாலும், அறியாமல் செய்தாலும் குற்றம் குற்றம்தானே மன்னவா?"

"ஆம் உண்மைதான். எனில் நானும் குற்றவாளிதான்?"

"ஆம் மன்னவா, இளவரசி அப்படித்தான் கூறினார்."

"அப்படியானால் இதை யார் விசாரிப்பது? எதற்கும் களவு போனது என்னவென்று தெரிந்தால், நானும் என்

புரவியும் தப்பிக்க வழியேதுமிருக்கிறதா என்று பார்க்கலாம். எப்படியும் பராந்தகன் சிக்கிக்கொண்டு விழிக்கப் போகிறான்."– மன்னன் முகத்தில் மகிழ்ச்சி தெரிந்தது.

"சொல்லுங்கள் இளவரசி" என்றாள் கார்குழலி.

குமுதவல்லியிடமிருந்து வார்த்தைகள் வெளிவர மறுத்தன. செக்கச் செவேலென்று ஜொலித்த முகம் நிமிர்ந்து தந்தையைப் பார்க்க மறுத்தது. கால் விரல்கள் தரையில் கிழித்த கோலங்கள் கூடின.

மன்னன் தெளிவாகப் புரிந்து கொண்டதால் "ஓகோ, அப்படியா சேதி?" என்றான்.

"ஆம் மன்னவா. இதை யார் விசாரிப்பது மன்னா? பாவம், என் தமையனுக்கு என்ன தண்டனை கிடைக்கும்? அவனைக் காப்பாற்ற வழியேதும் சொல்லுங்கள் மன்னவா."– கார்குழலியின் குரலில் கவலை ஒலித்தது.

"என்ன நடக்கிறது இங்கே? என்ன விசாரணை? யாரைக் காப்பாற்ற வேண்டும்?"– கேட்டபடியே உள்ளே நுழைந்தார் விஷ்ணுசித்தர்.

"வாருங்கள் விஷ்ணுசித்தரே, ஒரு குற்றம் நிகழ்ந்திருப்பது நிருபணமாகிவிட்டது. ஆனால் யார் விசாரிப்பது என்பதுதான் புரியவில்லை" என்றான் மன்னன்.

"இதென்ன கேள்வி மன்னா? நீதான் விசாரித்து தீர்ப்புக் கூற வேண்டும்."

"அது முடியாது விஷ்ணுசித்தரே. ஏனெனில் இந்த வழக்கில் நானும்கூட ஒரு குற்றவாளி."

"ஆகா, இது ஏதோ சுவாரஸ்யமான அரண்மனை விவகாரமாகத் தெரிகிறது. சரி, நானே இதை விசாரிக்கிறேன்."



"வாய்ப்பே இல்லை விஷ்ணுசித்தரே, உம்மால் இதை விசாரிக்க முடியாது."– திட்டவட்டமாக மறுத்தான் மன்னன்.

"ஏன் முடியாது?"

"தங்களால் இது முடியவே முடியாது."

"அதைத்தான் ஏன் என்கிறேன்?"

"தாங்கள் துறவி. இந்த விவகாரங்கள் தங்களுக்குப் புரியாது. தவிர..."

"இன்னும் என்ன?"

"இதில் நானும் பராந்தகனும் குற்றவாளிகள். எங்களை விசாரித்துவிடலாம். மூன்றாவது குற்றவாளியை விசாரிக்க முடியாது."

"இதென்ன அக்கிரமம்! கேட்பார் யாருமில்லையா? மன்னனான உன்னையே விசாரிக்கலாமென்கிறாய். அப்படி விசாரிக்க முடியாத மூன்றாவது குற்றவாளி யார்?"– ஆவலுடன் கேட்டார் விஷ்ணுசித்தர்.

"என் பட்டத்துப் புரவி, அதை எப்படி விசாரிக்கப் போகிறீர் விஷ்ணுசித்தரே?"

விஷ்ணுசித்தர் திருதிருவென விழித்தார்.





## (17)

## வாரணாவதப் படலம்

**யா**னையொன்றின் தலைப்பகுதி போலவும், அடுத்து உயர்ந்து எழும் அதன் முதுகுப் பகுதி போலவும் இயற்கையிலேயே அமைந்திருந்தது அந்த மலைப்பகுதி.

மலைப்பகுதியின் நடுவேயிருந்து அருவியொன்றும் சரிந்து அதிவேகத்துடன் கீழ் நோக்கி இறங்கி பாறைகளைத் தாக்கித் தேங்கி, பின் காட்டாறாக வனத்தினூடே பாய்ந்து கொண்டிருந்தது. நீர்ச் சுழல்கள் ஆக்ரோஷமாக மரங்களின் வேர்ப் பகுதியில் தாக்கித் திரும்பிய இடத்தில் எழுந்து நின்றது, ஓர் ஆலயம். ஆலயத்தை அடுத்து சிதிலமடைந்த பெரும் மண்டபமொன்றும், இடிந்த தூண்களுடனும், சரிந்த மேற்கூரையுடனும் தெரிந்தது.

அந்த மண்டபத்தின் வெளிப்புறத்தில் தூணொன்றின் மீது சரிந்து அமர்ந்திருந்தான் ஒருவன். பருத்த உடலும்,



கழுத்தில் ஊசலாடிய மணிகளும், தலையில் சுற்றப்பட்ட தோற்பட்டையில் செருகியிருந்த இறகுகளும், அருகிலிருந்த சிறு வில்லும் அம்புகளும், அவன் வேடுவனென்பதை அறிவித்தன.

"வாரணாவதத்துப் பாண்டவர்கள் போலக் காட்டில் அலைய வைத்துவிட்டார்களே என்னை?" என்று உரக்கவே சலித்துக் கொண்டான் அந்த வேடுவன். சற்று நேரம் கழித்து காட்டுக்குள் திடீரென எழுந்த ஒலிகளை கவனித்த அவன் முகத்தில் எச்சரிக்கை தெரிந்தது. சட்டென்று திரும்பியவன் மண்டபத்தின் இருளடித்த மூலையொன்றுக்குச் சென்று, சிலையொன்றின் பின்னால் மறைந்து கொண்டான். அவன் பதுங்கிய இடத்தில் காலடியில் வழுவழுத்து ஏதோ ஊர்ந்தது. சட்டென்று ஒரு கையால் அதைப் பற்றியவன், தூக்கி மண்டபத்தின் நடுப்பகுதியை நோக்கி வீசினான். நீண்ட பெரும் மலைச் சர்ப்பமொன்று நகர்ந்து வெளிப்புறத்தை நோக்கிச் சென்றது.

சற்று நேரத்தில் புரவிகள் பல மண்டபத்தின் வாயிலில் வந்து நின்றன. முதலில் வந்து இறங்கினான் ராகுலன். அவன் பின்னால் புரவியில் வந்து இறங்கியவன் சற்றுக் குட்டையாகவும், படோடோப உடையும், கழுத்தில் முத்தாரங்களுடனும் தெரிந்தான். மண்டபத்தின் முகப்பை இலேசாகச் சுத்தம் செய்துவிட்டு, விரிப்பொன்றைப் பரப்பி ராகுலனுடன் அமர்ந்தான் அந்த மனிதன். மற்ற வீரர்கள் நின்றும், இருந்தும், மரங்களில் சாய்ந்தும் ராகுலன் கூறப் போவதைக் கேட்கத் தயாராக இருந்தனர்.

"காங்கேயரே, நமது பணிக்குச் சாதாரண வீரர் போதாதென்று தெரியுமல்லவா? எத்தனை வீரர்களை அழைத்து வந்திருக்கிறீர்?" என்றான் ராகுலன்.

காங்கேயன் என்ற அந்த மனிதன் ஒரு கோணல் சிரிப்புச் சிரித்தான். "ராகுலா, உன் அழைப்பும், மகாராணியின் ஓலையும் எத்தகைய பணியென்பதைப் புரிய வைத்து விட்டன. என்னுடன் வந்திருக்கும் ஆயிரம் வீரர்கள் தாம் உதயேந்திரபுரியில் கொள்ளை நடத்தியவர்கள். பல்லவ மன்னரே பின்பு வந்து விசாரித்ததாகச் சொன்னார்கள், போதுமா?"

ராகுலனின் திருப்தி முகத்தில் தெரிந்தது.

"சரி, காங்கேயரே, நம் இலக்கு மேலைமங்கலத்து ஆயுத சாலையை அழிப்பது. அருகில் ரணதீரப் பாண்டியனின் உத்தமபாளையம் வேறு இருக்கிறது. என்ன செய்யலாமென்று கூறுங்கள்."

காங்கேயன் முகத்தில் சிந்தனை தெரிந்தது. "ராகுலா, இது சற்று அபாயமான பணிதான். கொங்கு மன்னர் கெந்ததேவராயர் உங்களுக்கு எப்படியும் உதவக் கட்டளையிட்டிருக்கிறார். ரணதீரனுடன் விளையாடுவதும் காலனைச் சீண்டுவதும் ஒன்று. இருந்தாலும்... ஒரு வழி இருக்கிறது."

"என்ன வழி?"

"இந்த மலைத்தொடரை அடுத்து சரிவில் இறங்கினால், மேற்கில் தோகை மரக்கூட்டம், ஊடே மூங்கிலும் புதர்களும் தான். அதன் முடிவிலிருந்து மூன்று காத தூரம் ஆயுத சாலையான மேலைமங்கலக் கோட்டை. ஆயுத சாலையை அழிக்க கோட்டைக்குள் சென்றுதான் ஆகவேண்டும். அங்கிருந்து மிக அருகில் உத்தமபாளையம் இருக்கிறது. உத்தமபாளையத்தில் காவலுக்கு நிற்பவையே யானைகள் தாம். ஐந்து காத தூரத்தில் எதிரிகள் வரும்போதே அவை அறியக் கூடியவை."



"என்ன, காவலுக்கு யானைகளா?"— வாயைப் பிளந்தான் ராகுலன்.

"ஆம். மேலைமங்கலத்துக் கோட்டை வாயில்கள் முதல் ஜாமத் தொடக்கத்திலேயே மூடப்படும். வடக்கு வாயில் மட்டும் திறந்திருக்கும்."

"காரணம்?"

"உள்ளே வடிக்கப்படும் ஆயுதங்களை தினமும் மாலையில் இந்தச் சரிவிலிறங்கும் ஆற்றில் கொண்டு வந்து போட்டு குளிர வைப்பார்கள். திரும்ப எடுத்துச் செல்ல இரண்டாம் ஜாமம் ஆகிவிடும். ஆயுதங்களுடன் அதிக வீரர்கள் வருவதில்லை. அவர்களைத் தாக்கி அழித்தால், திறந்திருக்கும் வடக்கு வாயில் வழியே நுழைந்துவிடலாம். கோட்டையின் நடுவே ஆயுதசாலை இருக்கிறது. வார்ப்புகளையும் அச்சுகளையும் அழித்துவிட்டு, வலப்புறம் நெற் களஞ்சியம் இருக்கிறது. அதற்கும் தீயிட்டு விட்டால், எதிர்ப்பவர்களைக் கொன்றுவிட்டு உடனே திரும்பலாம். உத்தமபாளையத்துக்குச் செய்தி எட்டுமுன் முடிந்தால் நாம் எளிதாகத் தப்பலாம்."

காங்கேயனின் திட்டம் ராகுலனாலும், ராஷ்டிரகூட வீரர்களாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

அதுவரை மற்றொரு மூலையில் பதுங்கிக் கிடந்த மலைச் சர்ப்பம் மீண்டும் சரசரவென்று மண்டபத்தின் உட்புறத்தை நோக்கி விரைந்தது.

**மே**லைமங்கலத்திலிருந்து நான்கு காத தூரத்திலிருந்த உத்தமபாளையத்துக் கோட்டையில், ரணதீரப் பாண்டியனின் எதிரே நின்றிருந்தான் பராந்தகன். ரணதீரனின் கழுகுக் கண்களில் அவநம்பிக்கையும், அலட்சியமும் தெரிந்தன. அவன் பெரு மீசையும் அலட்சியமாக அசைந்தது.

"பராந்தகரே, நீங்கள் கூறுவதில் எனக்கு நம்பிக்கை பிறக்கவில்லை. ராஷ்டிரகூட ராகுலனாவது, எல்லையைக் கடந்து இத்தனை தூரம் வருவதாவது!" என்றான் ரணதீரன்.

பராந்தகன் நிதானமாக விளக்கினான். "கோட்டைத் தலைவரே, படைத்தலைவர் அநிருத்தர் தாக்கப்பட்டதை அறிவீர்களல்லவா?"

"அறிவேன். உங்களைப் பற்றியும் அப்போதுதான் கேள்விப்பட்டேன்."

"இந்தளதேவருக்கு நேர்ந்ததை..."

"என்ன ஆயிற்று இந்தளதேவனுக்கு? எனக்கு ஓலைகள் வந்து சேரவே நான்கு தினங்களாகின்றன. நானும் தெற்கே சென்றிருந்தேன். அவன் என் உறவினன். என்ன நேர்ந்தது?"– ரணதீரன் முகத்தில் கவலை தெரிந்தது.

நடந்தவற்றைக் கூறினான் பராந்தகன்.

அதிர்ந்து போய் நின்றான் ரணதீரப் பாண்டியன். அவனது பெரு மீசை பயங்கரமாகத் துடிக்க ஆரம்பித்தது. "இப்போதே நான் சென்று..." என்று வேகத்துடன் சாளரத்தை அடைந்தவன், "யாரங்கே?" என்று கூவினான் பலமாக. அடுத்து அவன் முகத்தில் இலேசான பதற்றமும் தெரிந்தது. "மன்னரின் பட்டத்துப் புரவி நிற்கிறதே..." என்றான் படபடப்புடன்.

"மன்னர் இந்தப் பணிக்காக எனக்கு அளித்தார் ரணதீரரே. முத்திரை மோதிரமும் அளித்தார்" என்றான் பராந்தகன்.

சட்டென்று திரும்பிய ரணதீரனின் விழிகளில் ஒருகண நேரமே வியப்பு தெரிந்தது. அடுத்தகணம் உணர்ச்சிகளை கட்டுக்குள் நிறுத்தியவன், பராந்தகன் கரத்தில் ஒளிவிட்ட



முத்திரை மோதிரத்தைக் கண்டு, ஏதோ மன்னனையே நேரில் கண்டதுபோல் தலைவணங்கினான். அவன் சொற்களும் திடமாக ஒலித்தன.

"பராந்தகரே, இனி உமது வார்த்தைகள் எனக்கு உத்தரவு. கூறுங்கள். நான் என்ன செய்ய வேண்டும்?"

பராந்தகன் பதில் கூறுமுன் வாயிலிலிருந்து வீரன் ஒருவன் வந்து வணங்கினான். "பிரபு, கோட்டை வாயிலில் வேடுவன் ஒருவன் வந்து தங்களைக் காண நிற்கிறான். இதோ நிற்கும் இவர் பெயரையும், ஏதோ புராணக் கதைகளையும் கூறுகிறான்" என்றான்.

பராந்தகன் முகத்தில் முறுவல் தெரிந்தது. "ரணதீரரே, வந்திருப்பவன் எனது நண்பன். மலைப்பகுதியில் ராகுலனின் நடமாட்டம் பற்றி அறிய அனுப்பியிருந்தேன்" என்றான்.

"அவரை அழைத்து வா!" – உத்தரவிட்டான் ரணதீரன்.

சற்று நேரத்தில் உள்ளே நுழைந்த பகதத்தன் முகத்தில் ஆயாசம் தெரிந்தது. "பராந்தகா, விருஷபர்வ ராஜ குமாரியால் கிணற்றில் சிக்கிக் கொண்ட தேவயானியைப் போல், ஒரு காட்டு மண்டபத்தில் சிக்கிக் கொண்டேன். மலைச்சர்ப்பமொன்று வேறு தொல்லை கொடுத்தது. இதைக் கேள். ராகுலனும், கொங்கு நாட்டுக் காங்கேயனும் ஆயிரம் வீரர்களுடன் மேலைமங்கலத்துக்கு வருகிறார்கள்" என்றவன் திரும்பி ரணதீரனைப் பார்த்து, "இவரது பெரு மீசை ஏன் இப்படித் துடிக்கிறது. கடோத்கஜன் கௌரவரைக் கண்டது போல...?" என்றான்.

"யார் தேவயானி? எந்த ராஜகுமாரி? காட்டுக்குள் கிணறு எங்கு வந்தது. மலைச்சர்ப்பத்துக்கு மீசை ஏது? இவர் என்ன கூறுகிறார்?"– ரணதீரப் பாண்டியன்

பராந்தகனையும், பகதத்தனையும் பார்த்துக் கேட்டான் குழப்பத்துடன்.

பராந்தகன் நகைத்தான். "ரணதீரரே, ராகுலனும் கொங்கு நாட்டுக் காங்கேயனும் மேலைமங்கலத்தைத் தாக்கி, ஆயுத சாலையை அழிக்க வந்து கொண்டிருக்கிறார்கள், அவ்வளவே" என்றவன் பகதத்தனை நோக்கி "நீ கண்டு வந்ததைச் சொல் பகதத்தா" என்றான்.

பகதத்தன் விடுவதாக இல்லை. "ஆயுத சாலை மட்டு மல்ல பராந்தகா. வாரணாவதத்தில் அரக்குமாளிகையை எரித்தது போல் நெற்களஞ்சியத்தை..."

"போதும் பகதத்தா. புராணத்தைப் பிறகு சொல். எப்போது ராகுலன் தாக்கப் போகிறான்?"

அடுத்து பகதத்தன் கூறியவற்றையும், ஆயுத சாலையின் நடைமுறைகளையும் கேட்டுக் கொண்ட பராந்தகன், ராகுலனை எதிர்கொள்ள தனது திட்டத்தை விளக்கினான். அவன் விவரிக்க விவரிக்க, ரணதீரப் பாண்டியன் முகத்தில் வியப்பும், பிரமிப்பும் படரத் தொடங்கின.

தன் உபதலைவர்களை அழைத்து மளமளவென்று உத்தரவுகளைப் பிறப்பித்தான் ரணதீரப் பாண்டியன். பராந்தகனும், பகதத்தனும் உடன்வர, உத்தமபாளையத்தின் பிரசித்தி பெற்ற போர்க் களிறுகளுடனும், புரவிப் படையுடனும் மேலைமங்கலத்தை நோக்கிப் புறப்பட்டான்.

இரவு இரண்டாவது ஜாமத்தை எட்டிவிட்டதால், சற்றே மேலேறிவிட்ட வெண்ணிலவு, தோகை மரக்கூட்டங்களுக் கிடையே தன் கதிர்களைப் பாய்ச்சி, அங்கு பதுங்கிக் கிடந்தவர்கள் யாரென்பதைக் கண்டறிய முயன்று கொண் டிருந்தது. புதர்களுக்கிடையே புரவிகளை நிறுத்தி அதிகம்



அரவமின்றி, ராகுலனின் உத்தரவுக்காகக் காத்திருந்தனர் ராஷ்டிரகூட, கொங்கு வீரர்கள்.

முன்னால் நின்று தூரத்தில் தெரிந்த மேலைமங்கலக் கோட்டையை வெறித்துக் கொண்டிருந்தான் ராகுலன்.

எதிர்பார்த்தபடி வடக்கு வாயிற் கதவுகள் திறந்தே கிடந்தன. ஆற்றிலிருந்து கோட்டை வரை நீண்டு கிடந்த மணல் வெளியில் நான்கைந்து பாண்டிய வீரர்களும், ஆற்றின் கரையில் திரும்பி நின்றிருந்த ஆயுத வண்டி களின் அருகில் ஐம்பதுக்கும் குறைவான வீரர்களுமே தென்பட்டனர். கோட்டை வாயிலிலும் மேற்புறத்திலும்கூட அத்தனை காவலர்கள் இருப்பதாகத் தெரியவில்லை. வண்டி களின் அருகிலும், கோட்டை வாயிலின் அருகிலும் எரிந்த பந்தங்களைத் தவிர வேறு பந்தங்களும் எரியவில்லை. கோட்டையின் கிழக்கும் மேற்குமான முனைகளில், நிலவொளி ஓரளவிற்கே கதிர்களைப் பாய்ச்சி, அடுத்துத் தொடர்ந்த தோகை மரங்களினூடே விபரீத நிழல்களைக் காட்டிக்கொண்டிருந்தது. வண்டிகளில் ஆயுதங்களை ஏற்றும் ஓசைகளைத் தவிர்த்து, அதிகமாக வேறு ஒலியேதும் கேட்க வில்லை.

மிகச் சாதகமான சூழ்நிலை கண்ணெதிரே விரிந்து கிடந்தாலும், ராகுலன் சித்தத்தில் ஏதோ அபாயம் காத்து நிற்பதான உள்ளுணர்வு தோன்றிக் கொண்டிருந்தது.

தாக்குதலைத் தொடங்க வேண்டிய தருணம் நெருங்கி விட்டதால், ராகுலனை நெருங்கிய காங்கேயன், "ராகுலா, ஏன் தாமதிக்கிறாய்? தாக்கத் துவங்கலாமல்லவா?" என்றான்.

"ஆயுதங்களை வண்டிகளில் ஏற்றி, காளைகளைப் பூட்டும்போது நாம் தாக்கத் துவங்கலாம்" என்ற ராகுலனின் குரல் வறண்டு கிடந்தது.

சற்று நேரத்தில் ஆற்றின் கரையிலிருந்த வண்டிகளில் காளைகள் பூட்டப்பட்டன. வண்டிகள் கோட்டையை நோக்கி நகரத் தொடங்கியதும், தன் வாளை உயர்த்தி சைகை செய்த ராகுலன், புரவியைப் பாயவிட்டுச் சரிவில் இறங்கினான்.

தொடர்ந்து ஆயிரம் புரவிகள் வீரர்களுடன் கன வேகத்தில் சரிவில் இறங்கி, கோட்டையின் வடக்கு வாயிலை நோக்கிப் பாய்ந்தன. ஆற்றிலிறங்கி மணல்வெளியை அடைந்த புரவி வீரர்கள், சிலர் ஆயுத வண்டிகளைச் சூழ்ந்து கொள்ளவும், மீதி வீரர்கள் கோட்டை வாயிலை நோக்கியும் கூச்சல்களுடன் புரவிகளைப் பாய விட்டனர்.

ஆயுத வண்டிகளை நடத்திச் சென்ற பாண்டிய வீரர்கள் நின்று, திரும்பி, புரவிகளில் பெருங் கூச்சலுடன் வருபவர் களைப் பார்த்தனர்.







(18)

## உனக்கு இரங்காவிடில்...

சதித்திட்டங்கள் வகுப்பதிலும், வெகு திறமையுடன் சமயம் பார்த்து அவற்றை நிறைவேற்றுவதிலும் மகா நிபுண னென்று பெயர் எடுத்திருந்த ராகுலன், மேலைமங்கலக் கோட்டையைத் தாக்க வகுத்திருந்த திட்டமும் சமயமும் மிகச் சரியானதுதான். ஆனால் அதை நிறைவேற்றும் போது அங்கு ஏற்பட்ட மாற்றங்கள் அவனைத் திணறடிக்கவே செய்து, சுத்த வீரத்துக்கும் நேரிடையான போருக்குமே என்றும் பிரதான மதிப்பளிக்கும் தமிழர்கள், சதிகளையும் எப்படி எதிர் கொள்வார்கள் என்பதைப் புரிய வைத்தன.

ராகுலனும், கொங்கு நாட்டு காங்கேயனும் வீரர் களுடன் அதிவேகமாக நெருங்குவதைக் கண்ட பாண்டிய வீரர்கள், மீண்டும் கோட்டையை நோக்கிச் சாவதானமாக வண்டிகளை நடத்த ஆரம்பித்தார்கள். வண்டிகளை நெருங்கிச் சூழ்ந்து கொள்ள ராகுலனின் வீரர்கள் சற்றுத்

தொலைவிருக்கையில், கோட்டைச் சுவரின் மீது திடீரெனப் பந்தங்கள் பல எரிந்தன. திறந்து கிடந்த வடக்கு வாயிலின் வழியே வரிசையாக வெளிவந்த பாண்டிய வீரர்கள் இரு பிரிவுகளாகப் பிரிந்து, கரங்களில் விற்களுடனும், ஈட்டிகளுடனும் அணிவகுத்தனர். அடுத்து அசுர வேகத்தில் பாய்ந்து வந்த புரவிகளில் இருந்த வீரர்கள், ஆயுத வண்டிகளைச் செலுத்தியவர்களுக்குப் பாதுகாவலாகச் சூழ்ந்து கோட்டையை நோக்கித் திரும்பச் செலுத்தினார்கள். அதே சமயத்தில் ராகுலனின் பின்புறத்தில், ஆற்றின் சரிவுகளிலிருந்து பந்தங்களுடன் வீரர்களின் அணிவகுப்பு ஒன்றும் தோன்றி நீண்ட சுவர் போல நின்றது.

கோட்டையின் எதிரேயிருந்த மலைவெளியில் ராகுலனும் அவன் வீரர்களும் புரவிகளை நிறுத்தி கோட்டையை வெறித்தனர். இரண்டாவது கணத்தில் ராகுலன் நின்றிருந்த தரை தட்தட்டென்று அதிரத் தொடங்கியது. கோட்டையின் இடப்புறத்தில் இரண்டு கோல் உயரத்தில் வரிசையாகப் பந்தங்கள் தெரிந்து நகர்ந்தன. சற்று நெருங்கியதும் அவை பாண்டியரின் போர்க்களிறுகளின் ஒரு பிரிவு என்பது புலப்பட்டது ராகுலனுக்கு. களிறுகளின் முகப்பில் பூரண கவசங்களுடன், பெரும் ஈட்டிகள் பக்கங்களில் ஊசலாட, பல களங்களைக் கண்டும் தாகம் தீராத தன் நீண்ட வாளுடன் வந்து கொண்டிருந்தான் ரணதீரப் பாண்டியன்.

தன்னைத் தொடர்ந்து வந்து, தானும் காங்கேயனும் வகுத்த திட்டத்தையும் அறிந்து, யாரோ தகுந்த முன்னேற்பாடுகள் செய்து கொள்ள உதவியிருக்க வேண்டும் என்பது புரிந்தது ராகுலனுக்கு.

ராகுலன் நின்ற இடத்தின் வலதுபுறத்தில் கோட்டையின் பக்கங்களிலிருந்து புரவிப்படைப் பிரிவு ஒன்றும் பாய்ந்து வரத் தொடங்கியது. முன்னால் வந்த பாண்டிய மன்னனின்



சாம்பல்நிறப் புரவியும், அதன் மீது அமர்ந்து, ரிஷப இலச்சினையுடன் கூடிய வாளை உயர்த்தியபடி வந்த அந்தச் சோழ நாட்டு வாலிபனையும் கண்ட ராகுலனுக்கு, தன்னைத் தொடர்ந்து வந்து திட்டங்களை அறிந்தவன் யாராக இருக்கக் கூடும் என்ற கேள்விக்கு விடையும் கிடைத்தது. உறையூரில் கண்ட அந்த வாளின் வீச்சும் நினைவில் எழுந்தது.

நான்கு புறமும் சூழப்பட்டுவிட்ட ராகுலனை அதற்கு மேல் சிந்திக்கவிடவில்லை ரணதீரன். அவன் கரத்திலிருந்த பெரும் ஈட்டி உயர்ந்து இருமுறை ஆடியது. அடுத்தகணம் எழுந்தது பெருங்கூச்சல். போர்க்களிறுகள் பயங்கரமாகப் பிளிறின. நிலம் அதிர தட்தட்டென்று வேக நடையில் ராகுலனின் படைப்பிரிவை நோக்கி ஓடின. ஜிவ்ஜிவ் வென்று பறந்த ஈட்டிகள் காங்கேயனின் படைப்பிரிவில் அதிவேகத்துடன் இறங்கின. பராந்தகனின் புரவிப்படைப் பிரிவு நாலுகால் பாய்ச்சலில் நெருங்கின. பருத்த உருவமும் கனத்த பட்டையான வாளுமாக, பகதத்தன் ஏதோ கோபம் கொண்ட பிரம்மராட்சதன் போல் ராகுலன் இருந்த இடத்தை நோக்கி, சரமாரியாக ராஷ்டிரகூடர்களை வெட்டித் தள்ளியபடி முன்னேறினான். முன்னும் பின்னுமிருந்து அம்புகள் பறந்தன. எல்லாக் கொள்ளைகளுக்கும் தன்னுடன் துணை வந்த ராஷ்டிரகூடர்கள் கண்ணெதிரே மடிவதையும், துணைக்கு வந்த காங்கேயனின் வீரர்கள் துவம்சம் செய்யப்படுவதையும் கண்ட ராகுலனின் ஆத்திரம் தலைக்கேறியது. இனி தானும் தன்னுடன் வந்தவர்களும் முற்றிலுமாக அழிக்கப்படுவதும், தப்பிச் செல்ல வழியேதுமில்லையென்பதும் புரிந்தது ராகுலனுக்கு. பின்வாங்கிய படியே நகர்ந்தவன் கண்ணில் ஆற்றின் கரையிலிருந்த வீரர்களுக்கும், போர்க்களிறுகளுக்குமிடையே தெரிந்த இடைவெளி புலப்பட்டது. மற்றவர்கள் போரிட்டுக் கொண்டிருக்க, மிஞ்சிய ஏழெட்டு வீரர்களுடன் அந்த

இடைவெளியை நோக்கிப் புரவியைப் பாயவிட்டான் ராகுலன். சமூழத்தை உரசிச் சென்ற ஈட்டிகளிலிருந்தும், அம்புகளிலிருந்தும் காயங்களுடன் தப்பியவன், தோகைமரக் கூட்டங்களிடையே பாய்ந்து மறைந்தான்.

அடுத்த ஒரு ஜாமத்தில் அந்தப் போர் முடிந்தபோது ராகுலனுடன் தப்பியவர்களைத் தவிர, ராஷ்டிரகூடர் அனைவரும் காங்கேயனின் வீரர்களுடன் மடிந்திருந்தனர். மார்பில் ரணதீரனின் பெரும் ஈட்டி குத்திட்டு நிற்க, காங்கேயனின் உயிரற்ற விழிகள் வானத்தை வெறித்துக் கிடந்தன.

இறந்தவர்களுக்கு ஆற்றின் கரையிலேயே கிரியைகள் செய்துவிட உத்தரவிட்ட ரணதீரன், பராந்தகனும் பகதத்தனும் உடன் வர, உத்தமபாளையக் கோட்டைக்குத் திரும்பினான்.

**ம**றுநாள் காலைப் பொழுதிலேயே தன் முன் பயணக் கோலத்தில் வந்து நின்ற பராந்தகனையும், பகதத்தனையும் கண்ட ரணதீரனின் முகத்தில் வியப்பு பரவியது.

"பராந்தகரே, உங்கள் காயங்களுக்கு இன்னும் சரிவர மருந்திடவும் இல்லை. அதற்குள் எங்கு பயணப்பட்டு விட்டீர்கள்?" என்றான் வியப்புடன்.

"தலைவரே, ராகுலன் தப்பிவிட்டான். அடுத்து அவனுக்குப் புகலிடமாகவும், உதவி பெறவும் உள்ள இடம், மலைநாட்டின் வில்லவனின் பகுதிதான். ராகுலனை மீண்டும் ராஷ்டிரகூடம் திரும்ப விடுவதில்லை என்று மன்னரிடம் உறுதி கூறிவிட்டே நான் புறப்பட்டேன். விடை கொடுங்கள்" என்றான் பராந்தகன்.

ரணதீரன் சற்று சிந்தித்தான். "பராந்தகரே, தென் எல்லையின் காவல் நம் மலைப்பகுதி கூபகர்களிடம் இருக்



கிறது. அவர்கள் வில்லவனின் இனத்தவருக்கு ஜென்மப் பகைவர்கள். நீங்கள் அவர்களின் உதவியைப் பெறுவது வில்லவனையும், ராகுலனையும் அழிக்கத் துணை செய்யும்."

அதற்குமேல் தாமதிக்க விரும்பாத பராந்தகன், பகதத்த னுடன் அப்போதே கூபகர்களைச் சந்திக்க, மலை வழியில் பயணப்பட்டான்.

**த**மிழகத்தின் ஒப்பற்ற நகரங்களில் ஒன்றான காஞ்சி யில் ராஷ்டிரகூடர்களின் ஆதிக்கத்தையும், தமிழரிடம் அவர்கள் காட்டிய அலட்சியத்தையும் கண்டு சலித்தபடியே வானில் ஏறிய நிலவு, மகாராணி ரேவாதேவியின் மாளிகைச் சாளரத்தின் வழியே, மகாராணியுடன் ராஜமாதுலரும் நிற்பதைக் கண்டு மேகத்திரையை இழுத்து மூடிக்கொண்டது.

"சகோதரி, மன்னர் வந்தபின் குணவர்மரையோ, என்னையோ இதுவரை விசாரிக்கவில்லையே!" என்றார் ராஜமாதுலர்.

மகாராணியின் பதில் குழப்பத்துடன் வந்தது. "குணவர்மரை மன்னர் பூரணமாக நம்புகிறார். காஞ்சியில் வாணிபத்தைத் தொடர இனி மனமில்லையென்று கூறி விட்டு, குணவர்மர் சென்றுவிட்டார். எங்கு சென்றார் என்பதும் தெரியவில்லை. உன்னையும் பிறகு விசாரிப்ப தாகக் கூறினார்."

"பாண்டிய இளவரசியைக் கவர்ந்தது பற்றி...?"

"கடுமையாகக் கடிந்து கொண்டார். எல்லைப்புறத்துச் சத்திரத்தில் அவர்களைக் காத்து அனுப்பி வைத்ததாகவும் தெரிவித்தார். பிறகு எதுவும் கூறவில்லை, விசாரிக்கவு மில்லை."

"நம்மிடம் மன்னருக்கு அச்சம் என்று நினைக்கிறேன்" என்றார் ராஜமாதுலர், கோணல் நகைப்புடன்.

"முட்டாளே, அவர் ரத்தத்தில் அச்சம் என்பது கிடையாது. கயிற்றைத் தளரவிடுபவன் அடுத்து இன்னும் மேலே உயரப்பிடிப்பான். உன்னை விட்டு வைத்திருப்பது ஏனென்று புரியவில்லை. சரி, ராகுலன் என்னவானான்?"

"வெள்ளலூரில் இந்தளதேவனைத் தீர்த்துவிட்டான். ஆனால் அன்றே பாண்டியன் அங்கு வந்திருக்கிறான். காங்கேயனுடன் மேலைமங்கலத் தாக்குதலை நடத்தச் சென்றபோது..."

"சொல் மேலே."

"நம் திட்டங்களை முழுவதுமாகப் பாண்டியர் அறிந் திருக்கிறார்கள். ராகுலனுடன் சென்றவர்கள் மொத்தமாக ரணதீரனால் அழிக்கப்பட்டு விட்டார்கள். ராகுலன் மட்டும் தப்பித்து வில்லவனை அடைந்திருக்கிறான்."

மகாராணியின் முகம் சிவந்து விழிகள் அனலைக் கக்கின.

"இது எப்படி சாத்தியம்? ஓலையை உன்னிடம்தான் கொடுத்தேன். அவர்களுக்கு எப்படித் தெரிந்தது?"

"தெரியவில்லை சகோதரி. வில்லவனிடமிருந்து செய்தி வந்தபின்புதான் நானே அறிந்தேன். இறுதியாக எடுத்த முத்துக்களைக் கொண்டுசெல்லப் போவதாகவும், சிரமமாக இருப்பதாகவும் தெரிவித்திருக்கிறான்."

மகாராணியின் விழிகள் மின்னின. "ராஜமாதுலா, அந்த முத்துக்கள் நம்மை அடைய வேண்டும். ராகுலனுடன் சேர்ந்து அதைக் கொண்டு வந்துவிடு. நீ இன்றே புறப்பட்டு கொற்கைக்குச் செல்."– உத்தரவிட்டாள் மகாராணி.

ராஜமாதுலர் தமக்குள் "இந்தக் கொள்ளையுடன் நான் இங்கு திரும்பப் போவதில்லை சகோதரி. ராஷ்டிரகூடத்



திற்கே போய்விடுகிறேன். இதுதான் கடைசிக் கொள்ளை," என்றபடியே புறப்பட்டார்.

செம்பஞ்சு பூசப்பட்ட பதுமைகள் போல் நின்றிருந்த யவனக் காவல் மங்கையர், ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர்.

'**ப**டைத்திறல் பல்லவர்கோன் பணிந்த பரமேச்சுவர விண்ணகரத்தின்' ஆலயப் பிராகாரங்களும், மேற்கூரையும் வண்ணச் சித்திரங்களால் மின்னிக் கொண்டிருந்தன. ஓயாது சித்திரங்களைத் தீட்டிக் கொண்டிருந்த கலைஞர்களுக்கு, தானே வண்ணங்களைக் குழைத்துத் தருவதும், தூரிகை களைக் கூர் தீட்டித் தருவதுமாக நின்றிருந்தான் பல்லவ நந்திவர்மன். இரவு நன்றாக ஏறியும் அரண்மனைக்குத் திரும்ப மனமில்லை மன்னனுக்கு.

வெகு நேரமாக மேலே பார்த்தபடியிருந்தவன், சற்றுக் குனிந்து தலையை அப்படியும் இப்படியுமாகத் திருப்பிக் கொண்டான். அவன் பார்வையில் வாயிலினருகே காவல ரால் நிறுத்தப்பட்டிருந்த யவன மங்கை தென்பட்டாள்.

கரங்களிலிருந்த வண்ணக் கலவைகளை அருகிலிருந்த பணியாளன் ஒருவனிடம் அளித்தவன், வாயிலை நோக்கி நடந்தபடியே யவன மங்கையை அருகில் வருமாறு அழைத்தான்.

மன்னனை நெருங்கி வணங்கிய யவன மங்கை, "மன்னவா, இன்று ராஜமாதுலர் மகாராணியின் மாளிகைக்கு வந்திருந்தார்."

"சொல் மேலே."

"ராகுலனின் திட்டம் வெள்ளலூரைத் தவிர வேறு எங்கும் நிறைவேறவில்லையென்றும், உடன் சென்றவர்கள் அழிக்கப்பட்டதாகவும் கூறினார்."

மன்னன் முகத்தில் முறுவல் அரும்பியது. "ராகுலன் என்னவானான்?" என்றான்.

"ராகுலன் தப்பி வில்லவனை அடைந்திருக்கிறான். கொற்கை முத்துக்களை மீண்டும் கவர்ந்து, ராகுலனுடன் திரும்பி வர ராஜமாதுலர் இன்றே புறப்படுகிறார்."

"சரி, இனி நான் கவனித்துக் கொள்கிறேன். நீ உன் பணியைத் தொடர்ந்து செய்."

"மன்னவா!"– அந்த யவனமங்கை தன் இடையிலிருந்து ஓலைக் குழலொன்றை எடுத்து நீட்டினாள். "இது சற்று முன்புதான் ராஷ்டிரகூடத்திலிருந்து வந்தது. நீங்கள் எதிர் பார்த்த வேளை நெருங்கிவிட்டதென்று எண்ணுகிறேன் மன்னா!" என்றாள் மலர்ந்த விழிகளுடன்.

ஓலைக் குழலைப் பெற்றுக் கொண்ட மன்னனின் விழிகள் இன்னும் ஒளி வீசின. "பெண்ணே, உனக்குத் தகுந்த பரிசை பிறகு அளிக்கிறேன். இன்னும் ஓர் ஓலையும் மகாராணிக்கு வரும். எந்த வேளையாயிருந்தாலும் உடனே எனக்குத் தெரிவி. நீ போகலாம்," என்ற நந்திவர்மனின் முகம் மலர்ந்து கிடந்தது.

கரங்களில் ஓலைக் குழலுடன் சற்று நேரம் அங்கேயே நின்ற நந்திவர்மனின் மந்தகாச முகத்தில் சிந்தனையும் கலந்து தெரிந்தது. பின்பு அருகிலிருந்த பந்தத்தின் ஒளியில் குழலைப் பிரித்து, ஓலையைப் படிக்கத் தொடங்கியவனின் முறுவல் இன்னும் விரிந்தது. முகத்தில் பெரும் திருப்தியும் படர்ந்தது.

அவன் பெருவிழிகள் உயர்ந்து முகுந்த விமானத்தை ஏறிட்டன.



"வைகுந்தா, உன் திருவுள்ளம் இப்போதுதான் இரங்கியதா?" என்று சற்று உரக்கவே கேட்கவும் செய்தான் நந்திவர்மன்.

முகுந்த விமானமோ, அந்த வைகுந்தனோ, நந்தி வர்மனின் ஏக்கம் நிறைந்த அந்தக் கேள்விக்கு உடனடியாக பதிலேதும் தரவில்லை.

ஆனால் நந்திவர்மனுக்குப் பின்னாலிருந்து பதில் வந்தது.

"நந்திவர்மா, உனக்கு இரங்காவிட்டால், அந்த வைகுந்தன் வேறு யாருக்கு இரங்கக் கூடும்?" என்று.

சட்டென்று திரும்பிய நந்திவர்மனின் எதிரே நல்ல உயரத்துடனும், திடமான உடலமைப்புடனும் ராஜரீக உடை அணிந்து கம்பீரமாக நின்றார் ஒருவர். முதுமையின் ரேகைகள் படிந்த அவர் முகத்தில் பயணக் களைப்புடன் நந்திவர்மன் மீது கொண்டிருந்த அன்பும், அபிமானமும் தெளிவாகத் தெரிந்தன.

அடுத்து அந்த மனிதரிடமிருந்து உதிர்ந்த வார்த்தைகள், நந்திவர்மன் முகத்தில் ஆறுதலையும், பெரும் நம்பிக்கை யையும் படரவிட்டன.

காஞ்சி மண்டலம் மட்டுமல்லாது, தமிழகமே இனி ராஷ்டிரகூடரிடமிருந்து விடுபட்டுவிடும் என்பதும், அதற்கான திட்டத்தைத் தான் நிறைவேற்றும் காலம் நெருங்கிவிட்டதென்பதும், தமிழகத்தின் மன்னர்களுள் தானும் ஒருவனாக மக்கள் ஏற்கும் நாள் அதிக தூரத்தில் இல்லை என்பதும் புரிந்தது நந்திவர்மனுக்கு.



19

## நிகழ்ந்தது விபரீதம்

"உனக்கு இரங்காவிடில் அந்த வைகுந்தன் வேறு யாருக்கு இரங்கக் கூடும்?" என்ற கேள்வியுடன் எதிரே நின்ற அந்த மனிதரைக் கண்டதும் நந்திவர்மனின் முகம் மலர்ந்தது.

"வாருங்கள் ராஜாதித்தரே, எப்பொழுது வந்தீர்கள்? இப்படி அமருங்கள்" என்ற நந்திவர்மன், அருகிலிருந்த கருங்கல் மேடையில் அவருடன் அமர்ந்தான்.

"இதோ வந்து கொண்டேயிருக்கிறேன் நந்திவர்மா. உன்னைக் கண்டபின்பே இல்லத்துக்குச் செல்ல வேண்டு மென்று வந்தேன்" என்றார் அந்த மனிதர்.

நந்திவர்மன் முகத்தில் முறுவல் படர்ந்தது. "அத்தனை முக்கியச் சேதியோடு வந்திருக்கிறீர்களா?"

"நீ அறியாத செய்தியேது நந்திவர்மா? இருந்தாலும் நேரில் கண்டுவந்ததையும் கூறுகிறேன். ராஷ்டிரகூடத்தின்



நிலைமை நீ யூகித்தபடியேதான் இருக்கிறது. மகாராஜா கோவிந்தன் என்னைப் பார்க்கவும் மறுத்துவிட்டார்."

"காரணம்?"

"நான் உனக்குச் சிறிய தந்தையாக இருப்பதுதான். பல்லவத் தூதுவர்களையும், பிரதானிகளையும் அரண் மனைக்குள் அனுமதிப்பதேயில்லை. இளவரசர் துருவன் நடத்தும் புரட்சிக்கு நாம் மறைமுகமாக ஆதரவு தருகிறோம் என்பது அவரது சந்தேகம்."

"...பிறகு?"

"துருவன் இன்னும் சில தினங்களில் இங்கு வருவதாக இருக்கிறான், தங்களிடம் நேரிடையாக உதவி கேட்க. ஆனால் மகாராணி ரேவாதேவி இதற்கு..."

நந்திவர்மன் பலமாக நகைத்தான். "மகாராணி துருவனை என்ன செய்வாள் என்பதை இப்போது யூகிக்கும் திறன் எனக்கில்லை ராஜாதித்தரே" என்றான் நகைத்தபடி.

ராஜாதித்தர் சற்று நேரம்கழித்துக் கேட்டார்: "நந்தி வர்மா, அந்தச் சோழநாட்டு வாலிபன் பராந்தகனைப்பற்றி..."

நந்திவர்மன் முகத்தில் சற்று வருத்தம் தெரிந்தது. "நானே அவனைச் சந்தித்தேன் ராஜாதித்தரே. அவன் தான் யாரென்பதை உணர்ந்திருப்பதாகத் தெரியவில்லை. அந்த விருப்பமும் அவனுக்கில்லை. அவன் விரும்புவது சோழ நாட்டின் விடுதலை மட்டுமே."

"நானே சென்று அவன் யாரென்பதைக் கூறி அழைத்து வருகிறேன். அவனுக்கு உரிய வாழ்வை நாம் அளிப்பதுதான் முறை நந்திவர்மா. உன் மகன் நந்திவர்மனைவிட, அவனுக்கு இந்தப் பல்லவ நாட்டில் அதிக உரிமை இருக்கிறது. தமிழகத்து மக்களும், மன்னர்களும் அவனைத்தான் ஏற்றுக் கொள்வார்கள்."

"உண்மைதான் ராஜாதித்தரே. அவன் ஏற்பதானால் இந்த அரியணையை அவனிடம் அளித்துவிட்டு, நான் வைகுந்தன் சேவையில் இறங்கி விடுவேன் ஆனந்தமாக."

"எதற்கும் நான் அவனைச் சந்தித்துப் பேசிப் பார்க்கிறேன் நந்திவர்மா."

"முயன்று பாருங்கள்" என்றான் நந்திவர்மன் மாறாத முறுவலுடன்.

எங்கோ மலைநாட்டை நோக்கிச் சென்று கொண்டிருந்த பராந்தகனின் வாழ்வை நல்ல ஸ்திதிக்குக் கொண்டுவர நந்திவர்மனும், ராஜாதித்தரும், ஏன் பாண்டியர் அரண்மனை யிலும்கூட ஏற்பாடுகள் பல நடந்துகொண்டுதானிருந்தன.

ஆனால் அந்த வைகுந்தன் திருவுள்ளம் வேறாக இருந்தது.

**'கொல்சி'** என்று வெளிநாட்டவராலும், கொற்கை என்று தமிழராலும் அழைக்கப்பட்ட அந்தத் துறைமுகம், பார்வைக்கு என்னவோ வழக்கமாக இயங்குவதைப் போலத் தான் இயங்கிக் கொண்டிருந்தது. ஆனால் காவலுக்கு நின்ற பாண்டிய வீரர்களின் விழிகள் அவ்வப்போது சற்றுத் தள்ளி யிருந்த அந்த மாளிகையை நோக்கிச் சென்று மீண்டு கொண் டிருந்தன. அன்று முத்துக் களவு நிகழப் போவதாகக் கிடைத் திருந்த செய்தி, வீரர் அனைவரையும் மிகுந்த எச்சரிக்கை யுடன் நடமாட வைத்திருந்தது.

பலத்த காவல்களைக் கடந்து, மாளிகையின் வாயிலையும், அடுத்து நீண்ட தாழ்வரையையும், உள்ளே விரிந்த கூடத்தையும் கடந்து, பெரும் இருப்புக் கதவுகளைத் திறந்து கொண்டிருந்தான் கொற்கையின் கோட்டைத் தலைவன். பின்னால் விஷ்ணுசித்தரும் இளவரசி குமுத வல்லியும் நின்று கொண்டிருந்தனர். கதவைத் திறந்து உள்ளே நுழைந்ததும் விரிந்தது வட்ட வடிவிலான ஒரு



பெரும் அறை. சிற்பங்களும் சித்திரங்களும் நிறைந்து, தரை யெங்கும் முத்துப் பேழைகள் வரிசையாக அடுக்கப் பட்டிருந்தன.

"இந்த அறையின் ஒரே திறவுகோல் என்னிடம்தான் இருக்கிறது இளவரசி. இங்கு வேறு கதவுகளோ வழியோ இல்லை. களவு எப்படி நடக்கிறதென்பதுதான் புரிய வில்லை."— கோட்டைத் தலைவன் குரலில் குழப்பம் தொனித்தது.

விஷ்ணுசித்தரின் கூர்விழிகள் அந்த அறையின் கூரையிலிருந்த சித்திரங்களையும், கூரையையும் தாங்கி நின்ற தூண்களின் சிற்பங்களையும் ஆராய்ந்து, இறுதியாக அறையின் நடுவில் தரையில் வரையப்பட்டிருந்த தாமரை வடிவச் சித்திரத்தின் மீது படிந்தன. கரத்திலிருந்த நந்தி வர்மனின் ஓலையை ஒருமுறை வாசித்தவர், "நந்திவர்மன் கூறியபடிதான் இருக்கிறது. சிற்ப சாஸ்திரத்தை அவனை விட அறிந்தவர் வேறு யார்?" என்று முணுமுணுத்துக் கொண்டார்.

கோட்டைத் தலைவனை நோக்கியவரின் கேள்வி நிதானமாக வந்தது: "தலைவரே, இந்த மாளிகைக்கு வடக்கே என்ன இருக்கிறது?"

அவன் முகத்தில் இன்னும் குழப்பம் தெரிந்தது. "வடக்கில் கால் காத தூரம் வரை செடி கொடிகள்தான். அடுத்து மதிற்சுவருக்குப் பின்னால் வணிகர் வீதி இருக்கிறது."

"சரி, இரண்டாம் ஜாமம் தொடங்கிவிட்டது. இந்த அறையில் ஒரு தீபத்தைத் தவிர மற்றவற்றை அணைத்துவிடு. வணிகர் வீதியின் இரு பக்கங்களிலும் நம் வீரர்களை நிறுத்திக் காத்திரு. முகுந்தன் அங்குதானிருக்கிறான்."

"தாங்கள்... இளவரசி...?"

"இந்த அறையில்தான் காத்திருக்கப் போகிறோம், இன்று நிகழப் போகும் களவைக் காண" என்றார் விஷ்ணுசித்தர்.

ஒற்றைத் தீபம் மட்டும் மங்கலான ஒளியை வீசிக் கொண்டிருக்க, எந்தப் பாதாளத்தில் அறைகள் கட்டப் பட்டாலும் வந்து சேர்ந்துவிடும் சுவர்க்கோழிகளின் ரீங்காரம் மட்டும் அந்த அறையில் ஒலித்துக் கொண்டிருந்தது. நேரம் நழுவிக் கொண்டிருந்தது.

"இன்னும் எத்தனை நேரம் காத்திருப்பது விஷ்ணு சித்தரே?" இளவரசியின் பொறுமையும் நழுவத் தொடங்கியது அவளது கேள்வியில் புலப்பட்டது.

"சற்றுப் பொறு மகளே, அவர்கள் வந்து கொண்டிருக் கிறார்கள்" என்றார் விஷ்ணுசித்தர்.

மெல்லிய குளிர்காற்று அறைக்குள் ஊடுருவியது. ஏதோ சக்கரங்கள் சுழல்வதைப் போன்ற கரகரவென்ற ஒலி எழுந்தது. அறையின் நடுவில் தரையில் வரையப்பட்டிருந்த தாமரை வடிவச் சித்திரம், மெல்லச் சுழன்று உயரத் தொடங்கியது. உயர்ந்த பின்பே அது வட்டவடிவ இருப்புச் சலாகை என்பது புரிந்தது. அதை உயர்த்திய தண்டுப்பகுதி ஓர் ஆள் நுழையக்கூடிய உயரம் வந்ததும் நின்று, படிகளில் யாரோ ஏறிவரும் ஒலி கேட்டது. தரையிலிருந்து ராஜ மாதுலரின் தலை முளைத்து, உயர்ந்து, மேலே ஏறி வந்தார். தொடர்ந்து மலைநாட்டு வீரர்களாகத் தெரிந்தவர்கள் சிலரும் வந்தனர். வந்தவர்கள் பேழைகளை நெருங்கி முத்திரைகளை நீக்க முயற்சிக்க, ராஜமாதுலர் அவர்களைத் தேக்கினார்.

"வீரர்களே, இனி முத்திரைகளை நீக்கி முத்துக்களை எடுக்க வேண்டாம். பேழைகளை அப்படியே கீழே இறக்கி விடுங்கள்!"



வீரர்கள் பேழைகளை இறக்க, முக்காலுக்கும் மேல் பேழைகள் இறங்கியதும், ராஜமாதுலர் வெகு தாராள மனத்துடன் இரண்டொரு பேழைகளை விட்டுவிட்டு, படிகளில் இறங்கினார். தாமரை வடிவச் சலாகை சுழன்று, மீண்டும் தரையோடு பொருந்தியது.

இளவரசி வெடித்தாள்: "விஷ்ணுசித்தரே... நம் வீரர்களை அழைத்து..."

"பொறு மகளே, அவர்கள் அத்தனை எளிதில் இங்கிருந்து சென்றுவிட முடியாது. என்னுடன் வா," என்றவர் தூணொன்றை நெருங்கி, யாளி வடிவச் சிற்ப மொன்றை வலதுபுறமாகத் திருப்பினார். தாமரை வடிவச் சலாகை மறுபடி சுழன்று உயர்ந்தது.

கீழே தெரிந்த படிகளில் இளவரசி பின்தொடர இறங்க ஆரம்பித்தார் விஷ்ணுசித்தர்.

சுழன்று சுழன்று இறங்கிய படிகள் சமதரையை அடைந்தபோது, எதிரே நீண்ட தாழ்வரையும், சுரங்க வழிகளாகத் தெரிந்த இரு பாதைகளும் தென்பட்டன. பாதையின் தொடக்கத்தில் பேழைகள் அடுக்கப்பட்டிருக்க, ராஜமாதுலர் அவர்களிடம் ஏதோ கூறிக் கொண்டிருந்தார்.

விஷ்ணுசித்தர் சுரங்கப்பாதை நெடுக வரிசையாகத் தெரிந்த தூண்களை உற்று நோக்கிவிட்டு, திரும்பி தனக்குப் பின்னால் எதையோ தேடினார். அவர் தலைக்குச் சற்று மேலே இரு இருப்புச் சங்கிலிகள் பெரும் வளையங்களுடன் புலப்பட்டன. அதேசமயத்தில் பின்னால் இருளிலிருந்து "இளவரசி..." என்ற குரல் ஒலித்தது.

அந்தக் குரலைக் கேட்ட இளவரசி திகைத்தாள்.

"முகுந்தா, அங்கேயே இரு" என்றார் விஷ்ணுசித்தர்.

"விஷ்ணு சித்தரே, இவர்களை இங்கேயே அழித்து விடலாம். விட்டு வைக்க வேண்டாம்" என்றான் முகுந்தன்.

"வேண்டாம் முகுந்தா. நான் கூறும்போது உனக்குப் பின்புறம் இருக்கும் கதவைத் திறந்து நம் வீரர்களை வரவிடு. போதும்" என்றவர், முன்னால் நடந்து பேழைகளினருகே சென்று, "ராஜமாதுலா!" என்று அழைத்தார்.

சட்டென்று திரும்பிய ராஜமாதுலர் முகத்தில் திகைப்பு தெரிந்தது. அடுத்து குரூர நகைப்பொன்றும் உதிர்ந்தது. பின்னால் இளவரசி நிற்பதையும் கவனித்தவர், "குணவர்மா, காஞ்சியின் ரத்தின வணிகனாக இருந்தவன் துறவியாகி விட்டாயா? காஞ்சியிலிருந்து இவர்கள் தப்பவும் நீதான் உதவியிருக்க வேண்டும்... இளவரசி, இந்த முறையும், என்னைக் கையும் மெய்யுமாகப் பிடித்திருக்கிறாய். ஆனால் இம்முறை உன்னையும், இந்த ரத்தின வணிகனையும் சிறையெடுக்கப் போவதில்லை. இங்கேயே அழித்துவிட்டே செல்கிறேன்" என்றார் குரோதம் நிறைந்த குரலில்.

"ராஜமாதுலா."— விஷ்ணுசித்தரின் குரல் நிதானமாக ஒலித்தது.

"என்ன, கொன்றுவிட வேண்டாமென்கிறாயா? வசமாகப் பிடித்திருக்கிறேன் இருவரையும். இனி இந்தச் சந்தர்ப்பம் கிடைப்பது அரிது. வீரர்களே..."

விஷ்ணுசித்தரின் கரம் வீரர்களைத் தேக்கியது. "ராஜமாதுலா, யார் யாரைப் பிடித்திருக்கிறார்கள் என்பதை அறியாமல் பேசுகிறாய். பேழைகளை ஒப்படைத்து விட்டு சரணடைந்துவிடு. பாண்டிய மன்னரிடம் நானே பேசி உன்னை விடுவித்து ராஷ்டிரகூடத்துக்கு அனுப்பி வைக்கிறேன். ராகுலனும் வில்லவனும் எங்கே? சொல்."

ராஜமாதுலரின் எகத்தாள நகைப்பு சுரங்கத்தினுள் எதிரொலித்தது. "குணவர்மா, பாண்டிய மன்னனிடம் எனக்காக நீ பரிந்து பேசப் போகிறாயா? அந்த வரகுணனைப் போல் முழுமுடன் வேறு யாரும் இருக்க முடியாது.



இல்லையென்றால் இந்த அபாயத்தில் இளவரசியையும், எதற்கும் உதவாத உன்னையும் அனுப்பி வைப்பானா? உங்கள் இருவரையும் இங்கேயே வெட்டியெறிந்து விட்டுச் செல்கிறேன். உங்கள் உடல்களைக்கூட எளிதில் கண்டு பிடிக்க முடியாதபடி சுரங்க வழியையும் அடைத்துவிடுகிறேன்," என்றவர் திரும்பி வீரர்களை நோக்கி, "வீரர்களே, இவர்களை வெட்டியெறிந்துவிட்டுப் பேழைகளை எடுத்து வாருங்கள்" என்று இரைந்தார்.

ராஜமாதுலர் வார்த்தைகளை முடிக்குமுன், இளவரசி நின்ற இடத்தின் பின்னால் இருளடித்த பகுதியிலிருந்து "ராஜ மாதுலா...!" என்று முகுந்தனின் குரல் ஆவேசத்துடன் பலமாக ஒலித்தது.

ஒருகணமே மீண்டும் திகைத்த ராஜமாதுலர், "ஆகா, அந்த ஒற்றனும் இங்குதான் இருக்கிறானா? வீரர்களே, அந்த மூலையில் நிற்பவனை முதலில் ஈட்டிகளை எறிந்து கொன்று விடுங்கள். வெளியிலிருக்கும் நமது வீரர்களையும் வரச் சொல்லுங்கள். இந்த இருவரையும் கொன்று போடுங்கள்" என்று உரக்கக் கூவினார்.

அடுத்த கணம் இருளடித்த மூலையிலிருந்து எழுந்து பாய்ந்த முகுந்தன், மேலேயிருந்து தொங்கிய சங்கிலிகளில் முன்னதாக இருந்ததை பலமாகப் பிடித்து இழுத்தான். அந்தச் சுரங்க வழியே இடிந்து விழுவதைப் போன்று கரகரவென்ற ஒலி பலமாக ஒலிக்கத் தொடங்கியது.

"முகுந்தா... வேண்டாம் முகுந்தா..."— அலறினார் விஷ்ணுசித்தர் பலமாக.

ஆனால் அதற்குள் காரியம் விஞ்சிவிட்டது.

அடுத்த கணம் இளவரசியின் கண்ணெதிரே நிகழ்ந்தது அந்த விபரீதம்!



20

## அர்ச்சுன சந்நியாசி

'ஆத்திரம் அறிவுக்குச் சத்ரு' என்று பழமொழி ஒன்றிருக்கிறது. ஆத்திரம் அதிகமாகும்போது மனிதன் பேசும் வார்த்தைகளையோ, செயல்களையோ உணர்வதில்லை. பின்னர் ஏற்படும் விளைவுகளை எதிர்கொள்ளும்போது, தவறு புரிந்தாலும் அதைப் பெரும்பாலோர் ஏற்றுக் கொள்வதில்லை. அதேபோலத்தான், அபிமானம் வைத்திருப்பவர் பழிக்கப்படும்போதோ, தாக்கப்படும்போதோ, உணர்ச்சி வசப்பட்டுவிடும் மனிதனுக்கும், ஆத்திரக் காரனுக்கும் வேறுபாடே இல்லாமற் போய்விடுகிறது.

பாண்டிய நாட்டுக்காகவும், மன்னனுக்காகவும் உயிரையும் தரச் சித்தமாக இருக்கும் முகுந்தன், மன்னனையும் பழித்து, இளவரசியையும் கொன்றுவிட ராஜமாதுலர் உத்தரவிட்டதும், உணர்ச்சி வசப்பட்டு முன்னால் பாய்ந்து மேலேயிருந்து தொங்கிய இருப்புச்



சங்கிலிகளில் ஒன்றைப் பிடித்து பலமாக இழுத்து விட்டான்.

"வேண்டாம் முகுந்தா" என்ற விஷ்ணுசித்தரின் அலறல் முடியுமுன்பு, ஏதோ அந்தச் சுரங்கப்பாதையே இடிந்து விழுவது போல ஒலி எழுந்தது. சுரங்கப்பாதையின் இரு வாயில்களையும் பெரும் பாறைகள் உருண்டு வந்து அடைத்தன. குறுக்கே நின்ற தூண்கள் சுழன்று நகர்ந்து, கருங்கற் சுவரோடு பதிந்தன. பக்கச் சுவர்கள் விலகி சதுரச் சாளரங்கள் சுவர்களில் வரிசையாகத் தோன்றி, உள்ளிருந்து அம்புகளையும் ஈட்டிகளையும் வீசும் யந்திரங்கள் சுழன்றபடியே வெளிவந்தன. நடுவில் நின்றிருந்த ராஜமாதுலரையும், மலைநாட்டு வீரர்களையும், ராஷ்டிரகூடர்களையும் நோக்கி, ஏதோ மழை பொழிவது போல் அம்புகளும் ஈட்டிகளும் தொடர்ந்து பொழிந்தன. ராஜமாதுலரும் வீரர்களும் உடல்கள் சல்லடைக் கண் களாகத் துளைக்கப்பட்டு மரணக் கூச்சல்களுடன் சரிந்தார்கள்.

ஒரு நாழிகை நேரம் கழித்து தூண்கள் மீண்டும் பழைய இடங்களை அடைந்து நின்றபோது, இளவரசியின் கண்ணெதிரே விரிந்த காட்சி மிகக் குரூரமாயிருந்தது.

"இளவரசி, விஷ்ணுசித்தரே, மன்னிக்க வேண்டும். மன்னரைப் பழித்து, இளவரசியாரைக் கொல்ல உத்தர விட்டதால் உணர்ச்சி வசப்பட்டு விட்டேன்" என்றான் முகுந்தன் கரகரத்த குரலில்.

விஷ்ணுசித்தரின் முகத்தில் வருத்தம் தெரிந்தது. "அவசரப்பட்டு விட்டாய் முகுந்தா... சரி, கோட்டைத் தலைவனை அழைத்து உடல்களை அப்புறப்படுத்தச் சொல். நீயே சென்று மன்னருக்கு நடந்தவற்றைத் தெரிவித்து

விடு" என்றவர், இளவரசியை அழைத்துக் கொண்டு, பின்பக்கம் தெரிந்த கதவொன்றின் வழியே வெளியே வந்தார்.

அதுவரை மௌனமாக இருந்த இளவரசி கேட்டாள், "விஷ்ணு சித்தரே, அந்த ராகுலனும், வில்லவனும் எங்கிருக்கிறார்கள்?"

"அவர்கள் பாண்டியர் எல்லையை நெருங்கி விட்டார்கள் மகளே. அவர்களை எதிர்பார்த்துத்தான் பராந்தகனும் அங்கே சென்றிருக்கிறான்" என்றார் விஷ்ணு சித்தர்.

**வீ**சிக் கொண்டிருந்த மலையமாருதம் சற்று மந்தமாகவே இருந்தபோதிலும், காற்றில் குளிரை நிரப்பி ஊசிகளைக் கொண்டு குத்துவது போன்ற உணர்வை ஏற்படுத்தியது.

பராந்தகனின் விழிகள் அந்த மாலை நேரத்தில், மலைப் பகுதியில் வனாந்தரத்தின் அழகைப் பருகிக்கொண்டிருந்தன. தாயின் மடிமீது தவழ்ந்து ஏறிச் சென்று விளையாடும் குழந்தைகள் போல, மேகங்கள் மலை மீதும், முகடுகளிலும் தவழ்ந்து கொண்டிருந்தன. காட்டு மைனாக்கள், கிளிகள், இன்னும் பெயர் தெரியாத பல பட்சிகள் இவற்றின் கீதங்கள் ஓங்கி ஒலித்தன. கிறீச் கிறீச்சென்று மரங்களில் தாவிய குரங்குகளைக் கண்டும், புரவிகளில் மனிதர்கள் வருவதைக் கண்டும், புல்வெளிகளில் மேய்ந்துகொண்டிருந்த காட்டு முயல்களும், மான்களும் தலையை உயர்த்தி, திருப்பி அபிநயம் பிடித்துவிட்டு, ஒரே தாவலில் ஓடி மறைந்தன. தூரத்தில் எங்கோ பெரும் உறுமல் ஒன்றும் ஒலித்து அடங்கியது. எங்கோ அருவியொன்று பாயும் ஒலி தொடர்ந்து கேட்டுக்கொண்டிருந்தது.



சற்றுத் தொலைவில் தென்பட்ட பாறைகளின் மேல் தலைகள் தோன்றி மறைந்ததைக் கவனித்த பராந்தகன், புரவியை இழுத்து நிறுத்தினான்.

"நாம் கூபகர் வாழும் பகுதியை அடைந்துவிட்டோம் பராந்தகா" என்றான் பகதத்தன்.

பாறைகளை நெருங்குமுன்பாக கன்னங்கரேலென்ற நிறத்துடன், வலுவான உடலமைப்புடன், அளவில் பெரிதான ஈட்டிகளைத் தாங்கி கூபகர் இன ஆண்கள் வழி மறித்து நின்றனர். கழுத்தில் ஆடிய மணிகளும், தலையில் செருகப்பட்டிருந்த இறகுகளும், செவிகளில் தொங்கிய பெரும் வளையங்களும், அவர்களுக்கு விசித்திரமான தோற்றத்தை அளித்தன. அவர்கள் கரங்களிலிருந்த ஆயுதங்களும் விசித்திரமாயிருந்தன.

பராந்தகன் புரவியிலிருந்து கீழே இறங்கினான். அவனுக்கு முன்பாக கூபகர்களை நெருங்கிய பகதத்தன், நாட்டிய முத்திரை போல அபிநயம் செய்துவிட்டு ஏதோ கூறினான். கூபகர்கள் பராந்தகனை அதிசயத்துடன் பார்த்தனர். இருவர் திரும்பி பாறைகளின் பின்னே தென்பட்ட வழியில் வேகமாக ஓடினர். சற்று நேரத்தில் ஆண்களும், பெண்களும், குழந்தைகளுமாக கூபகர் மக்கள் ஓடி வந்தார்கள். அவர்களின் கூச்சல் மலைப் பகுதியில் பெரிதாக எதிரொலித்தது.

வந்து நின்ற கூட்டத்தை விலக்கிக் கொண்டு திடமான முதியவர் ஒருவர் வந்தார். பராந்தகனை ஏற இறங்கப் பார்த்தவரது முகத்தில் திருப்தி தெரிந்தது. கரங்களைக் குவித்து வணங்கியவர், வலதுகரத்தை முன்னால் நீட்டினார்.

"பராந்தகா, மன்னர் அளித்த முத்திரை மோதிரத்தை இவர்களிடம் காட்டு. வெறும் வார்த்தைகளை நம்புபவர்

களல்ல இவர்கள். எளிதில் ஏமாறக் கூடியவர்களுமல்ல" என்றான் பகதத்தன்.

முத்திரை மோதிரத்தை எடுத்து நீட்டினான் பராந்தகன். மாலைப் பொழுது மங்கி இருள் சூழத் தொடங்கிய அந்தச் சமயத்திலும், வர்ண ஜாலங்களை அள்ளி வீசியது அந்த முத்திரை மோதிரம். ஒருமுறை அதை உற்றுப் பார்த்த முதியவர், கரங்களை முன்னால் நீட்டியபடி மண்டியிட்டார். தொடர்ந்து பின்னால் நின்ற கூபகர் கூட்டமே மண்டியிட்டு, ஒரே குரலில் ஏதோ சத்தமிட்டது.

பகதத்தன், "இவர்கள் இனி உன் அடிமைகள். நீ உத்தரவிட்டால்தான் எழுந்திருப்பார்கள்" என்றான் நகைத்தபடி.

அந்த முதியவரின் வலுவான தோள்களைப் பற்றி எழுப்பிய பராந்தகன், "முதியவரே, எழுந்திருங்கள். வயதில் மூத்தவர் தாங்கள். எனக்கு மண்டியிட வேண்டாம்" என்றான்.

அடுத்து ஒலித்த முதியவரின் குரலில் கூபகர் மொழி ஒலிக்கவில்லை. சுத்தமான தமிழ் ஒலித்தது. "இளவரசே, உங்கள் வருகை மிக்க மகிழ்ச்சியளிக்கிறது. எமது குடிசை களுக்கு வாருங்கள்" என்றார்.

"முதியவரே, நான் இளவரசனல்ல. மிகச் சாதாரண ஒரு வீரன்தான். என்னைப் பெயரிட்டே அழைக்கலாம். என் பெயர் பராந்தகன். இவன் என் தோழன் பகதத்தன்."

"பராந்தகரே, பாண்டிய மன்னர் எமக்குக் கடவுள். அவரது முத்திரை மோதிரம் கொடுத்தனுப்பப்படுபவர் எமக்குத் தலைவர். வாருங்கள்" என்றவர் திரும்பி நடந்தார். கூபக மக்கள் அரை ஓட்டமாக குடிசைகளை நோக்கி ஓடினர்.



சமவெளியில் தெரிந்த குடிசைகள் வழக்கமானவையாக இல்லாமல் உயரமாகவும், அளவில் பெரியனவாகவும் தெரிந்தன. மான் குட்டிகளும், ஆடுகளும், கோழிகளும் வாசல்களில் உலவ, ஓரங்களில் ஓநாய்களைப் போன்ற வேட்டை நாய்கள் புதிதாக வருபவர்களை உற்றுப் பார்த்தபடி நின்றன. வெறும் மணிகளையும் சிறு துணி களையும் அணிந்த சிறுவர் சிறுமியர், பாதி மறைந்து நின்று எட்டிப் பார்த்தனர்.

உயரமான ஒரு குடிசையின் உச்சியில் பாண்டியர் கொடி மலைக் காற்றில் படபடத்தது. வாயிலில் கனத்த கூர் வேல்களுடன், திடகாத்திரமாக நின்ற நால்வர் தலை வணங்க உள்ளே நுழைந்த பராந்தகனும் பகதத்தனும், மூங்கிலினாலான பெரும் இருக்கைகளையும், வண்ணச் சீலைகளையும், மரச் சிற்பங்களையும் கண்டு பிரமித்தனர்.

"பராந்தகரே, நீண்ட பயணத்தில் களைத்திருப்பீர்கள். உணவு தயாராகிக் கொண்டிருக்கிறது. அருந்திவிட்டு ஓய்வெடுங்கள். காலைப் பொழுதில் நீங்கள் இடும் பணி எதுவானாலும் நிறைவேற்றித் தருகிறோம்" என்றார் முதியவர்.

அடுத்து வெளியே நடந்த முதியவர் கூபக வீரர்களிடம் சரமாரியாக ஏதோ உத்தரவுகள் இடுவதைக் கவனித்த பராந்தகன் கேட்டான்: "பகதத்தா, அவர் என்ன சொல்லிக் கொண்டிருக்கிறார்?"

பகதத்தன் முகத்தில் வியப்பு தெரிந்தது. "பராந்தகா, நாம் வந்த வழியில் பின்தொடர்ந்து எவரேனும் வந்திருக் கிறார்களா என்று கண்டு வரச் சொல்கிறார். காவலை பலப்படுத்தவும் உத்தரவிடுகிறார்."

முதியவரின் எச்சரிக்கை உணர்வு இருவரையுமே வியக்க வைத்தது.

அடுத்த ஒரு நாழிகையில் வரகரிசியில் சமைத்த உணவும், ஆசினிப் பலாவும், மலைத்தேனும் வந்தன. ரசித்து ருசித்து, காரமும் மணமுமான உணவை அருந்தத் தொடங்கினான் பகதத்தன்.

"அதிருக்கட்டும் பகதத்தா, முதியவர் என்னை இளவரசர் என்று அழைத்தாரே. நீ அவரிடம் என்ன கூறினாய்?" என்றான் பராந்தகன்.

பகதத்தனின் முகத்தில் பலாச்சுளையும், தேனும், கூடவே விஷமமும் சேர்ந்து வழிந்தன.

"உன்னை மன்னருக்கு நெருங்கிய உறவினன் என்றேன்."

"உறவினனா? நானா? பாண்டிய மன்னருக்கா?"

"ஆம்."

"எப்படி?"

"இளவரசியை மணப்பவன் மன்னருக்கு உறவுதானே? அதைத்தான் சொன்னேன்."

"இதென்ன அபாண்டம்? என்ன உளறுகிறாய்?"—பராந்தகன் பதறினான்.

"அடேய், பதறாதே. நான் உளறவில்லை. உண்மையைத் தான் கூறினேன். உன்னையே உனக்குப் புரியவில்லை என்றால் அது என் குற்றமல்ல. முதலில் உணவருந்து."—பகதத்தன் மிரட்டினான்.

உணவை முடித்துக் கொண்டு அமர்ந்த பராந்தகனை நோக்கிய பகதத்தன், "இப்பொழுது சொல், இதுவரையில் உன் சித்தத்தில் சோழ நாட்டின் விடுதலையும், இப்போது மேற்கொண்டுள்ள பணியும்தான் நிறைந்திருக்கின்றன அல்லவா?" என்றான்.



"ஆமாம்."

"சரி, இந்தப் பணிகள் முடிந்த பின்பு?"

"திரும்ப வண்டாழஞ்சேரிக்குச் செல்ல வேண்டியது தான். வயல்வெளியும், அரிசிலாறும், உழவுமாடுகளும் இருக்கவே இருக்கின்றன."

பகதத்தன் நகைத்தான்.

"ஏன் நகைக்கிறாய்?"

"முட்டாள், படைத்தலைவரைக் காத்து, இளவரசியை மீட்டு மேலைமங்கலத்திலும் ராகுலனின் திட்டத்தை முறியடித்து, இப்போது தென் எல்லைப்புறத்து வில்லவனையும் ராகுலனையும் அழிக்க வந்திருக்கிறாய். இத்தகைய ஒரு வீரனை, பாண்டிய மன்னர் எளிதில் விட்டுச் சென்றுவிட அனுமதிப்பாரா? பல்லவ மன்னருடனான உன் உறவு என்ன, அந்த வாள், கர்ணனுக்குக் கிடைத்த நாகாஸ்திரம் போல உன்னிடம் வந்த கதை என்ன, என்பதெல்லாம் இன்னும் புரியவில்லை. அத்தனை எளிதில் மீண்டும் வண்டாழஞ்சேரிக்குச் சென்றுவிட இயலும் என்று எண்ணுகிறாயா?"

பராந்தகன் மௌனம் சாதித்தான். இதுவரை அவனது செயல்களின் பின்விளைவுகளை அவன் சிந்தித்துப் பார்க்கவேயில்லையென்பது தெளிவாகத் தெரிந்தது.

"இதைத் தவிர இன்னொரு முக்கியமான உண்மையும் இருக்கிறது பராந்தகா."

"என்ன உண்மை?"

"இளவரசி குமுதவல்லி, அர்ச்சுன சன்யாசியை அல்லி ராணி பார்த்த பார்வையல்லவா உன்னைப் பார்க்கிறாள்? அவள் பார்வைக்கு என் மனம் தரும் விளக்கம் சரியானால்,

அவளது இதயம் உன்னால் பறிக்கப்பட்டு விட்டது என்பது நிச்சயம். உன்னிடமும் மாற்றம் ஏற்பட்டிருக்கிறது. உண்மையைச் சொல். இளவரசியை நீ புரிந்து கொள்ளவில்லையா? நான் உன்னைவிட இதில் அனுபவசாலி. என்னிடம் மறைக்காதே."

பராந்தகன் மீண்டும் மௌனம் சாதித்தான். குமுத வல்லியின் குமுத முகம் அவன் மனத்தில் முழுவதுமாக எழுந்து அவனை விழித்துப் பார்த்தது. "சோழ நாட்டு வீரரே, உண்மையை உங்கள் மனதுக்கே மறைக்க முயல வேண்டாம். உங்கள் இதயத்தில் சோழ நாட்டு விடுதலையைத் தவிர, வேறு சிலவற்றுக்கும் கூட இடமிருக்கிறது. நன்றாகப் பாருங்கள்" என்று நகைத்தது அந்த எழில் முகம்.

அவனே உணராமல் அதுவரை உறங்கிக் கிடந்த உண்மைகள், மெல்ல பராந்தகனின் மனத்தில் உதயமாகத் தொடங்கின.





## (21)

## மலையேறிய தமிழ்

**த**ன்னைப் பற்றியே அதிகம் சிந்திப்பவர்களுக்கும், சற்றுத் தாழ்வாகவே நினைத்துக் கொண்டிருப்பவர்களுக்கும், உண்மையை ஒப்புக் கொள்வதிலும், ஏற்றுக் கொள்வதிலும் சற்றுத் தயக்கமிருக்கவே செய்கிறது. அந்தத் தயக்கம் எதிரிலிருப்பவரின் கேள்விக்கு உண்மையைக் கூறாமல், வேறு காரணங்களையே தேடுகிறது. பராந்தகனும் அந்த நிலையில்தான் இருந்தான்.

பகதத்தனின் உருண்ட முகத்திலிருந்த பெருவிழிகள் பராந்தகனை நோக்கி உருண்டு உருண்டு விழித்தன. "பரசுராமரிடம் உண்மையை ஒப்புக்கொண்ட கர்ணனைப் போல் நீயும் ஒப்புக்கொள். அதுதான் வீரனுக்கு அழகு. இளவரசியைப் பற்றி உன் மனத்தில் ஒன்றும் தோன்றியதே யில்லையா?"

ஒருமுறை தலையைக் குலுக்கிக் கொண்ட பராந்தகன், "பகதத்தா, என்னைக் குழப்பாதே. எனக்குத் தோன்றுவது இருக்கட்டும். அவள் மன்னர் மகள். நான் சோழ நாட்டின் ஏழை விவசாயி. நம் படைத்தலைவர் உதவியால் தற்போது வீரனாயிருக்கிறேன். அவ்வளவே" என்றான்.

"ஆமாம் அப்பனே, ஆமாம். அங்கேதானிருக்கிறது விஷயம். பெண்களுக்கு பிறந்த வீட்டின் மீதும், ஊரின் மீதும், மனிதர்கள் மீதும் இருக்கும் அன்பு அலாதியானது. தங்கள் ஊர் உத்தரகுமாரனைக் கூட அர்ச்சுனனாகக் கொண்டாடுவார்கள்."

"நான் என்ன சாதித்து விட்டேன்?"

"அதைத்தான் முன்னமே சொன்னேனே. பெண்களின் பார்வைக்கு அர்த்தம் காண்பது ஒரு கலை. வியாசரும், பராசரரும் சொல்லியிருக்கிறபடி பார்த்தால், இளவரசியின் மனதை நீ பறித்தாகிவிட்டது."

"மன்னர் ஏற்றுக்கொள்ள வேண்டாமா?"

"அப்படி வா வழிக்கு. மன்னர் ஏற்றுக்கொள்வதானால் உனக்குச் சம்மதம்தானா?" என்று நகைத்த பகதத்தன், "பராந்தகா, மகள் தேவயானிக்காக வயிற்றைக் கிழித்துக் கொண்டு மாண்டு போக ஒப்புக்கொண்ட சுக்ராச்சாரியாரை விட மன்னர் ஒருபடி மேலானவர். ஏறக்குறை எல்லாத் தந்தைகளுமே மகள் விஷயத்தில் அப்படித்தான். தவிர, குலத்தையும் அந்தஸ்தையும்விட அறிவையும், வீரத்தையும் மதிப்பவர் மன்னர். இந்தப் போர்கள் முடிந்தபின், பாண்டியரிடம் உனக்கு உயர்ந்த பதவி நிச்சயம் கிடைக்கும். பிறகென்ன தடை? ஏதோ, நீ பெரிய மனிதனாகி என்னைக் கவனிக்காமல் விட்டால் சரி, துரோணரைக் கவனிக்காமல் விட்ட துருபத ராஜனைப் போல"— என்ற பகதத்தன்



பெரிதாக நகைத்தபடியே கால்களை நீட்டிப் படுத்தான். சற்று நேரத்தில் உறங்கியும் போனான்.

பராந்தகனுக்கு உறக்கம் எளிதில் வருவதாகத் தெரியவில்லை. அறிவுக்கும் உணர்ச்சிக்கும் ஏற்படும் போராட்டம் மனிதனை உறங்க விடுவதில்லை என்ற உண்மையை, அந்த இரவில், கூடாகர்களின் அந்த மலைக்குடிசையில் உணர்ந்து கொண்டான் பராந்தகன்.

"பதவி, அந்தஸ்து, திருமணம் என்று நல்ல வாழ்க்கை அமையும்போது அதை ஏற்பதுதானே புத்தியுள்ளவர்களின் செயல்? ஆனால் இங்கு கிடைக்கும் நல்வாழ்வு, நம்மை பாண்டிய நாட்டுடன் நன்றிக் கடனால் கட்டிப் போட்டு விடுமே! அது ஏற்கக்கூடிய விலைதானா?"

பராந்தகனது சித்தம் அலைபாய்ந்தது.

அவன் இமைகளுக்கு நடுவில் இளவரசியின் எழில் முகம் வந்து விழிகளை மூட விடாமல் தடுத்து குறுநகை புரிந்தது. 'அவள் பார்வையில் ஏதோ இருக்கத்தான் செய்தது. நாம்தான் அதைப்பற்றி அதிகமாகச் சிந்திக்கவில்லை.'

அடுத்து அவன் மனத்தில் சோழ நாடும், வண்டாழஞ் சேரியும், அரிசிலாற்றங்கரையும், பசேலென்று விரிந்த வயல் வெளியும் வலம் வந்தன. 'என்ன அன்பான மனிதர்கள்! எத்தனை நிம்மதியான வாழ்க்கை! அறிவைப் புகட்டிய தந்தை ஏதோ அடிக்கடி கூறுவாரே, என்ன அது? "பராந்தகா, மனிதனுக்கு வாழ்வில் தேவையானது பொன்னல்ல, பொருளல்ல, பதவியல்ல, ஓரளவுக்கு மேல் கல்வியும்கூட அல்ல. மன நிம்மதிதான் தேவை. நிம்மதி என்பது இருப்பதைக் கொண்டு திருப்திப்படுவதில் இருக்கிறது. திருப்திக்கு ஓரே வழி எளிமை, நேர்மை, புரிந்து கொள்."

பராந்தகனின் மனம் தெளிவடையத் தொடங்கியது. தான் இனி என்ன செய்ய வேண்டுமென்பதைத் தீர்மானித்துக் கொண்டவன், அமைதி நிலவத் தொடங்கிய மனத்துடன் படுத்தான். மெல்ல உறங்கியும் போனான்.

இயற்கையின் இனிய ஸ்வரங்கள் எத்தனை வகை யென்பதை நிரூபித்துக் கொண்டு அந்த மலைப்பகுதியின் காலைப்பொழுது வெகு மனோகரமாக விடிந்தது. பட்சிகளின் ஒலிகளோடு பசுக்களும், ஆடுகளும் ஊடே குரல் கொடுத்து அழைத்தன. குழந்தைகளின் கூச்சலும், சிரிப்பொலியும் கலந்து ஒலித்தன. தூரத்து அருவியின் இரைச்சலும் ஓயாத அடிநாதமாகக் கேட்டது.

'எந்த மன்னாதி மன்னனின் அரண்மனையிலும் காலைப்பொழுது இத்தனை ரம்மியமாக இருக்காது' என்று எண்ணியபடியே விழித்து எழுந்தான் பராந்தகன். வெளியில் பகதத்தனிடம் முதியவர் ஏதோ கூறிக் கொண் டிருந்தார்.

வாயிலில் முதியவருடன் திடமான உடலமைப்புடன் வாலிபன் ஒருவன் நின்றிருந்தான். அவனது வலுவான கரங்களில் தெரிந்த வாள் வடுக்கள் அவன் வீரனென்பதைத் தெரிவித்தன. அகன்று கிடந்த அவன் மார்பில் வேல்களைக் கொண்டு கீறியதுபோல் ஆழமான வடுக்களும் இருந்தன. கறுத்துக் கிடந்த அவன் முகத்தில் வெட்கமும், தயக்கமும் மிதமிஞ்சித் தெரிந்தன.

பராந்தகனைக் கண்டதும் அந்த வாலிபனின் முதுகில் அறைந்து முன்னால் தள்ளிய முதியவர், "பராந்தகரே, இவன் என் மகன் வேழன். உங்கள்முன் வர வெட்கிக் கொண்டு நேற்று முதல் தயங்கிக் கொண்டிருக்கிறான்" என்றார்.



முதியவர் அறைந்த வேகத்தில் முன்னால் வந்து தடுமாறிய வேழனின் கருங்கல் தோள்களைப் பற்றி நிறுத்திய பராந்தகன், "வேழனே, இந்த வாள் வடுக்கள் நீ வீரனென்ப தைத் தெரிவிக்கின்றன. வீரனுக்குத் தயக்கம் எதிரி. போரில் தயக்கம் தாக்குபவருக்குப் பலவீனம்" என்றான்.

"பராந்தகரே, இவன் தங்களை அருவி நுகர அழைத்துச் செல்வான். நீராடிவிட்டு வாருங்கள்" என்றவர் வேழனிடம், "மகனே, தூவர்கலித்த எருமைப் புல்வெளி வழியே அழைத்துச் செல்லாதே. சிலம்புத் தராய் வழியே அழைத்துச் செல்" என்று உத்தரவிட்டு அகன்றார்.

வேழனுடன் நடந்த பராந்தகன், "பகதத்தா, முதியவர் என்ன கூறினார்? விளங்கவில்லையே!" என்றான்.

"ஒன்றுமில்லை பராந்தகா. இந்த மலைக் காற்றைப் போல இது சுத்தமான தமிழ். நெருக்கமான கோரைப் புற்களின் வழியே அழைத்துச் செல்லாதே. பாறைகளிருக்கும் மேடான பகுதி வழியே அழைத்துச் செல் என்றார். சுத்தத் தமிழ் மலையேறத் துவங்கிவிட்டது என்பது இதுதான்" என்ற பகதத்தன் நகைத்தான்.

மலைப்பாதை கரடுமுரடாக இருந்தது.

"இந்திரகீல மலைக்கு அர்ச்சுனன் போன பாதையாக அல்லவா இருக்கிறது இந்தப் பாதை" என்றான் பகதத்தன்.

"இந்திரகீல மலையா? அது எங்கிருக்கிறது?"— கேட்டான் வேழன்.

"அதைப் பிறகு கூறுகிறேன். வேழனே, உன் மார்பில் இந்த வடுக்கள் எப்படி வந்தன? அதைச் சொல்."

வேழனின் முகத்தில் வெட்கம் பரவியது. "இங்கு காவினத்தையும், மனிதர்களையும் அடித்துக் கொன்று

திரிந்தது ஒரு வேங்கை. அது அருவிக் கரையில் என்னிடம் சிக்கியபோது, நான் எறிந்த அயில்வேல்கள் குறி தவறிப் போயின."

"பிறகு அந்த வேங்கை நீ எறிந்த வேலை எடுத்து உன் மார்பில் கோடு கிழித்ததா?"

"இல்லை. அதை நான் வெறும் கைகளால் கொல்லும் படி நேர்ந்துவிட்டது. குறி தவறாமல் வேலெறிய எனக்கு வரவில்லையென்று தந்தையாருக்கு என் மீது வெறுப்பு. அடுத்து என்னைக் கூபகர் தலைவனாக்கவும் தயங்கு கிறார்."– வேழனின் முகத்தில் வருத்தம் தெரிந்தது.

"வேழனே, வருந்தாதே, உன் குறையை நான் நிவர்த்தி செய்து தருகிறேன்" என்றான் பராந்தகன்.

"எதற்கும் இன்னொரு வேங்கையைப் பிடித்து வைத்துக் கொள்" என்று நகைத்தான் பகதத்தன்.

**வ**ளைந்து திரும்பிய மலைப்பாதை சரிந்து இறங்கியது. எதிரே விரிந்த காட்சி மலைக்க வைத்தது. "ஹோ"வென்ற பெரும் இரைச்சலுடன் வெகு உயரத்திலிருந்து சரிந்து விழுந்த அருவி, கீழே கிடந்த பாறைகளை ஆக்ரோஷத்துடன் தாக்கி வெகு தூரம் வரை சாரலைத் தெளித்துக் கொண் டிருந்தது. உள்ளே நுழைந்தவர்களைத் தாக்கி, புரட்டியெடுத்த அருவி புத்துணர்ச்சி தந்தது.

கீழே தெரிந்த பாசி படர்ந்த பாறையைக் காட்டிய வேழன், "தலைவரே, இங்குதான் அந்த வேங்கையைக் கொன்றேன்" என்றான் வெட்கத்துடன்.

அருவியிலிருந்து திரும்பியவர்கள் குடிசைகளை அடைந்தபோது, கூபக வீரர்கள் பயிற்சிகளில் ஈடுபட்டுக் கொண்டிருந்தனர். வரகுக் கஞ்சியை மட்டும் அருந்திய



பராந்தகன், வேழனிடம் வாட்களை எடுத்து வரப் பணித்து விட்டு முன்னால் சென்றான்.

முதியவர் கடுகடுத்த முகத்துடன் வேழனைக் கவனித்துக் கொண்டிருக்க, "வேழனே, உன் வாளைக் கொண்டு என்னைத் தாக்கு. தயங்காதே" என்றான் பராந்தகன்.

சற்றுத் தயங்கியபடி வாளை வீசத் தொடங்கிய வேழன், தன் தாக்குதலைப் பராந்தகன் அனாயாசமாகத் தடுப்பதையும், எளிதாகத் திருப்பி விடுவதையும் கண்டு வேகத்தைக் கூட்டினான். கூபக வீரர்களும், முதியவரும் சுற்றி நின்று ரசித்தனர்.

ஒரு நாழிகை நேர வீச்சில் வேழனின் வாட்பயிற்சியில் உள்ள குறையைப் புரிந்துகொண்ட பராந்தகன், "வேழனே, உன் விழிகளை எதிரியின் வாள் மீது பதிக்காதே. எதிரில் இருப்பவன் விழிகளைக் கவனி. கரத்தின் அசைவையும், திசையையும் அது புலப்படுத்தும். எதிரியின் தாக்குதலுக் கேற்ப உன் கால்களை அடி வைக்காதே. உன் வீச்சுக்கு ஏற்றபடி அடி மாற்று. இப்போது வாளை வீசு" என்றான்.

மீண்டும் பயிற்சி துவங்கியது. அடுத்த ஒரு ஜாம நேரத்தில் வேழனின் வாள் வீச்சில் தெளிவு புலப்பட்டது. பலமான வீச்சு லாகவமான வீச்சானது. நேர்த் தாக்குதலும், பக்கவாட்டுத் தாக்குதலும், குறி பிசகாது வாளைப் பதிக்கும் முறையும் கைவந்தது. வாளைப் பதிக்கப் பழகியவனுக்கு, அடுத்து அயில்வேலையும் குறி தவறாமல் வீச எளிதாகக் கைவந்தது. அவன் ஆர்வம் உயர்ந்தது. இரண்டு தினங்கள் கடுமையான பயிற்சி தொடர்ந்தது. முதியவரின் முகத்தில் மலர்ச்சி தெரிந்தது.

**மூ**ன்றாவது தினம் காலையில் பயிற்சிகள் பாதியில் நின்றன. தென்திசைக் காவலுக்குச் சென்றவர்கள் திரும்பிக்

கொண்டிருந்தனர். அவர்களை விசாரித்த முதியவர், கடுமை படர்ந்த முகத்துடன் அவர்களை பராந்தகன் முன்பாகக் கொண்டு நிறுத்தினர். "நீங்கள் கண்டவற்றைத் தலைவரிடம் கூறுங்கள்" என்றார்.

"தலைவரே, நம் தென் எல்லையில் வெதிர்க்காடு பரவியிருக்கிறது."

"அடர்ந்த மூங்கிற்காடு" என்றான் பகதத்தன்.

"நேற்றிரவு அங்கு வில்லவனைக் கண்டோம். நம்மைத் தாக்கத் தொடங்கியவன், எல்லைப்புறத்து பொச்சைக் காவல் வீரர்களைக் கண்டதும் வெதிர்க்காட்டுக்குள் ஓடிவிட்டான்."

"பொச்சைக் காவல்...?"

"பராந்தகா, மலைப் பகுதியில் வாழும் நம் கூபக மக்கள் எல்லையில் நிறுத்தியிருக்கும் வீரர்கள்."

"பிறகு என்ன நேர்ந்தது?"

"அவர்களை இரவின் இரண்டாம் ஜாமத்தில் மீண்டும் கண்டுபிடித்தோம். உடன் வடநாட்டவர் போல் சிலரும் இருந்தனர். அந்த இரவில் அனைவருமே எங்கோ நீராடி விட்டு வந்ததைப் போல், சொட்டச் சொட்ட நனைந்தபடியே ஓடி புரவிகளில் ஏறி, கொற்கைப் பாதையில் சென்று மறைந்து விட்டார்கள்."

"என்ன உளறுகிறாய்? வில்லவனும் வட நாட்டவரும் இரண்டாவது ஜாமத்தில் நீராடிவிட்டு நனைந்தபடி ஓடினார்களா?" முதியவரின் முகத்தில் குழப்பம் தெரிந்தது.

வேழனின் குரல் தெளிவாக ஒலித்தது. "தந்தையே, நடந்தவற்றுக்குக் காரணம் எனக்குப் புரிகிறது. இந்த வில்லவன் நம் ஜென்மப் பகைவன் மட்டுமல்ல. கொற்கையில் முத்துக் களவு நடக்க உதவியவன் என்று



தாங்களே தெரிவித்தீர்கள். எனக்கு அனுமதி தாருங்கள். நான் சென்று வில்லவனையும், உடனிருப்பவர்களையும் அழித்துவிட்டுத் திரும்புகிறேன்."

"சரி மகனே, நீ பராந்தகரிடம் வாட்பயிற்சி பெற்றது மட்டும் போதாது. பாண்டிய மன்னரிடம் கூற நீ எதையேனும் சாதிக்க வேண்டும். பிறகுதான் உன்னை அடுத்த கூபகர் தலைவனாக நான் அறிவிக்க இயலும். கொற்கை முத்துக்களைக் களவாடியவர்களை அழித்துவிட்டு வா. அது இயலாதெனில் திரும்பி வராதே. புறப்படு" என்றார் முதியவர்.

அடுத்து செய்தி கொண்டு வந்தவர்களை நோக்கியவர், "வீரர்களே, வேறு ஏதேனும் கூற விடுபட்டிருக்கிறதா? அந்த வடநாட்டவரைப் பற்றி ஏதேனும் குறிப்பாக அடையாளம் உண்டா?" என்றார்.

வீரன் சற்று சிந்தித்துவிட்டுக் கூறினான்: "தலைவரே, அந்த வடநாட்டவரின் தலைவனாகத் தெரிந்தவனது முகம் மிகக் குரூரமாயிருந்தது. அவன் நெற்றியிலிருந்து முகத்தின் குறுக்கே நீண்ட வாள் வடு ஒன்று இருந்தது."

"ராகுலன்" என்று பலமாக முணுமுணுத்தான் பகதத்தன்.





22

## வேழனுக்குச் சோதனை

"ராகுலன்." – பகதத்தன் உச்சரித்த அந்தப் பெயர் அவனுக்கும், பராந்தகனுக்கும் சித்தத்தில் உஷ்ணத்தை ஏற்படுத்தியிருப்பதைக் கவனித்த கூபக முதியவரின் முகத்தில் சந்தேகச் சாயை படர்ந்தது. அவர் விழிகளில் தெரிந்த கேள்விக்குறியைக் கண்ட பகதத்தன்,

"தலைவரே, இந்த ராஷ்டிரகூட ராகுலன்தான் படைத் தலைவரை உறையூரில் கொல்ல முயன்றவன். வெள்ள ஊரில் நம் இந்தளதேவரைக் கொன்றவன். மேலை மங்கலத்தில் தாக்க முயன்று தப்பி ஓடியவன். வில்லவ னுடன் தற்போது சேர்ந்திருக்கிறான். எல்லையைக் கடக்க முடியாத வில்லவனிடம் கொற்கையில் களவாடிய முத்துக்களும் இருக்க வேண்டும்" என்றான்.

வேழனுக்கும், முதியவருக்கும், மற்ற கூபக வீரர் களுக்கும் வேகம் பிறக்க, இந்த விளக்கம் போதுமானதா



யிருந்தது. அயில்வேல்களையும், வாட்களையும், தட்டைக் கருவிகளையும் கூபக வீரர்கள் குவிக்க ஆரம்பித்தனர். ஆயுதங்களைத் தேர்வு செய்து கொண்டு அணி வகுக்கவும் செய்தனர்.

வேழன் முதியவர் முன்பாக மண்டியிட்டான். "தந்தையே, அனுமதி அளியுங்கள். அந்த ராகுலனையும், நம் ஜென்ம விரோதி வில்லவனையும் அழித்து, முத்துக்களை மீட்டு வருகிறேன்."

"மகனே, இது உனக்களிக்கும் முதல் பொறுப்பு. இதில் நீ வெற்றியடைந்தால், மன்னருக்கு ஓலையெழுதி, அடுத்து உன்னைத் தலைவனாக நியமித்து பட்டயம் அளிக்க வேண்டுவேன். நீ தலைமையேற்று நடத்து. நானும் உடன் வருகிறேன். புறப்படு" என்றார் முதியவர்.

பராந்தகன் வேழனைக் கையமர்த்தினான். "வேழனே, அந்த ராகுலன் பெரும் தந்திரசாலி. எந்த தர்மத்தையும் மதிக்காதவன். தவிர, வில்லவன் கவர்ந்து வந்த முத்துக்களும் அங்குதான் எங்கோ இருக்க வேண்டும். அதையும் நாம் கண்டறிந்து மீட்க வேண்டும். புரிந்ததா?"

வேழனின் பதில் தெளிவாக வந்தது. "தலைவரே, முத்துக்களை வில்லவன் எங்கே பதுக்கியிருக்கக் கூடும் என்பதை நான் யூகித்து விட்டேன்."

"எங்கே... எங்கே மறைத்து வைத்திருக்கிறான்?" முதியவரின் குரலில் ஆர்வம் தொனித்தது.

"தந்தையே, நம் தென் எல்லையில் வள்ளியாறு ஓடுகிறது. அந்தக் காட்டாறு வெள்ளம் பெருக்கெடுக்கும் போது பாதை மாற்றிக் கொள்ளுமல்லவா?"

"ஆம்."

"நம் எல்லைக்கல்லான குத்துப் பாறைக்குக் கீழே *சிவகிரி ஆலயம் இருக்கிறது. வெள்ளம் வந்தால் ஆலயம் மூழ்கி விடுவது வழக்கமல்லவா? இப்போது வள்ளியாற்றில் வெள்ளம் ஓடுகிறது. வில்லவனுக்கும் இது தெரியும். முத்துக்களை நீருக்கடியில் ஆலயத்தில் கொண்டு மறைத்து வைத்திருக்க வேண்டும் அவன். அதனால்தான் நேற்றிரவு அவனும், அவன் வீரர்களும் நனைந்தபடி ஓடியிருக் கிறார்கள்."

"என்ன? நீருக்கடியில் ஆலயமா? பீமன் நாகலோகத்தில் பார்த்தது போலவா?"— பகதத்தன் குரலில் வியப்பு வழிந்தது.

"ஆம். உண்மைதான் தலைவரே, இது ஆண்டுதோறும் நிகழ்வதுதான். வெள்ளம் வடிந்தபின்பே மீண்டும் அங்கு வழிபாடுகள் நடக்கும்" என்றார் முதியவர்.

வேழனின் தலைமையில் கூபகர் படை அப்போதே புறப்பட்டது.

உச்சிப்பொழுது கடந்ததும் வீரன் கூறிய மூங்கிற்காடு நெருங்கியது. இடதுபுறம் புலப்பட்ட மரக்கூட்டங்களை யடுத்து ஆற்றின் மணல்வெளியும், ஆற்றை ஒட்டி உயர்ந்த செங்குத்துப் பாறையொன்றும் தெரிந்தது. "தலைவரே, அதுதான் குத்துப் பாறை. எமது எல்லைக் கல்" என்றான் வேழன்.

"அந்தப் பாறைக்குக் கீழே ஆற்று வெள்ளம் திரும்பி ஓடுகிறது. நீருக்கடியில்தான் அந்த இடத்தில் ஆலயம் இருக்கிறது" என்றார் முதியவர்.

* வள்ளியாற்றில் வெள்ளம் பெருக்கெடுக்கும் காலங்களில் மூழ்கிவிடும் சிவகிரி ஆலயத்தைப் பற்றிய குறிப்பு, தி. இராசமாணிக்கனாரின் தென்னகக் குடைவரைக் கோயில்கள் நூல் – பக். 91இல் உள்ளது.



பராந்தகன் நேர் எதிரில் தென்பட்ட செடி கொடிகளும் புதர்களுமான பகுதியையும், வலதுபுறம் நீண்ட ஆற்றின் மணல் வெளியையும் கவனித்தான். புதர்களுக்கு நடுவில் அவ்வப்போது, வாட்கள் பளிச்சிடுவதையும், மனித நடமாட்டமிருப்பதையும் கவனித்தவன், வலதுபுறம் மணல் வெளியைத் தாண்டி மரக் கூட்டங்கள் தொடங்கிய இடத்திலும், கறுத்த உடலுடனும், கரங்களில் தாங்கிய ஈட்டிகளுடன் பலர் பதுங்கிப் பதுங்கி நடமாடுவதையும் கவனித்தான். ராகுலனும் வில்லவனும் தம் வீரர்களுடன் எதிர்பார்த்துக் காத்திருக்கிறார்கள் என்பது புரிந்தது அவனுக்கு.

"வேழனே, நமது வீரர்களை இரண்டாகப் பிரித்துவிடு. ஒரு பிரிவுடன் நீ நேர் வடக்காகச் சென்று பாறைக்கு நேர் எதிரில் திரும்பி மணல்வெளியை அடைந்துவிடு. நான் மீதி வீரர்களுடன் நேர் தெற்கே சென்று அந்தப் புதர்க் காட்டுக்குள் நுழைந்து விடுவேன். இரண்டு பக்கமும் நெருக்கப்பட்டால் அவர்கள் தப்புவது அரிதாகிவிடும். புரிந்ததா?" என்றான் பராந்தகன்.

வேழன் அதீத மகிழ்ச்சியுடன் தன்னுடன் பாதி வீரர்களை அழைத்துக் கொண்டு, சற்றுப் பின்வாங்கி வலப் புறமாக அணி வகுத்துச் சென்றான். சரியாக ஒரு நாழிகை கழித்து கூபக வீரர்களை நிதானமாகவே நடத்திய பராந்தகன், முதல் நான்கு வரிசைகளில் அயில்வேல்களைத் தாங்கிய வீரர்களை நிறுத்தி, தாக்க வேண்டிய முறையை சுருக்கமாக விளக்கினான். தூரத்து மணல்மேட்டில் வேழனின் தலை தெரிந்ததும், தாக்குதலைத் தொடங்க உத்தரவிட்டான்.

முதல் வரிசையிலிருந்து ஜிவ்ஜிவ்வென்று காற்றைக் கிழித்துக் கொண்டு உயரே கிளம்பிய அயில்வேல்கள் புதர்

களிலும், அடுத்து ஊடே தெரிந்த பாறைகளின் மறைவுகளிலும் இறங்கின. உள்ளிருந்து வில்லவனும் அவன் வீரர்களும், மறைவிடங்களை விட்டுக் கூச்சலிட்டபடி வாட்களுடன் பராந்தகனை நோக்கி ஓடி வந்தனர்.

அரை வட்டமாக அணிவகுத்து, நான்கு வரிசைகளில் நின்ற கூபக வீரர்களின் முன் வரிசை விற்களுடன் மண்டியிட்டு அமர்ந்தது. அடுத்த வரிசையிலிருந்து ஏக காலத்தில் அயில்வேல்கள் பறந்தன. மூன்றாவது நான்காவது வரிசைகள் தொடர்ந்து வேல்களை வீசி முடித்ததும், முன்னாலிருந்து அம்புகள் பறக்கத் தொடங்கின.

அதுவரை அணிவகுப்பு முறைகளையோ, வியூகம் வகுத்துத் தாக்குவதையோ அதிகம் அறிந்திராத கூபகர்கள், தேர்ந்த படைவீரர்களைப் போல் அர்த்த சந்திர வியூகம் வகுத்து சரமாரியாகத் தாக்குவதைக் கண்ட வில்லவன், அந்த முதல் தாக்குதலிலேயே தன் வீரர்கள் பாதிக்கும் மேலே மடிந்துவிட்டதைக் கண்டு திகைத்தான். எஞ்சிய தன் வீரர்கள் கூபகர் படைக்குள் வாட்களை வீசியபடி கலந்த பின்னும், அணிவகுப்புக் கலையாமல் திடமான சுவர் போல நின்று அவர்கள் போரிடுவதையும், பராந்தகனின் வாள் செய்த சமிக்ஞைகளுக்கேற்ப பக்கவாட்டிலும், முன்னும் பின்னுமாக நகர்வதையும் கண்டு, இனி கூபகர்களை வெல்ல தன் வீரர்களால் இயலாது என்பதைப் புரிந்து கொண்டான். அந்தச் சோழ நாட்டு வாலிபனாகத் தெரிந்தவனை, எப்படியும் தீர்த்து விடுவது என்ற ஆவேசத்துடன் முன்னேறியவனை, பட்டையான கனத்த வாள் ஒன்று தடுத்தது. சற்று பருமனான உடலுடன், உருண்ட விழிகளுடன், விஷமச் சிரிப்புடன் வில்லவனை வழிமறித்தான் அந்தச் சோழ வாலிபனுடன் வந்தவன்.



அதேசமயத்தில் மணல்வெளியைக் கடந்து பாறையை நெருங்கிய வேழனின் நிலை வேறாக இருந்தது. ராஷ்டிர கூடத்தின் அந்தத் தேர்ந்த வீரர்கள், கூபகர்களின் அந்த பலமும் வேகமும் சேர்ந்த தாக்குதலில் சற்றுத் தடுமாறினாலும், தாக்குதலை ராஷ்டிரகூடர் போர் முறைக்கு மாற்றிக் கொண்டு எதிர்க்கத் தொடங்கினார்கள். வாள் வெட்டுக்களை சர்வ அலட்சியமாகத் தாங்கிய கூபகர்களின் உடல் வலிவும் நெஞ்சுரமும், உறுதியாகத் தாக்கிய விதமும் ராகுலனின் வீரர்களை அசர அடித்தன.

நெற்றியில் நீண்ட தழும்புடன் இருப்பவன்தான் ராகுலன் என்பதை அறிந்திருந்த வேழன், மற்றவர்களை விலக்கி, நேராக வாளை வீசியபடி முன்னேறினான். ராகுலனை நெருங்கித் தாக்கத் தொடங்கிய பின்பே, வேழனுக்கு பராந்தகன் அவனைப் பற்றிக் கூறியவை எத்தனை உண்மை என்பது புலப்பட்டது. பக்கங்களில் பாய்வது போல் வந்த ராகுலனின் வாள், திசைமாறி நேராகப் பாய்ந்து வேழனின் கழுத்திலும் தோள்களிலும் பதிந்து காயப்படுத்தியது.

தன்னை நிதானப்படுத்திக் கொண்ட வேழன், ராகுலனின் விழிகளை கவனிக்கவும், பராந்தகன் கற்பித்த முறையில் வாளின் சுழற்சியை மாற்றிக் கொள்ளவும் ஆரம்பித்தான். அதன் பிறகு அதிவேகமாகச் சுழன்று சுழன்று, சம்மட்டி கொண்டு அடிப்பது போன்ற வேகத்துடன் இறங்கிய வேழனின் வாள், ராகுலனைத் தடுமாற வைக்கத் தொடங்கியது.

ராகுலனின் விழிகளில் குரூரம் படர்ந்தது. மெல்லப் பின்வாங்கியவன் போரிட்டபடியே அந்தக் குத்துப் பாறையின் மீது ஏறினான். தொடர்ந்து அனாயாசமாகப்

பாறையின் மீது தாவிய வேழன், ராகுலனை உச்சியை நோக்கி விரட்டியபடி தொடர்ந்து வாளைச் சுழற்றினான்.

வில்லவனையும் அவன் வீரர்களையும் முற்றிலுமாக வீழ்த்திவிட்டு, பகதத்தனுடன் பாறையை நோக்கி ஓடிவந்த பராந்தகன், வேழனுக்கு உதவ, தானும் பாறை மீது ஏற முயன்றான்.

முதியவரின் கரம் நீண்டு பராந்தகனைத் தடுத்தது.

"பராந்தகரே, வேழனுக்கு உதவச் செல்ல வேண்டாம். தனிப்பட்ட இருவர் போரில் ஈடுபடும்போது, குறுக்கிடுவது கூடபகர் வழக்கமல்ல" என்றார் அவர்.

"அபிமன்யுவுக்கு உதவாமல் அர்ச்சுனனைத் தடுத்த கதையாகவல்லவா இருக்கிறது" என்றான் பகதத்தன்.

"முதியவரே, நீங்கள் கூறுவது யுத்த தர்மத்தை மதித்து நேரிடையாகப் போரிடும் வீரர்களுக்குச் சரி. இந்த ராகுலன் எந்த தர்மத்தையும் மதிப்பவனல்ல," என்றான் பராந்தகன் உஷ்ணமாக.

பகதத்தனின் உருண்ட விழிகள் சிவந்து கிடந்தன. "முதியவரே, சற்று நிமிர்ந்து மேலே பாருங்கள்; எத்தனை விதமாகப் போக்குக் காட்டி அந்த ராகுலன் வாளை வீசுகிறான் என்பதை. வேழனின் உடல் முழுதும் காயங்களாகிக் கிடக்கிறது. குருதி வெளியேறிக்கொண்டேயிருந்தால் அவன் பலவீனப்பட்டு விடுவான். வேழனை விலக்கிவிட்டு நான் சென்று ராகுலனைப் பார்த்துக் கொள்கிறேன்."— பகதத்தன் குரலில் சினம் பொங்கி வழிந்தது.

முதியவர் அசரவில்லை. "பகதத்தரே, மற்ற கூடபக வீரர்களைக் கவனியுங்கள். அயில்வேலையோ, அம்பையோ எறிந்து இங்கிருந்தே அந்த ராகுலனைக் கொன்றுவிட முடியும். ஆனால் அவர்கள் எவரும் நகரவில்லை என்பதைப்



பாருங்கள். இது வேழனுக்குச் சோதனை. இதில் வெற்றியுடன் ராகுலனைக் கொன்று அவன் மீண்டால், அடுத்த கூடபகர் தலைவன் அவன்தான். ஒருவேளை மடிந்தாலும் நான் வருந்தமாட்டேன். பொறுத்துப் பாருங்கள். வேழனின் உறுதி குலையவில்லை. அவன் போரிடுவதைப் பாருங்கள்."

கூடபகர் எல்லைக்கல்லான அந்தப் பெரும் குத்துப் பாறையின் மீது, வெகு உக்கிரமாக நடந்து கொண்டிருந்தது வாட்போர். எத்தனை காயங்கள் பட்ட போதிலும் வேழனின் வேகம் குறைந்ததாகத் தெரியவில்லை. பல போர்க்களங்களையும், வாள் வீரர்களையும் கண்டிருந்த ராகுலனின் வீச்சிலும் வேகம் கூடிக் கொண்டிருந்தது. இருவரும் பாறையின் உச்சியை நெருங்கி விட்டிருந்தனர்.

பக்கவாட்டில் சுழன்று சுழன்று இறங்கிய வேழனின் வாளைத் தடுத்துச் சுழன்று, எதிர்ப்பக்கமாக விலக்கிய ராகுலன், வேழன் பாறையின் விளிம்பை அடுத்து கால்களைப் பதித்து நிற்பதைக் கவனித்தான். நேர்ப்பின்புறமாக இரண்டடி எடுத்து வைத்தவன், சட்டென்று முன்னே பாய்ந்தான். இரு கரங்களையும் சேர்த்து வேழனின் வாளை நேர் வீச்சில் தடுத்து, அவன் வாளின் பிடிக்கருகில் தன் வாளைப் பதித்து, எதிர்ப்புறமாகச் சுழற்றினான்.

வேழனின் கைவாள் அவன் கரத்தை விட்டுப் பறந்து, நேர் கீழே சுழித்துச் சுழித்து ஓடிய ஆற்று வெள்ளத்தில் சென்று விழுந்தது.



(23)

## வேழன் தலைமை

'கட்டிக் கொடுத்த சோறும், சொல்லிக் கொடுத்த வார்த்தையும் வெகுநாள் வராது' என்றுதான் தமிழ்ப் பழமொழி சொல்கிறது. ஆனாலும் பயிற்சியளிக்கும்போது பராந்தகன் சொல்லிக் கொடுத்த முதல் பாடத்தை நினைவில் நன்றாகப் பதித்துவிட்ட வேழனின் விழிகள், வாள் தன் கரத்தை விட்டுப் பறந்த பின்னும் ராகுலனின் குரூர விழிகள் மீதே பதிந்திருந்தன. ராகுலனின் உத்தேசம் என்னவென்பதும் கணத்தில் புரிந்தது வேழனுக்கு.

அடுத்த கணம் ராகுலனின் வாள் வேழனின் அகன்ற மார்பை நோக்கி அதிவேகமாகப் பாய்ந்தது. வேழன் இமைக்கும்பொழுதில் வாளின் பாதையிலிருந்து விலகி, பக்கவாட்டில் சுழன்று ராகுலன் மீது பலமாக மோதினான். வேழனின் வலுவான தேகம் மோதிய வேகத்தில் தடுமாறிய



ராகுலன், வாள் பிடித்த கரத்தோடு சரிந்து நேர் கீழே வெள்ளத்தில் விழுந்தான்.

ஒருகணமே தாமதித்த வேழன் ராகுலனைத் தொடர்ந்து தானும் ஆற்றில் தலைகுப்புறப் பாய்ந்தான்.

பாறையின் கீழே நின்றிருந்த பராந்தகனும், பகதத்தனும் பாறையின் கீழ்ப்பகுதியைச் சுற்றி, கரைக்கு வந்து வெள்ளத்தின் மேற்பரப்பைக் கவனித்தார்கள். ராகுலனின் வீரர்கள் அத்தனை பேரையும் மொத்தமாக அழித்துவிட்ட மற்ற கூபக வீரர்களும் கரையில் வந்து கூடி, நீரிலிருந்து ராகுலனும் வேழனும் வருவதை எதிர்பார்த்தனர்.

ஆனால் ஆற்றில் விழுந்தவர்களில் எவரும் மேலே வரவில்லை.

தடுமாறி நீரில் விழுந்த ராகுலனுக்கு உள்ளே மூழ்கிய இரண்டாவது கணம் நீரில் எழுந்த ஒலியும், அதிர்வும் அடுத்து வேழனும் குதித்திருக்கிறான் என்பதைப் புரிய வைத்ததால், நீரின் உள்ளே வாளுடன் நீந்தி வெள்ளத்தின் போக்கிலேயே சென்றான். உள்ளே கருங்கல் தூண்களும், ஆலயத்தின் மேற்பரப்பும் தெரிவதைக் கண்டவன் மூச்சை இழுத்துப் பிடித்தபடி தூண்களை நெருங்கி, கரத்தில் வாளுடன் மறைந்து கொண்டான். நீருக்கடியில் அடுத்து வேழன் வருவதை எதிர்பார்த்து மூச்சடக்கிக் காத்திருந்தான்.

சிறு வயதிலிருந்தே அந்த வள்ளியாற்றையும், உள்ளே மூழ்கியிருந்த ஆலயத்தின் அமைப்பையும் கரதலப் பாடமாக அறிந்திருந்த வேழன், ஆலய மேற்கூரை வழியே நீந்தி மறு பக்கமாக இறங்கி, மண்டபத்தையும் தூண்களையும் நெருங்கி வந்தான். ராகுலன் பதுங்கியிருக்கும் தூண் தெரிந்தது.

நீரில் அதிக சலனமேற்படாமல் நீந்தியவன், ராகுலனைப் பின்புறமாக நெருங்கிப் பாய்ந்தான். ராகுலன் சட்டென

வாளுடன் திரும்பவும், வேழன் வந்த வேகத்தில் ராகுலனின் வாள் பிடித்த கரத்தைப் பற்றவும் சரியாக இருந்தது.

வந்த வேகத்திலேயே ராகுலனின் கரத்தை விடாமல் தூணுக்கு மறுபுறம் வந்துவிட்ட வேழன், வளைந்து திரும்பி தூணின் மறுபுறமாக ராகுலனின் இன்னொரு கரத்தையும் பற்றினான். வேழனின் பிடி இரும்புப்பிடியாக இருந்தது. அடுத்து வேழன் இழுத்த இழுப்பில் ராகுலனின் பின்தலையும் உடலும் தூணில் பலமாக மோதின. இரண்டு மூன்று மடக்கு நீரை உட்கொண்ட ராகுலனின் கரத்திலிருந்த வாள் நழுவி, ஆழத்தை நோக்கி அமிழ்ந்தது. மேலும் இருமுறை ராகுலனைத் தூணோடு மோதிய வேழன், முன்புறமாக வந்து ராகுலனின் கழுத்தில் தன் வலுவான கரத்தைச் சுற்றி இறுக்கியபடியே, தூணை உதைத்து ஆலயத்தின் மேற்புறச் சுவரில் ராகுலனின் தலை நேராக மோதும்படி கொண்டு பலமாக இடித்தான்.

மூச்சுக்காகத் தவித்த ராகுலனின் துடிப்பு அடுத்த இரண்டாவது மோதலில் அடங்கத் தொடங்கியது. ராகுலனின் தலை துவண்ட பின்னே சுவரில் மோதுவதை நிறுத்திய வேழன், அவன் கழுத்தைச் சுற்றிய கையோடு வெளியேறி, மேற்பரப்பை நோக்கி நீந்தினான்.

ராகுலனின் உடலை இழுத்தபடியே கரைக்கு நீந்திய வேழன் உடலெங்கும் காயங்களுடன் மணலடித்த பகுதியில் தவழ்ந்து ஏறி விழுந்தான்.

ஓடி வந்து வேழனைத் தாங்கிய பராந்தகனையும் பகதத்தனையும் தள்ளாடியபடியே ஏறெடுத்த வேழனின் முகத்தில் நீருடன் வெற்றிக் களை வழிந்தது. விழிகள் களைப்பில் மூடிக் கொண்டிருந்தன.

முதியவரின் முகத்தில் பெருமிதம் தெரிந்தது.



ஓடிவந்து சூழ்ந்து கொண்ட கூபக வீரர்கள் பெரிதாகக் கூச்சலிட்டனர்.

சற்று நேரம் கழித்து மீண்டும் கண்களைத் திறந்த வேழன், "வீரர்களே, நீருக்குள் மண்டபத்தில் பேழைகள் இருக்கின்றன. எடுத்து வாருங்கள்" என்றான்.

வீரர்கள் மளமளவென்று ஆற்றில் பாய்ந்தனர். மற்றவர்களை நோக்கிய வேழன், "நீங்கள் இருபதின்மர் நம் கிராமத்திற்குச் சென்று களிறுகளை அழைத்துக் கொண்டு வாருங்கள்" என்றான்.

அந்தக் கணத்திலிருந்தே வேழனின் வார்த்தைகள் கூபக வீரர்களுக்குக் கட்டளைகளாகி விட்டதைக் கண்ட முதியவர் வேழனை நெருங்கி அணைத்துக் கொண்டார்.

காட்டிலிருந்து மூலிகைகள் பறிக்கப்பட்டு அங்கேயே வேழனின் காயங்களுக்கு மருந்திடப்பட்டது.

ராகுலனையும் வில்லவனையும், உடன் வந்து மடிந்து போன வீரர்களையும், கூபகர் வழக்கப்படி மலைப் பள்ளத்தில் நரிகளுக்கும், கழுகுகளுக்கும் உணவாக எறிந்து விட உத்தரவிட்டான் வேழன்.

அடுத்திருந்த கூபகர் கிராமத்திலிருந்து உணவு எடுத்து வரவும், அப்போதே பயணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யவும் வீரர்களை அனுப்பினார் முதியவர். அவரது முகம் மலர்ந்து கிடந்தது.

நீருக்கடியிலிருந்து முத்துப் பேழைகள் அனைத்தும் மேலே கொண்டு வரப்பட்டு வரிசையாக அடுக்கப்பட்டன. மணல் வெளியிலேயே அனைவரும் தங்குவதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

அனைத்து ஏற்பாடுகளையும் முடித்து வேழனுடன் வந்து பராந்தகனை நெருங்கிய முதியவர், அவன் கரங்

களைப் பிடித்துக் கொண்டார். "பராந்தகரே, என் மனக் குறையைப் போக்கி விட்டீர்கள். வேழன் கூபகர்களின் தலைமைப் பொறுப்பை ஏற்பதிலும், எல்லைக் காவலை ஏற்பதிலும் எனக்கிருந்த தயக்கம் நீங்கியது. அவனை முழுவதுமாகத் தகுதியுடையவனாக்கி விட்டீர்கள். எப்படி நான் உங்களுக்கு நன்றி கூறுவேன்" என்றார். அவர் குரல் உணர்ச்சி மிகுதியால் நெகிழ்ந்து கிடந்தது.

"தலைவரே, வேழனுக்குத் தகுதி இயற்கையிலேயே இருக்கிறது. தயக்க சுபாவம் மட்டுமே ஒரு திரையாக இருந்திருக்கிறது. நான் அதை மட்டும் விலக்கினேன். அவ்வளவே" என்றான் பராந்தகன்.

இரவின் முதல் ஜாமம் முடியும்போது களிறுகள் வந்து சேர்ந்தன. இருபது களிறுகளின் இருபக்கங்களிலும் பேழைகள் கட்டித் தொங்கவிடப்பட்டு வரிசையாக நிற்க, கூபக வீரர்கள் மீண்டும் அணிவகுத்தனர்.

கூபகர் தலைமையை வேழன் ஏற்பது பற்றியும் பேழை களை மீட்டது பற்றியும் ஓலைகளை எழுதிய முதியவர் வேழனிடம் அளித்தார். "மகனே, மன்னரைக் கண்டு நடந்தவற்றைக் கூறு. உன்னை எல்லைக் காவலுக்கும், கூபகர் தலைமை பொறுப்பிற்கும் நியமித்து மன்னர் அளிக்கும் பட்டயத்தைப் பெற்று வா. பேழைகளை மன்னரிடம் ஒப்படைக்கும் வரை வழியில் எங்கும் நிற்காதே" என்றார் முதியவர்.

பராந்தகனும் பகதத்தனும் புரவிகளில் முன்னால் செல்ல வேழனும் உடன் சென்றான்.

பேழைகளைத் தாங்கிய யானைகளைச் சுற்றி கூபக வீரர்கள் அணிவகுத்து நடக்க, அந்த ஊர்வலம் பாண்டியர் தலைநகரை நோக்கி நகரத் தொடங்கியது.



(24)

## வாழ்வின் போக்கு

**கா**லத்தைப் பற்றிய பிரமை மனிதரை எக்காலத்திலும் விட்டதில்லை. நாழிகை அளவிலோ, ஜாமத்தின் அளவிலோ மாற்றமின்றி காலம் என்னவோ ஒரே சீராகத்தான் ஓடுகிறது. காத்திருப்பது என்ற நிலையிலிருக்கும் மனத்திற்கு மட்டும், ஒரு நாழிகையென்பதே ஒரு யுகமாகிவிடுகிறது.

முத்துப் பேழைகள் மீட்கப்பட்டதும், ராகுலனின் முடிவும் அறிவிக்கப்பட்ட பின்னர், பராந்தகனது வருகைக் காகக் காத்திருந்த குமுதவல்லிக்கு, இரு தினங்களும் முடியவே முடியாத பொழுதாகவே தோன்றியது. அவள் தவிப்பைக் கண்ட சூர்குழலிக்கு பரிகாசம் செய்ய இரு தினங்கள் போதாமல் போனது.

இரண்டாவது தினம் மதுரை மாநகரமே ஜாஜ்வல்யமாக ஜொலிக்க, மக்கள் ஆவலுடன் வழியெங்கும் காத்திருக்க,

கூபகர்களின் களிறுகள் பக்கங்களில் முத்துப் பேழைகள் ஊசலாட கரிய பெரும் குன்றுகள் போல் மதுரையின் கோட்டை வாசல் வழியே பிரவேசித்தன. கொற்கை முத்துக்களை மீட்டதும், ராஷ்டிரகூட ராகுலனின் முடிவும் கற்பனைகளுடனும், கதைகளுடனும் மக்களிடையே பரவி விட்டதால், மதுரை மாநகரத்து மக்கள் மாடவீதிகளிலும், கோட்டை வாயில்களிலும் குவிந்து கிடந்தனர். கூபகர்களின் களிறுகள் கோட்டைக்குள் பிரவேசித்ததும் வரவேற்பொலி களும், வாழ்த்தொலிகளும் பலமாக ஒலிக்கத் தொடங்கின. கோட்டை வாயிலிலிருந்த முரசுகளும் தாரைகளும் தொடர்ந்து ஒலித்தன. வழியெங்கும் மலர்களும் மாலைகளும் வீரர்களை நோக்கி வீசப்பட்டன.

அந்த வரவேற்பைக் கண்ட வேழனை பிரமிப்பு பூரணமாக ஆட்கொண்டிருந்தது. கூபக வீரர்கள் விழி களிலும், அவர்கள் ஏந்தி வந்த அயில் வேல்களைவிடப் பிரகாசம் தெரிந்தது.

அரண்மனை வாயிலை அடைந்ததும் வரவேற்ற பேரமைச்சரையும் பிரதானிகளையும் வணங்கிய பராந்தகன், வேழனை அழைத்து முத்துப் பேழைகளை இறக்கி, அரண்மனைக் கூடத்தில் அடுக்க உத்தரவிட்டான்.

சற்று நேரத்தில் மன்னனின் வருகை அறிவிக்கப்பட்டது. பாண்டியர் படைத்தலைவரும், விக்கிரமவரையனும் உடன் வர, பாண்டிய வரகுணன் கூடத்தில் பிரவேசித்தான். சற்றுப் பின்னால் கார்குழலி உடன்வர, குமுதவல்லி ஆவலும் நாணமும் விழிகளில் மின்ன வந்து கொண்டிருந்தாள்.

மன்னனைக் கண்டதும் மண்டியிட்டு வணங்கிய வேழனை எழுப்பி மன்னன் முன்பாக நிறுத்திய பராந்தகன், "மன்னவா, இவன் நம் கூபகர் தலைவரின் மகன் வேழன். அடுத்த கூபகர் தலைமையையும் நமது எல்லைக் காவல்





பொறுப்பையும் இவன் ஏற்க, தங்களின் உத்தரவு வேண்டி கூபகர் தலைவர் ஓலை கொடுத்தனுப்பியிருக்கிறார்" என்றான்.



மன்னனின் புருவங்கள் உயர்ந்தன. வேழனை ஏற இறங்கப் பார்த்தவன், "இவனுக்கு பயிற்சிகளில் ஏதோ குறையிருப்பதாக இவன் தந்தை தெரிவித்திருந்தாரே– இவன் உடலெங்கும் ஏன் இத்தனை காயங்கள்? என்ன நேர்ந்தது?" என்றான்.

"மன்னவா, எல்லைப் பகுதியில் ராகுலனும் வில்லவனும் நடத்திய தாக்குதலை முறியடித்தவன் இவன் தான். இவன் குறை நீங்கியதற்கான அத்தாட்சி ராகுலனுடன் இவன் தனிப்பட வாட்போரிட்டது. உதவ முயன்ற என்னையும் இவன் தந்தை தடுத்துவிட்டார். வாளுடன் நீரில் விழுந்த ராகுலனை இவன் வெறும் கைகளினால்தான் கொன்றான். அந்தப் போரில் ஏற்பட்ட காயங்கள் இவை. முத்துக்களை மறைத்து வைத்திருந்த இடத்தைக் கண்டறிந்து மீட்டிருக்கிறான்.

நான் அறிந்தவரை இவனிடமிருந்த குறை முற்றிலுமாக நீங்கிவிட்டது. கூபகர் தலைமையையும், எல்லைக் காவல் பொறுப்பையும் இவனுக்கு அளிக்கத் தடையேதுமில்லை என்றே எண்ணுகிறேன்."

மன்னன் முகத்தில் முறுவல் விரிந்தது. "பராந்தகா, உன் விருப்பப்படியே வேழனை அடுத்த கூபகர் தலைவனாக நியமித்து பட்டயம் அளிக்க உத்தரவிடுகிறேன். எல்லைக் காவல் தலைவனுக்குரிய இலச்சினைகளும், சின்னங்களும் அவனுக்கு அளிக்கப்படும். போர்களுக்கான மந்திராலோசனைகளில் இனி அவனும் கலந்து கொள்ளலாம்" என்ற மன்னன், திரும்பி அமைச்சரிடம் உரிய ஏற்பாடுகளைச் செய்ய உத்தரவிட்டான்.

அரண்மனைக்குள்ளே சென்று சற்று நேரத்தில் திரும்பிய பேரமைச்சர், பொக்கிஷ அறையிலிருந்து கொண்டு வந்த முத்திரை மோதிரத்தையும், பாண்டியர் இலச்சினை பொறிக்கப்பட்ட வாளையும் வேழனிடம் அளித்தார். மண்டியிட்டு அவற்றைப் பெற்றுக் கொண்ட வேழன் மன்னனை வணங்கி எழுந்து, பராந்தகனை நெருங்கி, "பராந்தகரே, என் குறையை நீக்கி இந்தப் பொறுப்பையும் பெற்றுத் தந்த தங்களை இந்த வேழனும், கூடக மக்களும் எந்நாளும் மறக்க மாட்டோம்" என்றான் குரல் தழுதழுக்க.

கூடக வீரர்களின் வாழ்த்தொலி அரண்மனையெங்கும் எதிரொலிக்க விடைபெற்ற வேழன், தன் வீரர்களுடன் விருந்தினர் மாளிகையை நோக்கி நடந்தான்.

சற்று நேரத்தில் உள்ளே நுழைந்த விஷ்ணுசித்தர் பராந்தகனின் வணக்கத்தை ஏற்றபடி, "பராந்தகா, உன்னிடமோ, ரணதீரப் பாண்டியனிடமோ சிக்காத ராகுலன் இந்த வேழனிடம் சிக்கி மடிந்தது விசித்திரம் தான்" என்றார். பின்பு கொற்கையில் ராஜமாதுலருக்கு நேரிட்டதையும் விவரித்தார்.

மௌனமாகக் கேட்ட பராந்தகனது பார்வை மன்னனை நோக்கித் திரும்பியது. அதில் கேள்விக் குறியொன்றும் புலப்பட்டது.

"எதுவாயினும் கேள், பராந்தகா. தயங்க வேண்டாம்," என்றான் மன்னன் முறுவலுடன்.

"மன்னவா, எனக்களிக்கப்பட்ட வரவேற்பு, பெரும் படைத்தலைவர்களுக்கும், அயல்தேசத்துப் பிரதானி களுக்குமே அளிக்கப்பட வேண்டியவை. என்னைப் போன்ற சாதாரண வீரனுக்கு அளிக்கப்படக் கூடியதல்லவே. இதற்கான காரணம் புரியவில்லை" என்றான் பராந்தகன்.



"உன் கேள்வி நியாயமானதுதான் பராந்தகா. ஆனால் நீ சாதாரண வீரனல்ல என்பதை நம் படைத்தலைவரே ஏற்றுக் கொண்டிருக்கிறார். தவிர, பாண்டிய நாட்டுக்கு நீ செய்திருக்கும் சேவை சாதாரணமானதல்ல. உன் சேவைக் குரிய மதிப்பை அளிக்க எண்ணியிருக்கிறேன். அதற்கான முன்னோடிதான் இந்த வரவேற்பு. மேலும் உன்னைப் பற்றி மக்கள் அறிந்து கொள்ளவும் இது உதவும்" என்ற மன்னனின் விழிகளில் விஷமம் படர்ந்து கிடந்தது. அவன் விழிகள் சற்றுத் தள்ளி சிவந்து போன முகத்துடன் தலை கவிழ்ந்து நின்றிருந்த குமுதவல்லியின் மீது பதிந்து மீண்டன.

மன்னன் விழிகள் சென்ற திசையை கவனித்த பராந்தகன், "மன்னவா, மக்கள் என்னைப் பற்றி அறிந்து கொள்ளுமளவுக்கு என்ன இருக்கிறது? நான் சோழ நாட்டின் ஒரு சாதாரண..."

பராந்தகன் மேலும் தொடருமுன்பாக மன்னனின் கரம் உயர்ந்து அவனைத் தேக்கியது.

"போதும் பராந்தகா, நீ சோழ நாட்டு ஏழை விவசாயி யின் மகன் என்ற கதையை உன் சகோதரி கார்குழலியிடம் பலமுறை கேட்டாயிற்று. நீ சென்று ஓய்வெடுத்துக் கொள். நாளை நாம் இதுபற்றி நிறையப் பேசவும், விவாதிக்கவும் செய்யலாம்" என்ற மன்னன் விடையளித்தான்.

மன்னனிடமும் படைத்தலைவர்களிடமும் விடை பெற்று, பகதத்தனுடன் நடந்த பராந்தகனின் விழிகள், கார்குழலியின் விஷமம் வழிந்த முகத்தையும், சிவந்து கிடந்த இளவரசியின் முகத்தையும் ஒருமுறை கண்டு குழப்பத்துடன் மீண்டன. அவன் உள்ளம் பெரும் போராட்டக்களமாகத் தொடங்கியது.

விருந்தினர் மாளிகையை அடைந்த பின்னும் பராந்தகனின் சிந்தனை கலையவில்லை. வழியில் பகதத்தன் கூறிக்கொண்டுவந்த புராணங்களையும் அவன் கேட்டதாகத் தெரியவில்லை.

"பராந்தகா..." என்று இரைந்த பகதத்தன், "சத்திய விரதனுக்குப் பட்டம் கட்டுவதா, இல்லை செம்படவப் பெண்ணை மணப்பதா என்று தவித்த சந்தனு மகாராஜனைப் போல அப்படியென்ன சிந்தனை? எத்தனை முறை அழைப்பது உன்னை?" என்றான் பலமாக.

நிதானமாகத் திரும்பிய பராந்தகன் "இப்போது என்னை அழைத்தாயா பகதத்தா?" என்றான் மெல்ல.

"பாழாய்ப் போயிற்று' போ. ஒரு நாழிகையாக நான் புலம்பிக் கொண்டே வருகிறேன். எதையுமே கேட்க வில்லையா நீ? என்ன ஆயிற்று உனக்கு?"

"ஒன்றுமில்லை. கூபகர் குடிசையில் நீ கூறியவை உண்மைதான் எனறு தோன்றுகிறது. சந்தனுராஜனைப் போலத்தான் நானும் குழப்பத்திலிருக்கிறேன்."

"பிறகென்ன, நான் கட்டுக்கதை கூறினேன் என்று நினைக்கிறாயா? ஆனால் புராணக் கதையெல்லாம் நான் தான் கூறவேண்டும். மற்றவர்கள் கூறினால் நான் குழம்பிப் போய்விடுவேன். பிறகு நான் பேசுவது எனக்கே புரியாது."

"சரி, கூபகர் குடிசையில் நீ என்ன கூறினாய்?"

"என்ன கூறினேன்?"

"இளவரசியின் மனத்தில் நான் இடம்பெற்று விட்டதாகவும், மன்னரும் ஏற்றுக் கொள்வாரென்றும் கூறினாய்."

"ஆம் அதுதான் மன்னரும் ஏற்றுக் கொண்டாரே. பிறகென்ன?"



"என்ன, மன்னர் ஏற்றுக் கொண்டாரா? அப்படி யார் சொன்னது உன்னிடம்?"

"கார்குழலிதான்."

"நீ என்னுடன்தானே நின்றிருந்தாய், எப்போது அவளுடன் பேசினாய்?"

"வாய்மொழியாகப் பேசினால்தான் ஆயிற்றா? கண்ணால் பேசும் மொழி ஒன்றிருக்கிறது அப்பனே."

"சரி, பிறகென்ன கூறினாய்?"

"போர்கள் முடிந்தபின் வாழ்க்கை என்று ஒன்று இருக்கிறது என்றேன்."

"ஆம்."

"அதற்கென்ன பொருள்?"

"அடே பராந்தகா, நச்சுப் பொய்கையருகே தர்மதேவதை யுதிஷ்டிரனைக் கேட்டது போல் கேள்விகளாகக் கேட்டுக் கொண்டிராதே. கூற வேண்டியதை நேரடியாகக் கூறு."

பராந்தகன் சற்று மௌனம் சாதித்தான். பிறகு தெளிவான குரலில் கூறினான். "பகதத்தா, என் வாழ்க்கை எப்படி அமைய வேண்டுமென்பதைத் தீர்மானித்து விட்டேன்... அதில் பாண்டிய இளவரசிக்கு இடமிருப்பதாகத் தெரியவில்லை."

பகதத்தன் நாகாஸ்திரத்தால் தாக்கப்பட்டவன் போலத் திகைத்து நின்றான். "என்ன சொல்கிறாய் பராந்தகா?"– அவன் குரலில் குழப்பம் பெரிதாக ஒலித்தது.

"ஆம் பகதத்தா, மன்னரோ இளவரசியோ, என்னை நேரிடையாகக் கேட்டபின்புதானே எதையும் முடிவு செய்வது இயலும்? நான் மறுத்து விட்டால்...?"

உயிர்த்தோழன் நல்ல ஸ்திதியில் இருப்பதைக் காண பேராவல் கொண்டிருந்த பகதத்தனுக்கு, பராந்தகனது தீர்மானம் வேம்பாகக் கசந்தது. ஏமாற்றம் அவன் மனதை உலுக்கியெடுக்க, பிறகு அவன் செய்த விவாதங்களும், புராணக்கதைகளும், கூறிய அறிவுரைகளும் பயனற்றுப் போயின.

கார்குழலியைச் சந்தித்து இதுபற்றிப் பேசினால் மாறுதல் ஏதும் எற்படலாமென்ற எண்ணம் எழுந்தது பகதத்தனுக்கு. பராந்தகனிடம் கூறிவிட்டு வெளியேறினான் அவன்.

பகதத்தன் சென்றபின் சாளரத்தருகே நின்று மதுரை மாநகரை வெறித்துக் கொண்டு சிந்தனையில் ஆழ்ந்த பராந்தகனுக்கு, தான் எடுத்த முடிவு சரியானதுதான் என்று தோன்றியது.

“பிரபு, பிரபு” என்று ஒலித்த குரலொன்று அவனைத் திரும்ப வைத்தது.

திரும்பியவனின் எதிரே வீரனொருவன் நின்றிருந்தான். அவன் கரத்தில் நறுக்கோலையொன்றும் இருந்தது. பராந்தகனை நெருங்கி வணங்கியவன், “பிரபு, இந்த ஓலையைத் தங்களிடம் அளிக்க உத்தரவு” என்றான்.

“யார் உத்தரவு?”

“ஒற்றர் படைத்தலைவர் முகுந்தரின் உத்தரவு.”

வெள்ளலூரில் தன்னை அடியோடு பிரிந்து சென்ற முகுந்தன் திடீரென்று முளைத்து தனக்கு ஓலையொன்று அனுப்பியிருப்பதையும் எண்ணிய பராந்தகனது சித்தத்தில், கேள்விகள் பல எழுந்தன. ‘இத்தனை நாட்களாக எங்கே சென்றிருந்தான் முகுந்தன்? எப்போது பாண்டியர்



தலைநகருக்கு வந்தான்? வந்தவனும் அரண்மனையிலோ, விருந்தினர் மாளிகையிலோ தாராளமாகத் தன்னை வந்து கண்டிருக்கலாம். ஏன் வந்து காணவில்லை? எங்கோ இருந்து ஓலை கொடுத்தனுப்ப வேண்டிய அவசியமென்ன?’

குழப்பத்துடன் ஓலையைப் பெற்றுக் கொண்டு அதைப் பிரித்துப் படித்தவனுக்கு, குழப்பம் மேலும் உயர்ந்தது.

“பராந்தகரே, உங்களைச் சந்திக்க வெகு முக்கியமான ஒருவர் வந்து இரு தினங்களாகக் காத்திருக்கிறார். அவரை அரண்மனைக்கு அழைத்துவர இயலாது. எனவே இன்று மாலை அழகர் ஆலயத்துக்கு வந்தால் அவரைச் சந்திக்கலாம். அவசியம் வாருங்கள். தனித்தே வாருங்கள்— முகுந்தன்” என்றது ஓலை.

தன் வாழ்வைக் குறித்து எடுத்த தீர்மானத்தைக் குலைக்க, பெரும் அஸ்திரமொன்று காத்துக் கிடப்பதை அறியாத பராந்தகன், அன்று மாலை புரவியொன்றில் ஏறி அழகர் ஆலயத்தை நோக்கிச் சென்றான்.





## 25

# அழகர் சித்தம்

**வை**கைக் கரையின் அந்த மாலைப் பொழுது மனத்தை மயக்கிக் கொண்டிருந்தது. அத்தனை வேகமில்லாவிட்டாலும், சுழித்துச் சுழித்து அன்னநடை நடந்த வைகையின் வெள்ளம், இடையிடையே எழுந்து நின்ற மணல்மேடுகளைச் சுற்றிச் சுற்றி இனம் புரியாத மகிழ்ச்சியில் 'க்ளுக், க்ளுக்'சென்று நகைத்தபடி சென்று கொண்டிருந்தது. கரையோர மரங்களுக்குத் திரும்ப வேண்டிய கிளிகளும் மைனாக்களும், அந்த மணல் திட்டுக்களில் அமர்ந்து 'கீச் கீச்'சென்று எதையோ விவாதித்துக் கொண்டிருந்தன. கரையோர மரங்களுக்குச் சென்று சேர்ந்துவிட்ட பட்சிகள், வெள்ளம் மெல்ல உயருவதைக் கண்டு, மணல் திட்டுக்களிலிருந்த கிளிகளையும், மைனாக்களையும் வந்து விடுமாறு பெரிதாகக் குரல் கொடுத்தன.



புரவியிலிருந்து இறங்கி கண்ணெதிரே விரிந்த காட்சிகளை ரசித்துக் கொண்டிருந்த பராந்தகனின் நினைவு அரிசிலாற்றங்கரைக்குப் பறந்தது. "அங்கும் இதேமாதிரியான பட்சிகளின் கூச்சல் ஓயாமல் ஒலிக்கும். இத்தனை அகல மில்லாவிட்டாலும் அசிரிலாறு இன்னும் வேகமும் சுழல் களுமாக ஓடும். மரக்கூட்டங்களும் வயல்வெளியும் இன்னும் பசுமையை விரித்து வைத்திருக்கும். அரிசிலாற்றிலிருந்து இந்த வைகைக் கரைக்கு நான் வந்து சேர்வதற்குள் வாழ்வில் எத்தனை மாற்றங்கள்!"– பராந்தகனின் எண்ண ஓட்டத் தைப் பக்கவாட்டிலிருந்து ஒலித்த குரல் பட்டென்று அறுத்தது.

"அக்கரைக்குச் செல்ல வேண்டுமா பிரபு? படகு செலுத்த வேண்டுமா?"

திரும்பிய பராந்தகனின் எதிரே ஒரு முதிய மனிதர், வெகு எளிய உடையில் நின்றிருந்தார். படகு ஒன்றும் சற்றுத் தள்ளி நீரில் ஆடியபடி நின்றிருந்தது.

"முதியவரே, நான் அழகர் ஆலயத்துக்குச் செல்ல வேண்டும். வழி எதுவென்று கூறுங்கள்" என்றான் பராந்தகன்.

"வாருங்கள். நேர் அக்கரையில் இறங்கி, இடதுபுறம் செல்லும் பாதையில் சென்றால், அழகர் ஆலயத்தை அடையலாம்" என்றார் அந்த முதிய படகோட்டி.

படகில் ஏறிய பராந்தகனைத் தொடர்ந்து, புரவியும் அனாயாசமாகத் தாவி படகுக்கு வந்து நட்ட நடுவில் நின்றது. வைகையில் படகுப் பயணம் அதற்குப் பழகிய ஒன்றுதான் என்பது புரிந்தது பராந்தகனுக்கு.

படகு நகர்ந்ததும் பராந்தகன் கேட்டான்: "ஐயா, எனக்கு முன்பாக யாரும் ஆலயத்துக்குச் சென்றார்களா?"

"ஆம் பிரபு. நம் இளவரசியார் இரு நாழிகைகளுக்கு முன் சென்றார்" என்றார் படகோட்டி.

பராந்தகனின் சித்தத்தில் குழப்பம் எழுந்தது 'முகுந்தன் கூறியபடி இரு தினங்களாகத் தனக்காகக் காத்திருப்பவரைப் பற்றி இளவரசிக்கு ஏதும் தெரிந்திருக்குமோ? ஒருவேளை ஆலயத்தில் என்னைத் தனிமையில் சந்தித்து நேரிடையாக ஏதும் கேட்கக் காத்திருப்பாளோ?' என்று எண்ணியவனுக்கு, எப்படியும் தன் தீர்மானத்தின் உறுதி அன்று சோதிக்கப்படப் போகிறது என்பது புரிந்தது.

கரையை அடைந்து படகோட்டிக்கு பொற்காசுகளை அளித்து நன்றி கூறிய பராந்தகன், இடதுபுறம் அடர்ந்த மரங்களினூடே சென்ற பாதையில் புரவியைச் செலுத்தினான். அரைக் காத தூரம் சென்றதும், 'நறுந்தேன் வார் புனல் சூழ் தண்மாலிருஞ்சோலை'யின் உயர்ந்த கோபுரமும், 'நியாயமான எந்த அபிலாஷையையும், திட்டத்தையும் நிறைவேற்றித் தர நம்பிக்கை ஒளியைத் தர நானிருக்கிறேன். சஞ்சலப்படாதே' என்று திட்டவட்டமாக அறிவித்து திடமாக நின்று எரிந்த உச்சித் தீபமும் அவன் சித்தத்துக்கு வேண்டிய தெளிவை அளித்தன.

கோபுர வாயிலில் பாண்டிய வீரர் நால்வர் நிற்க, அழகிய சிறு பல்லக்கு ஒன்றும் ஓர் ஓரமாக வைக்கப்பட்டிருந்தது. துவஜஸ்தம்பத்தை வணங்கி உள்ளே நுழைந்தவனுக்குச் சந்நிதியில் இளவரசியும் பணிப்பெண்களும் நிற்பது புலப்பட்டது. கணீரென்ற குரலில் பட்டர் இசைத்த நாமாவளியும், பாசுரங்களும், நடப்பவை அனைத்தும் அவன் சித்தப்படிதான் என்பதைத் தெளிய வைத்ததால், வரவேற்ற பணிப்பெண்களையும், ஓரக்கண்ணால் நோக்கிய இளவரசியையும் விடுத்து, உள்ளே வெகு கம்பீரமாக நின்ற கள்ளழகர் மீது சலனமற்ற விழிகளைப் பதித்தபடி, சந்நிதியை நெருங்கினான் பராந்தகன்.



'உயர்ந்தது' என்ற சொல்லுக்கு ஒரு கம்பீரமான பொருளை அளித்த அந்த நெடியோனின் தோற்றம், சங்கமும் சக்கரமும், இடையில் தரித்த வாளும், குறுவாளும், ஆயுதபாணியாய்த் தெரிந்து, 'மனிதன் சித்தத்தைச் சூழ்ந்திருக்கும் மாய வலைகளை அறுக்க இத்தனையும் தேவைப்படுகின்றன' என்று அறிவித்தது. மாலிருஞ்சோலை மாலவனின் முகத்தில் வழிந்த வாத்ஸல்யமும், முறுவலுமே பராந்தகனின் சித்தத்தைத் தெளிய வைக்கப் போதுமானவையாக இருந்தன. பட்டர் அளித்த தீர்த்தத்தையும், திருத்துழாயையும் பெற்றுக் கொண்டவன், வெளியே இருந்த மண்டபத்தில் வந்து காத்து நின்றான். மண்டபத்தில் எரிந்த பந்தங்களும், சரவிளக்குகளும் மேற்கூரையிலிருந்த சித்திரங்களையும், மண்டபத் தூண்களிலிருந்த சிற்பங்களையும் தெளிவாகக் காட்டின. மலைப்பகுதியிலிருந்து வீசிய காற்று, அவன் உள்ளத்தைப் போல உடலையும் குளிர வைக்க முயன்றது.

சற்று நேரத்தில் பணிப்பெண்கள் வெளியேறி மண்டபத்தின் வாசலில் காத்து நிற்க, 'ஜல் ஜல்'லென்ற பரல்களின் ஒலி கட்டியம் கூறி, இளவரசி நெருங்குவதை உணர்த்தியது. அவன் எதிரே வந்து நின்ற இளவரசியின் முகத்தை நாணமும் ஆவலும் அசல் குமுதமலராகவே சிவக்க அடித்திருந்தாலும், விழிகளில் ஜொலித்த உறுதி, அன்று விஷயத்தை ஒரு முடிவுக்குக் கொண்டு வந்துவிட வேண்டும் என்ற தீர்மானத்திலிருப்பதைப் புலப்படுத்தியது.

பந்தங்களும், சரவிளக்குகளும், இளவரசியின் ஒரு பக்கக் கன்னத்தில் பாய்ச்சிய ஒளியும், சுருண்டு இறங்கி

காற்றில் அசைந்து, இலேசாக வருடிய குழற்கற்றையும், கவிழ்ந்த சிறு குடை போல் கற்கள் பதிக்கப்பட்டு ஊசலாடிய காதணியும், அவன் சித்தத்தில் சலனத்தை ஏற்படுத்த முயன்றன. நீரோட்டத்தால் சிவந்து இலேசாகத் துடித்த இதழ்கள் ஏதோ சொல்லத் துடிப்பதை அறிவித்தன. சங்குக் கழுத்தில் புரண்டு அவனை நோக்கி அசைந்தபடி கிடந்த முத்துச்சரம், 'உன் உறுதி எத்தனை தூரம் என்று பார்த்து விடுகிறேன்' என்று நகைத்தது. விழிகளை உயர்த்தி அவள் விழிகளுடன் கலந்த பராந்தகன்,

"இளவரசியார் தகுந்த துணையும், காவலுமின்றி இந்த முன்னிரவு நேரத்தில் இத்தனை தூரம் வந்திருப்பது சரியல்ல" என்றான் மெல்ல.

இளவரசியின் பதில் திடமாக, தெளிவாக வந்தது, "தகுந்த துணையை நாடித்தான் வந்தேன்" என்று.

அவள் வந்த நோக்கத்தையும், உள்ளக் கிடக்கையையும் தெளிவாகப் புலப்படுத்திய வார்த்தைகளைக் கேட்ட பராந்தகன், "இளவரசி, உங்கள் மனம் புரிகிறது. ஆனால்... இது சாத்தியமல்ல" என்றான் தீர்க்கமான குரலில்.

பராந்தகனிடம் தயக்கத்தையும், இருவருக்கிடையே இருந்த தாரதம்மியத்தைப் பற்றிய பதிலையும் எதிர்பார்த்து வந்திருந்த இளவரசிக்கு, அவன் குரலில் தொனித்த உறுதி, இன்னும் வேறு ஏதோ காரணமிருப்பதைப் புரிய வைத்தது. நிமிர்ந்து நன்றாக அவனை ஏறெடுத்தவள்,

"ஏன் சாத்தியமில்லை?" என்றாள்.

"நான்..." பராந்தகன் இலேசாக இழுத்தான்.

"மன்னர் இதை ஏற்பது பற்றித் தயங்குகிறீர்களா? அது பற்றிய தயக்கம் வேண்டாம். மன்னர் ஏற்றுக் கொண்டு



விட்டார். நாளை முதல் நீங்கள் வெறும் விவசாயி என்பதையோ, சாதாரண வீரர் என்பதையோ கூற இயலாது."

"ஏன்?"

"நாளை அரசவை கூட்டப்பட்டு உங்களுக்குப் படைத் தலைமையில் ஒரு பதவியும், அந்தஸ்தும் அளிக்கப்படப் போகின்றன. உரிய மாளிகையும், பொருள்களும், காவலர் களும் தயாராகிவிட்டன. பட்டயமும் எழுதப்பட்டு அரசவையில் அறிவிக்கப்படும். அதே சபையில் நமது..."

பராந்தகனின் கரம் உயர்ந்து அவளைத் தேக்கியது.

"சிக்கல் அங்குதான் இருக்கிறது இளவரசி."

"இதில் என்ன சிக்கல்? மன்னர் என் மனத்தை அறிந்த பின், உங்கள் படைத்தலைவர் விக்கிரமவரையருடனும், அநிருத்தருடனும், மற்ற பிரதானிகளுடனும் கலந்து செய்யப் பட்ட ஏற்பாடு இது வீரரே."

"ஆனால் இளவரசி, என்னையும், நான் இங்கு வந்த நோக்கத்தையும் முதலில் புரிந்து கொள்ளுங்கள். நான் விக்கிரமவரையருடன் பாண்டிய நாட்டுக்கு வந்தது பதவிக் காகவோ, அந்தஸ்துக்காகவோ, பாண்டிய இளவரசியை மணந்து கொள்ளவோ அல்ல. மன்னருக்கு நாளை அரசவையில் இப்படியேதும் அறிவிக்கும் உத்தேசமிருக்கும் பட்சத்தில், முன்னதாகவே கூறி தடுத்துவிடுங்கள். அரசவையில் அறிவித்து, அங்கேயே நான் மறுத்துக் கூறும் சங்கடமான நிலையைத் தவிர்த்துவிடுங்கள்."

இளவரசியின் திகைப்பு அவள் முகத்தில் தெளிவாகப் புலப்பட்டது. "ஏன் மறுக்க வேண்டும்?" என்றாள் திகைப்புடன்.

"இளவரசி, இந்தப் பதவியும், பட்டயமும் என்னைப் பாண்டிய நாட்டு மன்னனுடன் கட்டிப் போட்டுவிடும். நான் இங்கு வந்தது என் சோழ மண்ணுக்கு உதவி கோரி. சோழ நாட்டு மக்கள் ராஷ்டிரகூடரிடமிருந்து விடுதலை பெற்று நிம்மதியான வாழ்வு பெற. அந்தப் பணி நிறைவேறிய பின் நான் வேறு எங்கும் ஒருகணம் கூடத் தங்க மாட்டேன். பதவியையும், அந்தஸ்தையும், ஏன், எனது இந்த வாளையும் கூட வீசியெறிந்துவிட்டு மீண்டும் என் வண்டாழஞ்சேரிக்குத் திரும்பி விடுவேன். மண்ணை நம்பி உழைத்து வாழும் அந்த எளிய வாழ்வில் பெறும் நிம்மதியை, எந்த அரச போகமும், பதவியும் தராது. இரு அரண்மனைகளையும், மன்னர் களையும் நேரில் கண்டபின் இந்த உண்மையைத் தெளிவாகவே புரிந்துகொண்டேன் இளவரசி" என்றான் பராந்தகன் திடமான குரலில்.

அவன் உறுதியைக் கவனித்த இளவரசி சற்று நேரம் மௌனமாக நின்றாள்.

"ஆக, இவற்றை மனத்தில் வைத்துக் கொண்டுதான் தயங்கினீர்களா?"

"ஆம், இளவரசி. ஆனால் இதுவரை எந்தச் சலனமு மின்றி நாட்டின் விடுதலை ஒன்றையே எண்ணியிருந்த என் மனத்தில் உங்களால் சலனம் ஏற்பட்டதும், என் மனத்தில் நீங்கள் ஓர் இடத்தைப் பிடித்து அமர்ந்துவிட்டதும் உண்மைதான். வண்டாழஞ்சேரியின் வயல்வெளியிலும், சேற்றிலும், வரப்பிலும், காற்றிலும் என் உயிர் கலந்திருக் கிறது. மன்னர் மகளான உங்களை, எந்தச் சுகபோகங் களுமற்ற எளிய வாழ்க்கைக்கு இழுத்து வருவது அநீதி. மன்னர் எந்த வசதிகளுமற்ற வாழ்வை மகளுக்கு அளிக்கச் சம்மதிக்க மாட்டார். ஒரு தந்தையின் கடமையும் அதுதான். எனவேதான் இது சாத்தியமல்ல என்றேன்."



இளவரசியின் விழிகள் பராந்தகனை வெறித்தன. பின் அவள் விழிகள் பராந்தகனைக் கடந்து, நேர் பின்னால் நின்ற கள்ளழகரின் மீது பதிந்து நின்றன சில கணங்கள். அவள் குமுதவிழிகளில் எழுந்த கேள்விக்கு அவர் பதிலளித்திருக்க வேண்டும். மீண்டும் பராந்தகனை நோக்கிய இளவரசியின் முகத்தில் தெளிவு புலப்படத் தொடங்கியது.

நன்றாக ஏறெடுத்து அவனை நோக்கியவள், "வீரரே, உங்கள் நோக்கம் ஈடேறும் நாள் அதிக தூரத்தில் இல்லை. ஏறக்குறைய அனைத்து ஏற்பாடுகளும் முடிந்துவிட்டன. சோழநாடு மட்டுமல்ல, தமிழகம் முழுவதுமே ராஷ்டிர கூடரிடமிருந்து விடுதலை பெறும். அதுவரை உங்கள் நிழலாக நானிருப்பேன். நீங்கள் வண்டாழஞ்சேரிக்குத் திரும்பும்போது உங்கள் துணையாக நான் வருவேன். வாழ்வை மகிழ்வோடு பகிர்ந்து கொள்வேன். மன்னரும் மறுக்க மாட்டார். ஏனெனில், அவர் எனக்காக நிர்ணயிக்கும் வாழ்வை விட, உயர்ந்த வாழ்வும், அந்தஸ்தும் சோழ நாட்டில் எனக்குக் கிடைக்கும்."

பராந்தகன் முகத்தில் வியப்பு படர்ந்தது.

"சோழ நாட்டில், வண்டாழஞ்சேரியில் எனக்குப் பதவியோ, பெரும் வசதிகளோ, உயரிய அந்தஸ்தோ கிடையாதே இளவரசி" என்றான் பராந்தகன்.

இளவரசியின் இதழ்களிலிருந்த குறுநகை இன்னும் மலர்ந்தது. அடுத்து அவள் கூறிய விளக்கம் பராந்தகனை மட்டுமல்ல, மண்டபத்தின் மூலையில் வேற்று மனிதர் ஒருவருடன் அரையிருளில் பதுங்கி நின்ற முகுந்தனையும், உடன் ராஜரீக உடையுடன் கம்பீரமாக நின்ற அந்த மனிதரையும்கூட அசர அடித்தது.



26

## உறவு என்பது...

'நாமொன்று நினைத்தால் தெய்வமொன்று நினைக்கும் என்பார்கள். ஒன்றை நினைத்து நாம் செயல்படும்போது, தெய்வம் குறுக்கிட்டு அதை மாற்றினால், மகிழ்வோடும் நம்பிக்கையோடும் அதை ஏற்பதுதான் முறை. ஏனென்றால், நாம் நினைப்பது தவறாகவும் கூடும். தெய்வம் நினைப்பது தவறாக ஆகாது. நம்மீது கொண்ட கருணையால்தான் நம் நினைப்பில் குறுக்கிட்டு தெய்வம் அதை நல்வழிக்கு மாற்றியிருக்கிறது'– தந்தை கருணாகரர் அடிக்கடி கூறும் இந்த வார்த்தைகளை அன்று நினைத்துக் கொண்டான் பராந்தகன். தனது வாழ்வைத் தீர்மானிப்பதும் அந்த தெய்வம்தான் என்ற உணர்வும் ஏற்பட்டது, இளவரசியின் விளக்கத்தைக் கேட்டபின்பு.

"வண்டாழஞ்சேரியில் எனக்கு பதவியோ, பெரும் வசதிகளோ, உயரிய அந்தஸ்தோ கிடையாது இளவரசி"



என்ற பராந்தகனை நோக்கிய இளவரசியின் முறுவல் விரிந்து, இளநகையாக மலர்ந்து அவனைச் சொக்க வைத்தது.

"வீரரே, ஒன்றைச் சிந்தித்துப் பாருங்கள். இதுவரை நீங்கள் பாண்டிய நாட்டுக்குச் செய்திருக்கும் சேவைகளுக்காக மன்னர், பதவியும், அந்தஸ்தையும், தம் மகளையும் கூட அளிக்க எண்ணுகிறார். சோழ நாட்டை ராஷ்டிரகூடரிடமிருந்து விடுவித்து படைத்தலைவர் விக்கிரமவரையர் பொறுப்பில் ஒப்படைக்கவும், செங்கட் சோழரின் இளவல்கள் வளர்ந்து பட்டமேற்கும்வரை பாதுகாக்கவும் உறுதி கூறியிருக்கிறார்."

"சரி, அதனால்?"

"உங்களால் விடுதலை பெறும் சோழ நாட்டு மக்களும் சரி, பொறுப்பேற்கப் போகும் படைத்தலைவரும் சரி, ஏன், பின்னர் பட்டம் சூடப் போகும் சோழ இளவலும்கூட, உங்களுக்கு எத்தகைய மதிப்பையும் மரியாதையையும் அளிப்பார்கள்? உங்கள் வார்த்தை அவர்களுக்கு வேதமாக அல்லவா இருக்கும்? சோழ இளவலையும், படைத்தலைவரையும் விட, உங்கள் செல்வாக்கு அல்லவா மக்களிடம் உயர்ந்திருக்கும். என் யூகம் உண்மையென்றால் பல்லவ மன்னரும் உங்கள் வாழ்வு வளம் பெற ஏற்பாடுகள் செய்து கொண்டிருக்கிறார். உங்கள் விருப்பத்தை நிறைவேற்ற மூன்று மன்னர்களுமே தயாராக இருப்பார்கள். அத்தகைய நிலையில் வாழ்வு அமைபவருக்கோ, உங்களுடன் துணையாக வரப்போகும் எனக்கோ சோழ நாட்டில் என்ன குறைவிருக்கப் போகிறது?"

அவள் வாதத்தில் உண்மை நிரம்பிக் கிடப்பதை உணர்ந்தான் பராந்தகன். "நாமொன்று தீர்மானித்து வைத்திருந்தால், தெய்வம் இளவரசி மூலம் எதிரிலிருக்கும்

உண்மையைக் காட்டி நமது தீர்மானத்தை அசைத்து விடுகிறதே" என எண்ணினான் பராந்தகன்.

இளவரசி தொடர்ந்தாள்: "இன்னும் என்ன சிந்தனை வேண்டியிருக்கிறது வீரரே? மன்னரிடம் நாளைய ஏற்பாடு களை மாற்றும்படி நான் சென்று கூறி விடுகிறேன். உங்கள் நோக்கம் ஈடேறியதும், உங்களுடன் சோழ நாட்டுக்கு வரவும் சித்தமாக இருக்கிறேன். சம்மதம்தானே?" மென்மையாக, ஆனால் உறுதியான குரலில் ஒலித்தது அவள் கேள்வி.

"இளவரசி..." இழுத்தான் பராந்தகன்.

"இன்னும் என்ன இளவரசி? அந்தப் பட்டத்தையும், அதற்குரியவற்றையும், அதோ அந்த அழகரிடம் அளித்து விடுங்கள்."

"உத்தரவு" என்று தலைவணங்கிய பராந்தகனைப் பார்த்து இன்பப் புன்முறுவலைக் கூட்டிய குமுதவல்லி, "நீங்கள் இங்கு வந்தது என்னைச் சந்திக்க அல்ல என்பது எனக்குத் தெரியும். உங்கள் வாழ்வின் போக்கை மாற்ற வேறொருவரும் முயற்சி செய்கிறார் என்பதும் தெரியும். ஆனால் உங்கள் முடிவு என்னவாக இருக்கும் என்பதைப் புரிந்து கொண்டேன். நான் இங்கிருக்கும்வரை அவர் வர மாட்டார். நான் செல்கிறேன்" என்றவள், வாயிலை நோக்கி நடந்தாள். அவளது துள்ளல் நடை 'ஜல்ஜல்' என்று இனிய சங்கீதமாக ஒலித்தது.

அரண்மனை வாசத்தையும், அதுவரை அனுபவித்த அரச போகத்தையும், அதிகாரத்தையும், தன் அன்புக்காக உதறித் தள்ளிவிட்டு, தன்னுடன் வரத் துணிந்துவிட்ட இளவரசியை வியப்புடன் பார்த்தபடி நின்றான் பராந்தகன். தன்னுடன் வாதாடி, தன் லட்சியத்துக்கு எந்தப் பாதகமு மின்றி, தன்னையும் ஒப்புக் கொள்ள வைத்துவிட்ட அவள் திறமை அவனை பிரமிக்க வைத்திருந்தது.



அவன் சிந்தனையைக் கலைத்து பின்புறமிருந்து திடமான காலடியோசை ஒலித்தது. சட்டென்று திரும்பினான் பராந்தகன்.

அவன் எதிரே ஆஜானுபாகுவான மனிதர் ஒருவர் நின்றார். ராஜரீகமான அவரது உடைகளும், பாதம் வரை நீண்ட கனத்த வாளும், விசாலமான பெரு விழிகளும், அவரை இதற்கு முன் எங்கோ பார்த்திருப்பதான நினைவு வந்தது பராந்தகனுக்கு.

காஞ்சியிலிருந்து தப்பி இளவரசியையும், கார்குழலி யையும் மீட்டு வந்தபோது, எல்லைப்புறத்துச் சத்திரத்தில் பல்லவ மன்னன் வந்ததும், உடன் வந்த பல்லவ உபதலைவர் களில் இந்த மனிதரும் இருந்ததும் பராந்தகனின் நினைவில் வந்தன.

அதே சமயத்தில் மண்டபத்தின் மறுபுறத்திலிருந்து முகுந்தன் வேகமாக வந்து அருகில் நின்றான். பராந்தகனை வணங்கியவன், "மன்னிக்க வேண்டும் பராந்தகரே, தாமதமாகிவிட்டது. இவர் ராஜாதித்தர். பல்லவர் படைத் தலைவர். உங்களைக் காண இரு தினங்களாகக் காத்திருக் கிறார்" என்றான்.

அரை மனத்துடனேயே அவரை வணங்கிய பராந்தகன், "இரு தினங்களாகக் காத்திருப்பானேன்? அரண்மனைக்கே நேரே வந்திருக்கலாமே" என்றான் சந்தேகம் தொனித்த குரலில்.

"இவர் பல்லவ மன்னரிடமிருந்து முக்கியச் செய்தி யொன்றுடன் வந்திருக்கிறார்..."– இழுத்தான் முகுந்தன்.

"பல்லவ மன்னரிடமிருந்து செய்தியெனில் அரண்மனைக்கு வர என்ன தடை? பகைவரே ஆனாலும் தனித்து வரும் தூதுவருக்கோ, படைத்தலைவருக்கோ எந்த

அபாயமும் நேரிட பாண்டிய மன்னர் அனுமதிக்கமாட்டார் என்பது நீ அறியாததா முகுந்தா?"

ராஜாதித்தர் பதிலளித்தார்: "நான் கொண்டுவந்த செய்தி மன்னருக்கல்ல பராந்தகா, உனக்கு. ஆனால் மன்னரிடம் தெரிவிக்க வேறொரு திட்டமிருக்கிறது. அவர் அதை ஏற்பாரா என்பது சந்தேகம். எனவேதான் முதலில் உன்னைச் சந்தித்து–"

அவர் வார்த்தைகளை முடிக்குமுன் பராந்தகன் சற்று உஷ்ணமாகவே குறுக்கிட்டான். "பாண்டிய மன்னர் ஏற்கத் தயங்கும் ஒரு திட்டத்தை நான் ஏற்பேன் என்று எப்படி எதிர்பார்த்தீர்கள்?"

"பராந்தகா, சற்றுப் பொறுமையாகக் கேள்," என்ற ராஜாதித்தர் சற்று நிதானித்தார். "பராந்தகா, நான் கூறப் போவதை சற்றுப் பொறுமையாகக் கேள். முழுவதும் கேட்ட பின்பு எந்த முடிவையும் நீ எடுக்கலாம். நான் உன்னை ஒருமையில் அழைப்பது குறித்து தவறாக எண்ணாதே. நீ யார் என்பதை உனக்கு உணர்த்தவும், உன் உரிமைகளை நீ மீண்டும் பெற அழைக்கவுமே நான் வந்தேன். நான் வயதில் மூத்தவன். ஒரு வகையில் உனக்கு உறவினனும்கூட."

அதுவரையில் ஓரளவுக்குப் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்த பராந்தகனின் முகம், அந்த மனிதர் இறுதியாகக் கூறிய வார்த்தைகளைக் கேட்டபின் திடீரெனச் சிவக்கத் தொடங்கியது. விழிகளிலும் உக்கிரமும் சினமும் கொப்புளித்தன. அடுத்து ஒலித்த அவனது வார்த்தைகளில் அதுவரை கண்டறியாத வேகம் தொனித்தது.

"ராஜாதித்தரே, எனக்கும் என் குடும்பத்தவருக்கும் இதுவரை உறவினர் என்று எவருமில்லை. அப்படிக் கூறிக் கொண்டு இப்பொழுது வருபவர்கள் கொண்டு வரும்



செய்திகளையோ, திட்டங்களையோ நான் கேட்டுக் கொள்ளவும் சித்தமாக இல்லை. நான் செல்கிறேன்" என்று படபடத்தவன் திரும்பி, "முகுந்தா, இவரை அனுப்பிவிட்டு விரைவில் அரண்மனைக்கு வந்து சேர்," என்று விறுவிறு வென்று வாயிலை நோக்கி நடந்தான்.

யாரையும் அதுவரை எடுத்தெறிந்து பராந்தகன் பேசியதைக் கண்டறியாத முகுந்தனும், ராஜாதித்தரும் திகைத்தனர். அபாயமான சந்தர்ப்பங்களிலும், சிக்கலும் குழப்பமுமான நேரங்களிலும்கூட நிதானமென்பதை இழக்காமல் பராந்தகன் செயல்படுவதை பலமுறை கண்டிருந்த முகுந்தனுக்கு, தாம் உறவினன் என்று ராஜாதித்தர் கூறியதும், நிதானமிழந்து அவன் சினத்தின் வசப்பட்டது வியப்பாகவே இருந்தது.

ராஜாதித்தரின் குரல் உயர்ந்து ஒலித்தது. "நில், பராந்தகா, சற்று நில். உறவினர்கள் உனக்குத் தேவை யில்லையா?"

சற்றே நடையைத் தளர்த்திய பராந்தகனின் பதில் திடமாக ஒலித்தது, "தேவையில்லை" என்று.

"ஏன் தேவையில்லை?"

"அதை உம்மிடம் விளக்க வேண்டிய அவசியமில்லை." – நடந்தபடியே பதிலளித்த பராந்தகன், திரும்பியும் பாராமல் மண்டபத்தை விட்டு வெளியே வந்தான்.

ராஜாதித்தர் தொடர்ந்து வேகமாக வந்தார்.

"என்னிடம் கூற வேண்டாம் பராந்தகா. பல்லவ மன்னருக்கு நான்தான் பதிலளிக்க வேண்டும். அவருக்காக வேனும் உன் பதிலைக் கூறிவிட்டுப் போ."

பராந்தகன் திரும்பினான். அவன் விழிகள் தீர்க்கமாக அவரை ஒருமுறை அலசின, "ராஜாதித்தரே, உறவு என்பது

துன்பத்தில் துணை நிற்பது, தோள் கொடுப்பது, ஆதரவற்ற வேளையில் உதவ இயலாவிட்டாலும் மனதார ஆறுதல் சொல்வது, அக்கறை காட்டுவது. துன்பம் நேரும் வேளையில் ஒதுங்கி நின்றுவிட்டு, நிலை உயர்ந்த பிறகு தேடி வருவது உறவு அல்ல. உமது உறவோ, திட்டங்களோ, அளிக்கும் உரிமைகளோ எனக்குத் தேவையில்லை. முடிந்தால் பாண்டிய மன்னரிடம் கூறி ஏற்றுக்கொள்ள வேண்டுங்கள்."

"உண்மையைப் புரிந்து கொள்ளாமல் ஆத்திரம் கொள்ளாதே பராந்தகா. நீ யார் என்பதை அறிந்துகொள் முதலில்."

"நான் சோழ நாட்டின் வண்டாழஞ்சேரியைச் சேர்ந்த ஒரு விவசாயி. சோழர் படைத்தலைவரால் தற்போது வீரனாயிருக்கிறேன், அவ்வளவே."

"நீ விவசாயியுமல்ல, உன் தந்தை கருணாகரன் ஏழையுமல்ல."

"என் தந்தை ஏழையல்ல என்றால், வேண்டுமென்றே எமது குடும்பத்தை ஏழ்மையில் வளர்த்து தவிக்கவிட்டார் என்கிறீரா?" பராந்தகன் விழிகள் ஜொலித்தன.

"அப்படிக் கூறவில்லை பராந்தகா. உன் தந்தை கருணாகரன் வைராக்கியமும், வெகு மன அழுத்தமும் கொண்டவன். உன்னிடம் முழு உண்மைகளைக் கூறாமல் மறைத்தே வளர்த்திருக்கிறான்."

பராந்தகன் பதிலேதும் கூறவில்லை. அவன் விழிகளில் உக்கிரம் ஏறிக் கொண்டிருந்தது.

ராஜாதித்தர் தொடர்ந்தார்: "எங்கே உன் குடும்பத் தைப் பற்றிய உண்மைகளை நீ அறிந்து கொண்டால்,



இல்லத்திலிருந்து வெளியேறி வேறு வாழ்க்கையைத் தேடிச் சென்றுவிடுவாயோ என்ற அச்சம் அவனுக்கு. அதனால்தான் உண்மைகளை உன்னிடம் கூறாமல் மறைத்திருக்கிறான்.''

“நிறுத்தும் ராஜாதித்தரே.”– பராந்தகனின் விழிகள் உக்ரோதயங்களாக ஜொலித்தன. இமைப்பதில் பாதிக் கணத்தில் அவன் கச்சையிலிருந்த வாள் வலது கரத்தில் மின்னியது. ராஜாதித்தரை நோக்கி உறுதியாக அது நீளவும் செய்தது.

“என் தந்தையைப் பற்றித் தவறாக இனி ஒரு வார்த்தை உம்மிடமிருந்து வந்தாலும், எனது பதில் இந்த வாளைக் கொண்டுதான் வரும்... எச்சரிக்கை.”– அனல் துண்டங்களை விட உஷ்ணத்துடன் உதிர்ந்தன அவன் வார்த்தைகள்.





## 27

## தாமதமேன் ஸ்வாமி...?

கண்ணிமைக்கும் நேரத்தில் வெளிப்பட்டு ராஜாதித்தரை நோக்கி நீண்டு ஆடாமல் அசையாமல் உறுதியாக நிலைத்து நின்ற அந்தப் பெரும் வாளுடன், அந்த வாளை விட அதிகமாக, இரு உக்ரோதயங்களைப் போல் பளபளத்த விழிகளுடன் கால்களை உறுதியாகப் பதித்து, தாக்குதலுக்குத் தயாராக நின்ற பராந்தகனைக் கண்ட முகுந்தன் மனத்தில் சட்டென்று திகில் பரவியது. பல்லவர் உபதலைவருக்கு ஏதும் நேர்ந்துவிடப் போகிறதேயென்று பதறியவன், "பராந்தகரே" என்று குரல் கொடுத்தான்.

முகுந்தனின் நிலைக்கு நேர்மாறாக இருந்தது ராஜாதித்தரின் நிலை. இருந்த இடத்தைவிட்டு அசையவோ, தமது வாளை தற்காப்புக்காக எடுக்கவோ கூட அவர் முயல வில்லை. எதிரில் வாளை நீட்டியபடி நின்ற பராந்தகனை சலனமற்ற விழிகளால் நோக்கியவர் முகத்தில், முறுவல்



ஒன்று படர்ந்தது. சற்று நேரத்தில் அது விரிந்து சிறு நகைப்பாகவும் ஒலித்தது.

"ஏன் நகைக்கிறீர்?" பராந்தகனின் கேள்வி வெகு உக்கிரமாக ஒலித்தது.

"நன்று பராந்தகா, நன்று. இந்த வாள் பதிலளிக்கப் போவது எனக்கல்ல, உனக்கு. அந்த வாளை நன்றாகப் பார். உன் இல்லத்தில்தானே அது பல்லாண்டுகளாக இருந்தது? அதில் பொறிக்கப்பட்டிருப்பது பல்லவரின் பழைமையான ரிஷப இலச்சினை. ஒரு சோழநாட்டு விவசாயியின் இல்லத்தில் பல்லவ வம்சத்து அரச முத்திரை பொறிக்கப்பட்ட வாள், ஆண்டாண்டு காலமாக ஏன் பாதுகாத்து வைக்கப்பட வேண்டும்? உன் தந்தை என்ன விளக்கம் அளித்திருக்கிறார் இதைப் பற்றி?"— திடமாக ஒலித்தது ராஜாதித்தரின் கேள்வி.

பராந்தகன் சற்றுத் திகைத்தான்.

ராஜாதித்தர் தொடர்ந்தார்: "இது சாதாரண வாளல்ல பராந்தகா, சாளுக்கிய மாமன்னன் புலிகேசியை அழித்து, அவன் தலைநகர் வாதாபியை எரித்த வாள். கங்க, மாளவ மன்னர்களை மண்டியிட வைத்த வாள்; மானவன்மனுக்குத் துணையாகச் சென்று ஈழத்தில் வெற்றிக் கொடி பறக்க விட்ட வாள். மாமல்லர் நரசிம்மவர்மரின் உடைவாள்— உன் பாட்டனாரின் அன்னை இந்த வாளுக்கு மாலையிட்டு அவரை மணந்து கொண்டார்."

தான் கூறியவை பராந்தகன் சித்தத்தில் உறைய சற்று அவகாசமளித்த ராஜாதித்தர் தொடர்ந்தார்: "பல்லவ நந்தி வர்மனுக்கு நீ மகன் முறை மட்டுமல்ல, ராஷ்டிரகூடர் கிளை வம்சத்தில் வந்த அவன் மகன் நந்திவர்மனைவிட பல்லவ அரியணைக்கு அதிக உரிமையுடையவன். உன்னிடம்

அரியணையை ஒப்படைத்து விட்டு ஆலயப் பணிகளில் ஈடுபடச் சித்தமாக இருக்கிறான் நந்திவர்மன். உன் தந்தை கருணாகரனும்கூட இளமையில் சோழர் படை உப தலைவனாக செங்கட்சோழ மன்னரிடம் சேவை செய்தவன் தான். உன்னை ஈன்ற தாய் மறைந்த பின்பே போர்த் தொழிலை வெறுத்து, அமைதியான வாழ்வுக்குத் திரும்பினான். நந்திவர்மன் உன் தந்தையின் வம்சத்தைக் குறித்து விசாரிக்க முயன்றபோதும், எந்தச் செய்தியும் எட்டாமல் தடுத்துவிட்டான். மீண்டும் உன்னைப் பற்றி விஷ்ணுசித்தர் மூலமாகத்தான் அறிந்தோம்."

பராந்தகன் அடித்து வைத்த சிலையாக நின்றான்.

"தந்திவர்மனைவிட பல்லவ அரியணைக்கு அதிக உரிமையுள்ள உன்னை அமர்த்தினால் தமிழ் மக்களும், மன்னர்களும் ஏற்றுக் கொள்ளுவார்கள். மக்களுக்கும் அமைதியான வாழ்வு கிட்டும். உன் பதில் என்ன வென்பதைக் கேட்டு வரவே என்னை அனுப்பினான் நந்திவர்மன்."

பராந்தகன் சற்று நேரம் மௌனமாக நின்றான். அடுத்து ஒலித்த அவன் குரல் தெளிவாகவும், திடமாகவும் ஒலித்தது. "ராஜாதித்தரே, என்னைப் பற்றிய உண்மைகளை உணர்த்தியதற்கு நன்றி. என்னையும் என் சகோதரியையும், எங்கள் தாயுமின்றி வளர்த்து ஆளாக்க தந்தை என்ன பாடுபட்டார் என்பதை நான் அறிவேன். கல்வி புகட்டப் பொருளின்றி, ஒரு வேளை உணவுமின்றி நாங்கள் வாடிய போது, எந்த உறவுகளும் வந்து உதவவில்லை. என் தந்தை வெறுத்த உறவுகள் எனக்கும் தேவையில்லை. இந்த உறவினால் கிட்டுவது அரியணையானாலும், அதுவும் எனக்குத் தேவையில்லை. என் முன்னோர் சோழ நாட்டுக்காக வாளேந்தியதாகச் சொன்னீர்கள். சோழ



நாட்டை விடுத்து நான் மட்டும் வந்து விடுவேனென்று எப்படி எதிர்பார்க்கிறார் பல்லவ மன்னர்? வாழ்ந்தாலும் வீழ்ந்தாலும் என் வாழ்வு சோழ மண்ணில்தான் அமையும். எனவே நீங்கள் இப்படியே திரும்பலாம்."

ராஜாதித்தரின் முகம் களையிழந்து கிடந்தது. தம்மிடமிருந்த ஓலைக் குழலை நீட்டியவர், "பராந்தகா, உன் விருப்பப்படியே செய். இந்த ஓலையைப் பாண்டிய மன்னரிடம் அளித்துவிடு. இதை ஏற்பதும், மறுப்பதும் அவர் விருப்பம். நான் வருகிறேன்" என்றவர் திரும்பி மண்டபத்தின் படிகளில் இறங்கி, பின்புறத்து மரக்கூட்டங்களை நோக்கித் தளர்ந்த நடையுடன் சென்றார்.

முகுந்தன் திக்பிரமை பிடித்து நின்றிருந்தான். உறவினரது அழைப்பையும், அரியணையையும், அரச போகத்தையும்கூட ஒருவன் இப்படி வெறுத்து ஒதுக்க இயலக்கூடும் என்பதை நேரிடையாகக் கண்டவனது முகத்தில் பிரமிப்பும், திகைப்பும் வழிந்தன.

"பராந்தகரே, அரச போகத்தையும், அதை அளிக்கக் கூடிய உறவுகளையும் புறக்கணிக்கும் மனிதரை இப்போது தான் காண்கிறேன்" என்றான் முகுந்தன்.

"முகுந்தா, இந்தத் திமிர் உறவுகள் என்றுமே அபாய மானவை. அவை தரும் சுகங்கள் அதைவிட அபாய மானவை. ராஷ்டிரகூடரை விரட்டிய பின்னர் மகாராணியாலும், மகன் தந்திவர்மனாலும் ஏற்படக்கூடிய சிக்கல்களைத் தவிர்க்கவே, அரியணையை எனக்களிப்பதாகக் கூறுகிறார் பல்லவ மன்னர். அரச போகமும், அரியணைப் போட்டிகளும், அமைதியற்ற வாழ்வைத்தான் தரும். வயலிலும் சேற்றிலும் உழைத்து வாழும் எளிய வாழ்க்கை தரும் நிம்மதியை, எந்த அரியணையும் தர இயலாது."

"உண்மைதான் பராந்தகரே, முக்காலும் உண்மை"— முகுந்தனின் குரலில் பூரணமாக ஏற்றுக் கொண்டா னென்பது தொனித்தது. இருவரும் திரும்பி அழகரை வணங்கிவிட்டு, வைகைக் கரையை நோக்கி நடந்தனர்.

சற்று நேரம் கழித்து முகுந்தன் கேட்டான்: "பராந்தகரே, பல்லவ மன்னரின் நோக்கம் ராஷ்டிரகூடரை விரட்டுவது. நமக்கும் குறிக்கோள் அதுதான். அவர் கூறியனுப்பிய திட்டத்தை, அது தமிழகத்துக்கு நன்மை பயப்பதாயிருந்தால் ஏற்பது தவறல்லவே?"

"அப்படியென்ன திட்டம் முகுந்தா?"

"நான் இத்தனை தினங்களாக எங்கிருந்தேனென்று நினைக்கிறீர்கள்?"

"எங்கிருந்தாய்?"

"ராஷ்டிரகூடத்தில்."

"என்ன?"— பராந்தகனின் முகத்தில் வியப்பு தெரிந்தது.

"ஆம். பராந்தகரே, மகாராஜா கோவிந்தரின் ஆட்சி அங்கு மிகக் கொடுமையான முறையில் நடக்கிறது. கங்க மன்னனும் மாளவத்து வத்ஸராஜனும், கோவிந்தரை மதுவிலும் மங்கையரிலும் மூழ்கவிட்டு, தாங்கள் ஆட்சி செய்கிறார்கள். மக்களுக்கு ஒரே ஆதரவு மகாராஜாவின் ஒன்றுவிட்ட சகோதரர் துருவன்தான். இரு முறை புரட்சி செய்த மக்கள் கொடூரமாக அடக்கப்பட்டார்கள். மக்கள் துருவனை அரியணையில் அமர்த்துவதே தீர்வு என்று நம்புகிறார்கள். துருவன் பல்லவ மன்னரிடம் உதவி நாடி வரவிருக்கிறார். இதைப் பயன்படுத்தி பல்லவ மன்னர் காஞ்சி மண்டலத்திலிருந்தும், தமிழகத்திலிருந்தும் ராஷ்டிர கூடரை விரட்ட எண்ணுகிறார்."



பராந்தகனின் சித்தம் அதிதுரிதமாக ஓடத் துவங்கியது. அவன் விழிகள் வைகையின் பிரவாகத்தை வெறித்தன. தன் மகன் அரியணையில் அமர்வதை விட, தமிழ் மக்களின் அமைதியை விரும்பும் பல்லவ நந்திவர்மனின் கம்பீர முகம் அவன் கண்முன் எழுந்து நின்றது. "உனக்கும் எனக்கும் குறிக்கோள் ஒன்றுதான் பராந்தகா, புரியவில்லையா உனக்கு?" என்றது. துணிவுடன் நிறைவேற்ற வேண்டிய திட்டமொன்றும் அவன் சித்தத்தில் உருவெடுத்தது. அதை நிறைவேற்ற பல்லவ மன்னனைச் சந்திக்க வேண்டியது அவசியமென்பதும் புரிந்தது அவனுக்கு.

ஆனால் காஞ்சியில் பராந்தகனது பதிலையும், அடுத்து அவன் செய்யக் கூடியதையும் முன்னதாகவே கணித்துவிட்ட நந்திவர்மன், வெகு நிதானமாக, திடமாக தனது திட்டத்தை நிறைவேற்றத் தொடங்கியிருந்தான். காஞ்சி அரண்மனை மட்டுமின்றி ராஷ்டிரகூடமும், பாண்டிய நாடும் கூட அவன் நாடகத்துக்கு அரங்கங்களாகிக் கொண்டிருந்தன.

எந்தக் காலத்திலும் தர்மத்துக்கும் அதர்மத்துக்குமான போராட்டங்கள் தொடர்ந்துகொண்டுதானிருக்கின்றன. சில சமயங்களில் மனிதருக்கு மனிதர் மாறும் நியாயங்களுக்கும் தர்மத்துக்கும் கூட போராட்டங்கள் நடக்கின்றன. தர்மத் துக்கும் அதர்மத்துக்கும் நடக்கும் போராட்டங்கள் காவியங் களாகி விடுகின்றன. தர்மத்துக்கும் நியாயங்களுக்கும் நடக்கும் போராட்டங்கள், வெறும் கதைகளாகி விடுகின்றன.

மகாராணி ரேவாதேவியைப் பொறுத்தவரை, தன் மகன் நந்திவர்மன் அரியணையில் அமரும் போது, அவனை எதிர்க்கக்கூடிய பலம் வாய்ந்த மன்னர் எவரும் தமிழகத்தில் இருக்கக் கூடாது என்று எண்ணுவது நியாயம்தானென்று எண்ணினாள். அதற்காகவே எந்த உபாயத்தையும்

"உண்மைதான் பராந்தகரே, முக்காலும் உண்மை"— முகுந்தனின் குரலில் பூரணமாக ஏற்றுக் கொண்டா னென்பது தொனித்தது. இருவரும் திரும்பி அழகரை வணங்கிவிட்டு, வைகைக் கரையை நோக்கி நடந்தனர்.

சற்று நேரம் கழித்து முகுந்தன் கேட்டான்: "பராந்தகரே, பல்லவ மன்னரின் நோக்கம் ராஷ்டிரகூடரை விரட்டுவது. நமக்கும் குறிக்கோள் அதுதான். அவர் கூறியனுப்பிய திட்டத்தை, அது தமிழகத்துக்கு நன்மை பயப்பதாயிருந்தால் ஏற்பது தவறல்லவே?"

"அப்படியென்ன திட்டம் முகுந்தா?"

"நான் இத்தனை தினங்களாக எங்கிருந்தேனென்று நினைக்கிறீர்கள்?"

"எங்கிருந்தாய்?"

"ராஷ்டிரகூடத்தில்."

"என்ன?"— பராந்தகனின் முகத்தில் வியப்பு தெரிந்தது.

"ஆம். பராந்தகரே, மகாராஜா கோவிந்தரின் ஆட்சி அங்கு மிகக் கொடுமையான முறையில் நடக்கிறது. கங்க மன்னனும் மாளவத்து வத்ஸராஜனும், கோவிந்தரை மதுவிலும் மங்கையரிலும் மூழ்கவிட்டு, தாங்கள் ஆட்சி செய்கிறார்கள். மக்களுக்கு ஒரே ஆதரவு மகாராஜாவின் ஒன்றுவிட்ட சகோதரர் துருவன்தான். இரு முறை புரட்சி செய்த மக்கள் கொடூரமாக அடக்கப்பட்டார்கள். மக்கள் துருவனை அரியணையில் அமர்த்துவதே தீர்வு என்று நம்புகிறார்கள். துருவன் பல்லவ மன்னரிடம் உதவி நாடி வரவிருக்கிறார். இதைப் பயன்படுத்தி பல்லவ மன்னர் காஞ்சி மண்டலத்திலிருந்தும், தமிழகத்திலிருந்தும் ராஷ்டிர கூடரை விரட்ட எண்ணுகிறார்."



பராந்தகனின் சித்தம் அதிதுரிதமாக ஓடத் துவங்கியது. அவன் விழிகள் வைகையின் பிரவாகத்தை வெறித்தன. தன் மகன் அரியணையில் அமர்வதை விட, தமிழ் மக்களின் அமைதியை விரும்பும் பல்லவ நந்திவர்மனின் கம்பீர முகம் அவன் கண்முன் எழுந்து நின்றது. "உனக்கும் எனக்கும் குறிக்கோள் ஒன்றுதான் பராந்தகா, புரியவில்லையா உனக்கு?" என்றது. துணிவுடன் நிறைவேற்ற வேண்டிய திட்டமொன்றும் அவன் சித்தத்தில் உருவெடுத்தது. அதை நிறைவேற்ற பல்லவ மன்னனைச் சந்திக்க வேண்டியது அவசியமென்பதும் புரிந்தது அவனுக்கு.

ஆனால் காஞ்சியில் பராந்தகனது பதிலையும், அடுத்து அவன் செய்யக் கூடியதையும் முன்னதாகவே கணித்துவிட்ட நந்திவர்மன், வெகு நிதானமாக, திடமாக தனது திட்டத்தை நிறைவேற்றத் தொடங்கியிருந்தான். காஞ்சி அரண்மனை மட்டுமின்றி ராஷ்டிரகூடமும், பாண்டிய நாடும் கூட அவன் நாடகத்துக்கு அரங்கங்களாகிக் கொண்டிருந்தன.

**எ**ந்தக் காலத்திலும் தர்மத்துக்கும் அதர்மத்துக்குமான போராட்டங்கள் தொடர்ந்துகொண்டுதானிருக்கின்றன. சில சமயங்களில் மனிதருக்கு மனிதர் மாறும் நியாயங்களுக்கும் தர்மத்துக்கும் கூட போராட்டங்கள் நடக்கின்றன. தர்மத் துக்கும் அதர்மத்துக்கும் நடக்கும் போராட்டங்கள் காவியங் களாகி விடுகின்றன. தர்மத்துக்கும் நியாயங்களுக்கும் நடக்கும் போராட்டங்கள், வெறும் கதைகளாகி விடுகின்றன.

மகாராணி ரேவாதேவியைப் பொறுத்தவரை, தன் மகன் நந்திவர்மன் அரியணையில் அமரும் போது, அவனை எதிர்க்கக்கூடிய பலம் வாய்ந்த மன்னர் எவரும் தமிழகத்தில் இருக்கக் கூடாது என்று எண்ணுவது நியாயம்தானென்று எண்ணினாள். அதற்காகவே எந்த உபாயத்தையும்

தந்திரத்தையும் கையாண்டதையும், அந்தப் பணியில் ராஜ மாதுலரும், ராகுலனும் உயிரை இழந்ததும்கூட நியாய மென்றே எண்ணினாள்.

ஆனால் எந்த ஆதாரம், எந்த அடிப்படையான பலம் தனக்குப் பெரும் உதவியாக இருக்குமென்று நம்பினாளோ, அந்த மகாராஜா கோவிந்தரின் நிலையே ராஷ்டிரகூடத்தில் ஆட்டம் கண்டு கொண்டிருப்பதையும், அதற்குக் காரணம் தன்னுடைய ஒன்றுவிட்ட சகோதரன் துருவனே என்பதையும் அறிந்தபின்பு, அவள் சித்தம் அமைதியின்றித் தவிக்கத் தொடங்கியது. துருவன் பல்லவ மன்னரிடம் உதவிகோரி வரவிருப்பதை அறிந்தபின்பு, ராகுலனும், ராஜமாதுலரும் இல்லாத குறை பெரிதாகவே தெரிந்தது மகாராணிக்கு.

தமிழகத்து மன்னர்களைப் போலவே பல்லவ நந்தி வர்மனும் 'மக்களுக்காகத்தான் மன்னன்' என்ற கொள்கையில் திடமான நம்பிக்கை வைத்திருப்பதையும், துருவனும் அதே குருட்டுக் கொள்கையில் நம்பிக்கை கொண்டவன் என்பதையும் உணர்ந்திருந்தவள், அடுத்து என்ன செய்வதென்ற சிந்தனையில் மூழ்கிக் கிடந்தாள்.

நீண்ட சிந்தனைக்குப்பின் துருவனைத் தடுக்க முயல்வது என்றும், மீறினால், காஞ்சியிலேயே அவனைச் சிறை செய்து, மகாராஜா கோவிந்தருக்குத் தெரிவிப்பது என்றும் தீர்மானித்தாள்.

இரண்டாவது தினம் காலையில் காஞ்சிக் கோட்டை யின் வடக்கு வாயில் முரசுகள் ஒரே சீராக ஒலித்து, அரச குடும்பத்து விருந்தினர் வருகையை அறிவித்தன. அந்த ஒலி மகாராணி ரேவாதேவியின் இதயத்துடிப்பை உயர்த்தி, சித்தத்தில் கலக்கத்தை ஏற்படுத்தின.



அந்த முரசுகளின் ஒலி மகாராணியின் செவிகளில் மட்டும் விழவில்லை. வைகுந்தன் ஆலயத்தில் சிற்ப, சித்திரப் பணிகளைக் கவனித்தபடி நின்றிருந்த நந்திவர்மனின் செவிகளிலும் விழுந்தது. அவன் முகத்தில் ஒரு சந்துஷ்டியும் முறுவலும் மலர்ந்தன.

அவனது பெருவிழிகள் உயர்ந்து முகுந்த விமானத்தை நோக்கின. "வைகுந்தா, உன் திருவுள்ளம் இரங்க இத்தனை தாமதமா? என்னைப் பல நாட்கள் காத்திருக்க வைத்து விட்டாய் நீ" என்று வைகுந்தனையே இலேசாகக் கடிந்து கொள்ளவும் செய்தான் நந்திவர்மன்.

விழிகளைக் கீழே தாழ்த்தியவன், சற்றுத் தள்ளி நின்ற பல்லவ உபதலைவனை அழைத்து மளமளவென உத்தரவுகள் பிறப்பித்துவிட்டு, வாயிலை நோக்கி நடந்து, தனது புரவியிலேறி அரண்மனையை நோக்கி விரைந்தான்.

நந்திவர்மன் அரண்மனையை அடையவும், அழகிய ரதம் ஒன்று வீரர்கள் சூழ வாயிலில் வந்து நிற்கவும் சரியாக இருந்தது.





(28)

## நந்திவர்மன் நாடகம்

**கா**ஞ்சிக் கோட்டைக்குள் அந்த அழகிய ரதம் நுழைந்த பின்பு, விபரமறியாத பல ராஷ்டிரகூட வீரர்கள் வாழ்த்துக் கோஷங்களுடன் ரதத்தைத் தொடர்ந்து வந்து அரண்மனை வாயிலில் கூட்டமாக நின்றார்கள். ரதத்துடன் வந்த வீரர்களுடன் அளவளாவவும் தொடங்கினார்கள்.

தீட்சண்யமான விழிகளுடனும், ஏறக்குறைய நந்தி வர்மனைப் போலவே உயர்ந்த, திடமான உடலமைப்புடனும் இறங்கிய துருவனை, வேகமாகப் புரவியில் வந்து எதிர் கொண்ட நந்திவர்மன் அணைத்துக் கொண்டான். நந்தி வர்மனை வணங்கி வாழ்த்தும் பெற்றுக் கொண்ட துருவன், மன்னனுடன் இணைந்தே அரண்மனைக்குள் நுழைந்தான். இருவரும் ஒன்றாக வருவதைக் கவனித்த மகாராணியின் சித்தத்தில் உஷ்ணம் ஏறினாலும், முகம் வரவேற்கும் பாவனையில் மலர்ந்தே கிடந்தது.



"வரவேண்டும் துருவா, இத்தனைக் காலம் கழித்து என் நினைவு இப்போதுதான் வந்ததா உனக்கு?" என்று வரவேற்கவும் செய்தாள்.

"நினைவு என்றுமிருக்கிறது சகோதரி. ஆனால் மக்கள் பணி எதிரிலிருக்கும் போது, மற்றவற்றைக் கவனிக்க காலமேது?"– துருவனின் பதில் நிதானமாகவே வந்தது.

"சரி, நீ சென்று நீராடிவிட்டு வா. விருந்து தயாராக இருக்கிறது. பிறகு அமர்ந்து நிதானமாகப் பேசலாம்" என்றவள், யவன மங்கையரை அழைத்து துருவனை அழைத்துச் செல்ல உத்தரவிட்டாள். பின்னர் வாயிலை அடைந்தவள் தன் உபதலைவர்களை அழைத்து, துருவ னுடன் வந்த வீரர்களை 'தக்கபடி' கவனிக்கவும் உத்தர விட்டாள்.

துருவனுக்கு ஏற்பாடு செய்திருந்த விருந்தும், உபசரிப்பு களும் மிகப் பலமாகவே இருந்தன. அந்த அதீத உபசாரத்தின் பின்னால் அபாயம் மறைந்திருப்பதை உணர்ந்து கொண்ட நந்திவர்மனின் விஷமப் புன்முறுவல் மகாராணியை சங்கடப்படுத்தியது. விருந்து முடிந்து மேன்மாடத்தில் வந்து அமர்ந்த துருவனை நோக்கிய மகாராணி, "இப்போது சொல் துருவா, ராஷ்டிரகூடத்தில் மன்னர் நலமா? உன் தாய் நலமா?" என்றாள்.

தான் சொந்த சகோதரனல்ல, கிளை வம்சத்தில் வந்தவன்தானென்பதையும் மறைமுகமாகக் குறிப்பிடும் அந்தக் கேள்வியின் பொருள், நன்றாகவே புரிந்தது துருவனுக்கு. அவன் பதில் மிகத் தெளிவாகவே வந்தது. "மக்களைத் தவிர மற்றவர்கள் அனைவருமே நலமாகவே இருக்கிறார்கள் சகோதரி."

நந்திவர்மன் குறுக்கிட்டான்: "மக்கள் நலத்துக்கு என்ன குறை துருவா? மக்களுக்காகத்தானே மன்னர் கோவிந்தர்

அரியணையில் அமர்ந்திருக்கிறார்?"– போலியான வியப்பு ஒலிக்க நந்திவர்மன் கேட்ட கேள்வி, அடுத்து நேரவிருந்த விபரீதத்துக்கு அடியெடுத்துக் கொடுத்தது.

ரேவாதேவியின் குரலில் உஷ்ணம் தெரிந்தது. "துருவா, எந்த ஆட்சியிலும் குறை கூறுபவர்கள் இருக்கத்தான் செய்வார்கள். அதைப் பெரிதாக எடுத்துக்கொள்ளக் கூடாது."

துருவன் மன்னனை நோக்கினான். "தாங்களே கூறுங்கள். மன்னனுக்காக மக்களா? அல்லது மக்களுக்காக மன்னனா?"

"இதில் சந்தேகமென்ன? மக்களுக்காகத்தான் மன்னன். எக்காலத்திலும் தமிழகத்தில் அதுதான் அரச தர்மம். ராஷ்டிரகூடத்து தர்மங்களைப் பற்றி நான் அதிகம் அறிந்திருக்கவில்லை துருவா" நந்திவர்மனின் பதில் தெளிவாக வந்தது.

"ராஷ்டிரகூடத்தில் மன்னர் கோவிந்தரின் நிலையும், கொள்கையும் வேறாக இருக்கிறது மன்னவா."– துருவனின் குரலில் வருத்தம் ஒலித்தது.

"துருவவர்மா..."– மகாராணியின் குரல் உயர்ந்து ஒலித்தது.

அந்த நாடகம் விரைவில் ஒரு முடிவுக்குக் கொண்டு வரப்படும் என்பதை அறிவித்த மகாராணியின் குரலிலிருந்த உஷ்ணத்தை கவனித்த நந்திவர்மனின் விஷமப் புன்முறுவல் இன்னும் விரிந்தது.

துருவன் தொடர்ந்தான்: "உண்மையைத்தான் கூறுகிறேன் சகோதரி. கோவிந்தரின் நினைவு சதா மதுவிலும், மங்கையர் நினைவிலும் உல்லாசத்திலேயே அமிழ்ந்து கிடக்கிறது. மந்திரி மண்டலத்தாரும் கங்க நாட்டு சிவமாறனாலும், மாளவத்து வத்ஸராஜனாலும் செயலிழந்து



கிடக்கிறார்கள். கோவிந்தரை இந்த நிலையில் வைத்திருப்பதே அவர்கள்தாம்."

"போதும், நிறுத்து."– மகாராணி சீறினாள்.

"கேட்பதற்கே மிகச் சங்கடமாக இருக்கிறதே. ஏன் துருவா, பேரமைச்சர் அறிவிலும் வயதிலும் மூத்தவராயிற்றே. அவருமா எடுத்துக் கூறவில்லை?"– நந்திவர்மன் வெகு அக்கறையோடு விசாரித்தான்.

"எடுத்துக் கூறுவதென்ன, இடித்தே கூறிவிட்டார் பலமுறை. பயனேதுமில்லை மன்னவா."

"படைத்தலைவர்களும், உபதலைவர்களும் என்னதான் செய்கிறார்கள். பாதுகாப்புக்கு அபாயமாயிற்றே. அவர்களுமா கோவிந்தருக்கு எடுத்துரைக்கவில்லை?"– முக்கியக் கட்டத்துக்கு இழுத்தான் மன்னன்.

"படைத்தலைவர்கள் இரு பிரிவாகப் பிரிந்து கிடக்கிறார்கள் மன்னவா. ஒரு பிரிவு கங்கர்களுடனும், மாளவத்து வீரர்களுடனும் சேர்ந்து, மக்களை அதிகாரம் செய்கிறார்கள். வரிகளை வசூலிப்பது பகற்கொள்ளையாகவே நடக்கிறது. மக்கள் அனுபவிக்கும் கொடுமைகளுக்கு எல்லையே இல்லாமற் போய்விட்டது. மற்றொரு பிரிவு மக்களைக் காக்கவும், கொடுமைகளிலிருந்து மீட்கவும் முயல்கிறார்கள். அவர்களை புரட்சிக்காரர்கள், கலகக்காரர்கள் என்றும் கோவிந்தரிடம் சித்திரிக்கப்படுகிறார்கள்."

"சரி, துருவா. நீ என்ன செய்யப் போவதாக உத்தேசித்திருக்கிறாய்? இளவல் என்ற முறையில் உனக்கும் இதில் பொறுப்புகள் உள்ளனவே?"– நந்திவர்மன் விசாரிப்பில் சுவாரசியம் தெரிந்தது.

"என் முடிவு சற்றுக் கடுமையானதுதான். அதை சகோதரி ஏற்றுக் கொள்வதும் சற்றுக் கடினம்தான். மக்கள் நலன் கருதி நான் இதைச் செய்யத்தான் வேண்டும்."

"மக்கள் நலன் என்றால் செய்யத்தான் வேண்டும். ஆனால் என்ன செய்யப் போகிறாய்?" ஆவலுடன் வந்தது நந்திவர்மனது குரல்.

"அரியணையிலிருந்து மன்னரை அகற்றிவிட்டு, என்னை அமர்த்தவேண்டுமென்று மக்கள் விரும்புகிறார்கள். இருமுறை இதற்காக புரட்சியும் செய்து விட்டார்கள். மக்கள் விருப்பம்தான் என் விருப்பமும். அதற்காக உங்களிடம் உதவி கோரித்தான் வந்திருக்கிறேன்."

"நீ உதவி கோரும்போது நான் செய்ய வேண்டியது கடமையாயிற்றே துருவா. ஆனால் இது உங்கள் அரச குடும்பத்தின் விவகாரம். மகாராணியின் அனுமதியின்றி நான் என்ன செய்ய முடியும்? என்ன சொல்கிறாய் தேவி? பாவம், துருவன் உதவி என்று வந்து நிற்கிறான்" நந்திவர்மன் மகாராணியை நோக்கினான்.

ரேவாதேவியின் முகமும் விழிகளும் சிவந்து ஜொலித்தன. "துருவா, எத்தனை துணிச்சல் உனக்கு? என் எதிரிலேயே மகாராஜா கோவிந்தரை பழித்துக் கூறிவிட்டு, அவரை அகற்றக் கூறுமளவிற்கு நீ வளர்த்து விட்டாயா? யார் கூறிய துர்போதனையிது? இதற்கு என்னிடமே உதவி கோர எப்படி மனம் வந்தது? பாச உணர்ச்சியே அற்று விட்டதா உனக்கு?"

"அதுதானே, எப்படி மனம் வந்தது துருவா? அவர் உனக்கும் மூத்த சகோதரர் அல்லவா?"– நந்திவர்மன் குரலில் வியப்பு தொனித்தது.

"மன்னர்களின் உறவுகளைவிட, மக்கள் நலன்தான் பெரிது என்பதைத் தங்களிடம்தான் கற்றேன் மன்னவா. மக்கள் படும் இன்னல்களை நேரில் கண்டால்தான் சகோதரிக்கு உண்மை நிலை புரியும். மக்களுக்குக்



காவலனாக இருக்க வேண்டியவரே, காலனாக மாறுவதும், மாற்றானும் அதில் பங்கு கொள்வதும் மிகக் கொடுமை. இதே நிலை நீடித்தால் ராஷ்டிரகூடத்தை கங்கனும், மாளவனும் பங்கு போட்டுப் பிரித்துக் கொண்டு விடுவார்கள். கோவிந்தரும் அவர்களாலேயே அழிக்கப் படுவார்."– துருவனின் பதில் தெளிவாக வந்தது.

"துருவா, எனக்குப் புரிந்துவிட்டது."– மகாராணியின் குரலில் எகத்தாளம் ஒலித்தது.

"என்ன புரிந்துவிட்டது சகோதரி?"

"ஆமாம். என்ன புரிந்தது தேவி? எப்படியோ உனக்கு எல்லாம் புரிந்துவிடுகிறது."– நந்திவர்மன் பாராட்டினான்.

"துருவா, உனக்கு உன் மாமன் விஷ்ணுவர்த்தனனின் போதனையும் தூண்டுதலும், அரியணை மீது மோகம் கொள்ள வைத்துவிட்டன. அதற்கு மக்கள் மீது பழியைப் போடுகிறாய்."

"ஆகா, அப்படியும் இருக்கலாம்." நந்திவர்மன் மகாராணியை ஆமோதித்தான்.

"சகோதரி, இது அபாண்டம், விஷ்ணுவர்த்தனர் மாளவத்துக்கு அடங்கிய சிற்றரசரல்லவா? வத்ஸராஜனுக்கு அடங்கியவர் ராஷ்டிரகூடத்துக்கு எதிராக நடக்க இயலுமா?"

"அதுவும் சரிதான், நடக்க இயலாது. வேறு யார்தான் தூண்டியிருக்க முடியும் தேவி?"– சந்தேகம் கேட்டான் நந்திவர்மன்.

மகாராணியின் குரல் உயர்ந்து ஒலித்தது: "உன் எண்ணத்தை அறிவேன் துருவா. கங்கர் அரியணையில் உன் தாய்வழி உறவினன் துக்கமாறனை அமர்த்த விரும்பினாய். கோவிந்தர் மறுத்துவிட்டார். அதற்குப் பழி தீர்க்கவே

மக்களை நீயே தூண்டிவிட்டு கோவிந்தரை அகற்றத் திட்டமிடுகிறாய்."

துருவன் அவளை வெறித்தான். "சகோதரி, உன்னிடமும் உன்னைச் சேர்ந்த உறவினரிடமும் உள்ள குற்றங்களை ஒப்புக்கொள்ளும் குணம் உனக்கு என்றுமே இருந்ததில்லை. தர்மத்தையும், மக்கள் நலனையுமே பிரதானமாக எண்ணும் பல்லவ மன்னரின் அண்மைகூட உன்னை மாற்ற இயலவில்லை. நான் எடுத்துக் கூறியா உணரப் போகிறாய்? என் வழியிலேயே இதைத் தீர்த்துக் கொள்கிறேன்," என்றான் துருவன் வறண்ட குரலில்.

ரேவாதேவியின் முகத்தில் விபரீதச் சாயையொன்று படர்ந்தது. "உன் எண்ணம் ஈடேறப் போவதில்லை துருவா" என்றாள்.

"ஏன் ஈடேறப் போவதில்லை?"

"நீ இங்கிருந்து ராஷ்டிரகூடத்துக்குத் திரும்பப் போவதில்லை."

"என்ன கூறுகிறாய் சகோதரி?"

"உன்னைச் சிறை செய்து இங்கேயே வைத்துவிடப் போகிறேன். நான் விரும்பாத செயல்களில் நீ ஈடுபடுவதைப் பார்த்துக் கொண்டிருக்க என்னால் இயலாது."

துருவன் மன்னனை நோக்கினான். "பல்லவ மன்னரும் இதை அனுமதிக்கப் போகிறாரா?" என்றான் அதே வறண்ட குரலில்.

"துருவா, மகாராணி யாரைச் சிறை வைப்பதானாலும் என் அனுமதியைக் கேட்பதில்லை. சிறை வைத்தபின் தப்புவதும் மிகக் கடினம். வருத்தமாகத்தானிருக்கிறது. ஆனால் இது உடன்பிறந்தவர்களுக்குள் நடைபெறும் போராட்டம். நான் யார் இதில் தலையிட? நீங்கள்



இருவருமே என் அன்புக்குப் பாத்திரமானவர்கள். நீ கேட்பதையும், மகாராணி கேட்பதையும் மறுக்காமல் நிறைவேற்றித் தருவது என் கடமை" என்றான் நந்திவர்மன் மாறாத முறுவலுடன்.

ரேவாதேவியின் கரங்கள் இருமுறை ஒலித்தன. வெளியே தயாராக நின்றிருந்த கோட்டைத் தலைவன், இரு வீரர்களுடன் நுழைந்தான்.

"கோட்டைத் தலைவரே, ராஷ்டிரகூட இளவலை விருந்தினர் மாளிகையில் காவலில் வைத்துவிடுங்கள். உடன் வந்திருக்கும் வீரர்களையும் சிறையில் அடைத்துவிடுங்கள்" என்றவள் மன்னனை நோக்கி, "மன்னவா, விருந்தினர் மாளிகையில் உள்ள உங்கள் பல்லவ வீரர்களை வெளியேற உத்தரவிடுங்கள். இந்தத் துருவன் அவர்களை எளிதில் ஏமாற்றி விடக்கூடும். என் வீரர்களை அங்கு நியமித்துக் கொள்கிறேன்" என்றாள் வேகத்துடன்.

"உத்தரவு தேவி."– நந்திவர்மன் சிறு நகைப்புடன் அவள் உத்தரவை ஏற்றான்.

**ம**காராணியின் உத்தரவின்படி விருந்தினர் மாளிகையில் அதீத கட்டுக் காவலுடன் சிறை வைக்கப்பட்ட துருவனை யாரும் பார்க்கவோ, பேசவோ கூடாதென்றும் உத்தரவிட்டாள்.

உணவளிக்கவும், மற்ற பணிவிடைகளுக்கும் வேறு எவரையும் நம்பாத ரேவாதேவி, தன் அந்தரங்க மெய்க் காவலர்களான இரு யவன மங்கையரையும் துருவனுக்குப் பணிவிடை செய்யவும், கவனித்துக் கொள்ளவும் அனுப்பி வைத்தாள்.



## 29

## ஸாரதி வாக்கு

**‘எ**ந்தச் சூழ்நிலையிலும் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தவும், அபாயம் சூழும்போது உணர்ச்சிகளைக் கட்டுக்குள் கொண்டுவந்து, புத்தியைக் கொண்டு செய்ய வேண்டுபவற்றைத் தீர்மானிப்பவனும் தான் அரசாளத் தகுந்தவன்’ என்று அர்த்தசாஸ்திரம் கூறுவது எத்தனை உண்மையென்பதை நிரூபித்துக் கொண்டிருந்தான் துருவன்.

தன் மக்களை நினைத்து இரக்கத்தையும், மகாராணியின் வார்த்தைகளால் சினத்தையும், நந்திவர்மனிடம் நியாயத்தை எதிர்பார்த்த நிலையும் மனத்தில் கொண்டு வாதாடிக் கொண்டிருந்த துருவன், தான் சிறைப்படப் போவதை உணர்ந்ததும் உணர்வுகளை சட்டென்று ஒரு கட்டுக்குள் கொண்டு வந்துவிட்டானென்பதை அவன் முகத்தில் நிலவிய அசாதாரணமான அமைதியும், மெல்லிய முறுவலும் தெரிவித்தன.



“சகோதரி என் நோக்கத்தை அறிந்து முன்னேற்பாட்டுடன் இருந்திருப்பது புரிகிறது,” என்றவன் இலேசாக நகைக்கவும் செய்தான். அவன் முகத்தில் அதுவரை காணப்பட்ட வேகமும், பார்வையில் தெறித்த ஒளியும் மட்டுப்பட்டு நிதானமும், சகஜ பாவமும் நிலவின.

கோட்டைத் தலைவனுடன் விருந்தினர் மாளிகையை நோக்கி நடந்தபோதும் அதே சகஜபாவத்துடனேயே சென்றான் துருவன். மகாராணி ரேவாதேவியின் மாளிகையிலிருந்து அம்பெறியும் தூரத்திலேயே இருந்த அந்த மாளிகை, பார்வைக்குச் சிறியதாகத் தெரிந்தாலும், பருத்த சிற்பத் தூண்களுடனும், பக்கங்களில் தலைநீட்டிய உப்பரிகைகளுடனும், முகப்பில் களிறுகளைக் கொண்டு இடித்தாலும் தாங்கக் கூடிய வலுவான கதவுகளையும் கொண்டிருந்தது. உட்புறத்துச் சுவர்களிலும் தூண்களிலும் அழகிய சிற்பங்களும், சித்திரங்களும் நிறைந்திருந்தன. வெளிப்புறத்தில் நான்கு பக்கங்களிலும் மகாராணியின் வீரர்கள் காவல் நின்றார்கள்.

மாளிகையின் மேன்மாடத்தை வீரர்களுடன் அடைந்த பின்பு, வாயிலுக்கு வாயில் காவல் நின்ற வீரர்கள் கதவுகளையும், சாளரங்களையும் சோதித்துவிட்டு, வெளியே செல்லக்கூடிய வாயில்களில் நால்வர் காவலுக்கு நின்றனர். உள்ளே நடமாடிக் கொண்டிருந்த பணிப்பெண்களும் வெளியேறி, இரு யவன மங்கையர் மட்டும் நுழைந்தனர். தான் யாருடனும் பேசவோ, தன் வீரர்களுக்குச் செய்தியனுப்பவோ வழியேதுமில்லை என்பது புரிந்தது துருவனுக்கு.

யவன மங்கையர் கொண்டு வந்த கனிவகைகளையும் பாலையும் தொடவும் மறுத்தவனுக்கு அந்த மங்கையரின் உபசரணைகள் வேப்பங்காயாக இருந்தன. ஆனால் அந்த

யவன மங்கையர் அவனை விட்டு அரை நாழிகையும் அகல மறுத்தனர். அவன் கடிந்து கூறிய வார்த்தைகளுக்கு பதிலாக கலகலவென்ற நகைப்பே வந்தது அவர்களிடமிருந்து. அவனை திரும்பத் திரும்ப கனிகளையும் பாலையும் அருந்த சைகையால் வேண்டியவர்கள், அவனது மறுப்பையும், பிடிவாதத்தையும் கண்டு, மஞ்சத்தில் படுத்து உறங்குமாறு வேண்டினர். அவன் மஞ்சத்தில் படுத்ததும், அவன் கால்களை மென்மையாக வருடிக் கொடுத்து உறங்க வைக்க முயற்சி செய்தனர்.

சிந்தனையுடன் வேண்டா வெறுப்புடன் படுத்துக் கிடந்த துருவன், தான் உறங்கிவிட்டதாகத் தெரிந்தால் அந்த யவன மங்கையர் அகன்றுவிடக் கூடும் என்ற எண்ணத்தில் இரு நாழிகை நேரம் விழிகளை மூடிக் கிடந்தான். மீண்டும் அவன் விழிகளைத் திறந்த போதும் அந்த மங்கையர் இரு பக்கங்களிலும் அமர்ந்திருப்பதையும், அவர்களது கோலத்தையும் கண்டவன் சட்டென்று கால்களை மடக்கிக் கொண்டு மஞ்சத்தில் எழுந்து அமர்ந்தான். அவன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன.

"போதும் உங்கள் உபசரணை. வெளியே சென்று தொலையுங்கள் பிசாசுகளா" என்று இரைந்தான்.

பதிலுக்கு அந்த மங்கையர் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு கலகலவென நகைத்தனர் மீண்டும்.

அவர்கள் நகைப்பொலியைத் தொடர்ந்து, அறையின் வாயிலிலிருந்து மற்றொரு நகைப்பும் ஒலித்தது பலமாக. தொடர்ந்து, "ராஷ்டிரகூட இளவலுக்கு உபசரணைகள் பலமாக நடப்பதாகத் தெரிகிறது" என்றபடியே உள்ளே நுழைந்தான் நந்திவர்மன்.

"மன்னருக்கு என் நிலை வேடிக்கையாக இருக்கிறதா?" துருவனின் கேள்வி எரிச்சலுடன் வந்தது.



மஞ்சத்தின் எதிரிலிருந்த இருக்கையில் அமர்ந்த நந்தி வர்மன், யவன மங்கையரை சற்றே விலகியிருக்கும்படி சைகை செய்தான்.

இருக்கையில் திடமாக வந்து அமர்ந்த நந்திவர்மனின் முகத்தில், தான் முதலில் கண்ட அதே மந்தகாசமும், நிதானமும் அப்படியே நிலவிக் கிடப்பதைக் கண்ட துருவன், 'இத்தனை நிதானத்துடன்கூட ஒரு மனிதன் இருக்க முடியுமா? அதிலும் இத்தனை சிக்கல்களும், போரும் எதிரிலிருக்கும்போது' என்று வியந்து கொண்டான். தான் நந்திவர்மனிடமிருந்து கற்றுக் கொள்ள வேண்டியவை நிறைய இருக்கின்றன என்பதும் புரிந்தது அவனுக்கு.

அடுத்து அவன் சித்தத்தில் தானும் மகாராணியும் விவாதித்துக் கொண்டிருந்தபோது மன்னன் கூறியவை நினைவுக்கு வந்தன.

"மன்னவா, நான் சகோதரியுடன் விவாதித்துக் கொண்டிருந்தபோது என்ன கூறினீர்கள்?"– துருவனது குரலில் சற்று நிதானம் தொனித்தது.

"என்ன கூறினேன்?"

"இருவர் பக்கமும் ஆதரவாகப் பேசிப் பேசி கேள்விகள் கேட்டீர்கள்."

"நான்தான் அப்போதே கூறினேனே துருவா. நீங்கள் இருவருமே என் அன்புக்குப் பாத்திரமானவர்கள். ஒருவரை மட்டும் ஆதரிப்பது தவறல்லவா?"

"அதன் பிறகு என்ன கூறினீர்கள்?"

"நீயே சொல் துருவா."

"எங்கள் இருவரது வேண்டுகோளையும் நிறைவேற்றித் தருவது உங்கள் கடமை என்றீர்கள்."

"ஆம். கூறினேன்."

"உங்கள் வாக்கைக் காப்பாற்றுவீர்களா?"

"நந்திவர்மன் இதுவரை வாக்குத் தவறினான் என்ற அபகீர்த்தி கிடையாது துருவா."

"அப்படியானால் என்னை இந்த மாளிகையிலிருந்து வெளியேற்றி காஞ்சிக்கு வெளியே அனுப்பி விடுங்கள் போதும். எனது வேண்டுகோள் இதுதான். நிறைவேற்றித் தருவீர்களா?"

கருங்கல்லில் உளியால் தட்டுவது போலக் கடகடவென நகைத்தான் நந்திவர்மன்.

"ஏன் நகைக்கிறீர்கள் மன்னவா?"

"உன்னை காஞ்சியிலிருந்து வெளியேற்ற ஏற்பாடுகள் செய்து ஐந்து தினங்களாகின்றன. நீதான் தாமதமாக வந்தாய்."— நந்திவர்மனது பதில் பரம நிதானத்துடன் வந்தது.

துருவன் வாயைப் பிளந்தான்.

"துருவா, நீ வெளியேறுவது இருக்கட்டும். வெளியேறியதும் எங்கு செல்லப் போகிறாய்? ராஷ்டிரகூடத்திற்கா, அல்லது வடமேற்கு எல்லையில் நிறுத்தி வைத்துவிட்டு வந்தாயே, அந்த உன் படைப்பிரிவிற்கா?" அதே நிதானத்துடன் வந்தது நந்திவர்மனது கேள்வி.

துருவனது விழிகள் விரிந்தன.

"வடமேற்கு எல்லையில் நான் படைகளை நிறுத்தியிருப்பதை..."

"அறிவேன்."

"இங்கு வந்ததும் சிறைப்படுவேன் என்பதை..."



"அதையும் அறிவேன். அது மட்டுமல்ல..."

"வேறென்ன மன்னவா?"

"நீ நாடி வந்த உதவியைச் செய்ய என் நண்பன் உதய சந்திரனும் படைகளுடன் சித்தமாகக் காத்திருக்கிறான், போதுமா?"

துருவனின் திகைப்பு அடங்க நீண்ட நேரமாயிற்று.

"மன்னவா, இவற்றை எப்படித் தாங்கள்...?"

நந்திவர்மன் மெல்ல நகைத்தான். "துருவா, உன் நிலையை என்னைவிடச் சரியாக வேறு எவரும் புரிந்து கொள்ள முடியாது. ஏன் தெரியுமா?"

"ஏன் மன்னவா?"

"ஏனென்றால் உன் நிலையில்தான் நானும் இருக்கிறேன்."

"விளங்கவில்லை."

"துருவா, ராஷ்டிரகூடத்து மக்களுக்கு கங்கர்களும், மாளவத்து மன்னனும் அன்னியர்கள். அன்னியரிடமிருந்து உன் ராஷ்டிரகூடத்தை மீட்க நீ முயல்கிறாய். அதேபோல் இந்தத் தொண்டை மண்டலமும், மன்னனற்ற சோழநாடும் ராஷ்டிரகூடர்களிடம் சிக்கித் தவிக்கின்றன. சோழ நாடு மன்னனை இழக்க நான் காரணமாகிவிட்டேன். எனவே இரண்டையும் ராஷ்டிரகூடரிடமிருந்து மீட்க நான் முயல்கிறேன். தமிழகத்து மக்கள் தங்களுடன் ஒன்றிவிடும் எந்த அயல்நாட்டவரையும் ஏற்றுக் கொள்வார்கள். ஆனால் அதிகாரத்தையும், ஆதிக்கத்தையும் ஏற்கமாட்டார்கள். மக்களின் எண்ணம்தான் இங்கு மன்னனான என் எண்ணமும். நம் இருவரின் நோக்கமும் அன்னியரை விரட்டுவதுதான்."— நந்திவர்மன் நிதானமாக விளக்கினான்.

"நம் எண்ணங்களை நிறைவேற்ற என்ன செய்யப் போகிறீர்கள்?"

"துருவா, ஒரு குடும்பத்துக்காக ஒருவரையும், ஒரு ஊருக்காக ஒரு குடும்பத்தையும், ஒரு நாட்டுக்காக ஒரு ஊரையும் தியாகம் செய்யலாம்; பலி கொடுப்பது தவறில்லை என்பது அந்தப் பார்த்தனுக்கு ஸாரதி அருளிய வாக்கு."

"உண்மைதான்."

"காஞ்சியிலும், சோழநாட்டிலுமாகச் சேர்த்து பன்னிரண்டாயிரம் ராஷ்டிரகூட வீரர்கள் இருக்கிறார்கள். இவர்களை வெளியேற்றினால் தொண்டை மண்டலமும், சோழநாடும் விடுதலை பெறும். ஆனால் இவர்கள் ராஷ்டிர கூடத்தைச் சென்று சேர்ந்துவிட்டால்..."

"மகாராஜா கோவிந்தரின் கரம் வலுத்துவிடும்."

"ஆம். பிறகு உன் நோக்கம் நிறைவேறுவது கடினமாகி விடும்."

"இதற்கு என்ன செய்வது மன்னவா? முதலில் இவர்களை எப்படி இங்கிருந்து வெளியேற்றுவது? அத்தனை வீரர்களும் ஒட்டுமொத்தமாக வெளியேற என் சகோதரி எப்படி அனுமதிப்பாள்? அவள் உத்தரவு இல்லாமல் எப்படி இவர்கள் வெளியேறச் சம்மதிப்பார்கள்?"

"சம்மதிக்க மாட்டார்கள்தாம்."

"அப்படி தமிழகத்திலிருந்து இவர்கள் வெளியேறினால் நேராக ராஷ்டிரகூடத்தையல்லவா சென்று அடைவார்கள்? பன்னிரண்டாயிரம் வீரர்களைத் தடுத்து நிறுத்துமளவுக்கு என்னிடம் படைபலம் இல்லை மன்னவா. அப்படி இவர்களைத் தடுத்து நிறுத்த நான் முயன்றால், என்



வீரர்களில் பாதிப்பேரையாவது நான் இழக்க நேரிடும். பிறகு ராஷ்டிரகூடத்தில் மகாராஜா கோவிந்தரையும் கங்க, மாளவ வீரர்களையும் எதிர்க்க எனக்குச் சக்தி இருக்காதே."— துருவன் முகத்தில் துடிப்பு தெரிந்தது.

நந்திவர்மன் முகத்தில் முறுவல் விரிந்தது. "துருவா, அதனால்தான் முன்னதாக நான் கூறினேன். ஒரு நாட்டுக்காக ஓர் ஊரையே பலி கொடுப்பதில் தவறில்லையென்று."

"விளங்கவில்லை மன்னவா."

"இவர்களை, இந்தக் காஞ்சி மண்டலத்திலிருந்தும், சோழ மண்ணிலிருந்தும் மகாராணியின் உத்தரவோடு வெளியேற்றப் போகிறேன். வெளியேறியவர்கள் ராஷ்டிர கூடத்தை அடையுமுன்பு, வழியிலேயே பலி கொடுக்கவும் போகிறேன்."

துருவன் முகத்தில் திகைப்பு பரவியது. "எப்படி?"

நந்திவர்மன் முகத்தில் அதே நிதானமும், முறுவலும் படர தன் திட்டத்தை மெல்ல விவரித்தான். அவன் விவரிக்க, விவரிக்க, துருவனின் திகைப்பு உயர்ந்து கொண்டே போனது.





(30)

## பாலுக்கும் காவல்....

"மன்னனுக்குரிய தர்மம் மக்களைக் காப்பது. அந்த தர்மத்தைக் காக்க, தமிழகமும் ராஷ்டிரகூடமும் அன்னியரிட மிருந்து விடுபட, இந்தப் பன்னிரண்டாயிரம் வீரர்களை பலியிடுவதில் தவறேதுமில்லை" என்றும், அதற்கு தர்ம சாஸ்திர சம்மதமும் இருக்கிறதென்றும் கூறிய நந்திவர்மன் தனது திட்டத்தை மெல்ல விவரிக்கத் தொடங்கினான்:

"துருவா, நீ பாண்டியருக்கு அனுப்பிய ஓலைக்கு பதில் வந்து சேர்ந்து விட்டதா?"

விளக்கத்தின் தொடக்கத்தில் துருவனை நோக்கி கேள்வியொன்றையும் வீசினான் நந்திவர்மன்.

துருவனின் முகத்திலிருந்த திகைப்பு இன்னும் உயர்ந்தது.

"நான் பாண்டியருக்கு ஓலையனுப்பியது தங்களுக்கு...?"

"துருவா, இப்போது நீ அனுப்பிய ஓலை மட்டுமல்ல. சில திங்களுக்கு முன்னால் பாண்டிய மன்னரைச் சந்திக்க நீ முயன்றதையும், பின்னர் பாண்டிய ஒற்றர் படைத் தலைவன் முகுந்தனைச் சந்தித்து ஓலையளித்துவிட்டு அவசரமாக ராஷ்டிரகூடத்துக்குத் திரும்ப நேர்ந்ததையும் கூட அறிவேன். ஒன்றை நினைவில் வைத்துக் கொள் துருவா. தன்னைச் சுற்றி என்ன நடக்கிறதென்பதை அறிந்து கொள்ளாத மன்னன் அதிக காலம் அரியணையில் நீடிக்க முடியாது."

"நான் என்ன செய்யவேண்டுமென்பதைக் கூறுங்கள் மன்னா."

"நீ பாண்டியருக்கு எழுதிய ஓலைக்குரிய பதிலை நான் வாங்கி வைத்திருக்கிறேன். நீ இங்கிருந்து வெளியேறியதும் முதலில் சந்திக்கப் போவது பாண்டியரைத்தான். பாண்டியர் படை உனக்கு உதவக் காத்து நிற்கிறது. அவர்களுடன் நீ சேர்ந்து விட்டதை அறிந்தால், மகாராணி உன்னையும், பாண்டியரையும் தாக்கவும், உன்னை மீண்டும் சிறைப் பிடிக்கவும் இங்கிருக்கும் வீரர்களை அனுப்புவாள். மகாராஜா கோவிந்தருக்கும் செய்தியனுப்புவாள். ராஷ்டிர கூடத்திலிருந்தும் உன்னைத் தாக்க படைகள் வரும். இங்கிருந்து முதலில் வரும் ராஷ்டிரகூட வீரர்களை, பாண்டியர் உதவியுடனும், ராஷ்டிரகூடத்திலிருந்து வரும் கோவிந்தரின் வீரர்களை என் நண்பன் உதயசந்திரனின் உதவியுடனும் நீ எதிர்கொள்ளப் போகிறாய்."

"தாங்கள்...?"

"நான் சோழநாட்டில் பிரிந்துகிடக்கும் ராஷ்டிரகூட வீரர்களைத் திரட்டிக் கொண்டு, பாண்டிய மன்னரைச் சந்திக்கச் செல்வேன். பெயரளவிற்கு போர் என்று நடக்கும்.

போர் முடிந்ததும் சோழநாடு பூரணமாக விடுதலை பெற்று விடும். புரிகிறதா?"

துருவனுக்குத் தெளிவாகப் புரிந்தது. "எல்லாம் சரிதான் மன்னா. நான் இதையெல்லாம் நிறைவேற்ற இங்கிருந்து வெளியேற வேண்டுமே" என்றான்.

"உன்னை இங்கிருந்து வெளியேற்றி அழைத்துச் செல்ல, பாண்டியர் படைகளை உன் பாதையில் தயாராகக் கொண்டு வந்து நிறுத்திவிட்டு, தாக்குதல் முறைகளையும் வகுத்துக் கொடுத்துவிட்டு, அவற்றை நிறைவேற்ற பாண்டியர் சார்பாக பராந்தகன் நாளை இரவு வருவான்."

"பராந்தகனா? யார், உக்ரோதயத்தைக் களவாடிச் சென்றதாகக் கூறப்பட்டதே, அவனா? ஒரு கள்வனா என்னை..."

"துருவா!"– நந்திவர்மனின் குரலில் அதுவரை காணாத கடுமை ஒலித்தது. "அறியாமையால் கூறிய உன் வார்த்தைகளைப் பொறுத்தேன் துருவா. இனியொருமுறை பராந்தகனைப் பற்றித் தவறாக நினைக்கவோ, பேசவோ செய்யாதே."

மன்னனின் கடுமைக்குக் காரணம் புரியவில்லை துருவனுக்கு.

"மன்னவா, ராஷ்டிரகூடத்தில் நான் கேள்விப் பட்டதைத்தான் கூறினேன். யாரிந்த பராந்தகன்?" என்றான் குழப்பம் படர்ந்த முகத்துடன்.

சுருக்கமாக, திடமாக வந்தது நந்திவர்மனின் பதில்: "எனக்குப் பின், காஞ்சி அரியணையில் அமர முழு உரிமையுள்ளவன். என் மகன் தந்திவர்மனை விட தமிழக மக்களும், மன்னர்களும் மகிழ்ச்சியோடு ஏற்கக் கூடியவன். முறையில் எனக்கு மூத்த மகனாக வேண்டியவன்."




துருவன் முகத்தில் ஒருகணம் வருத்தமும், தொடர்ந்து இலேசாக சினமும் படர்ந்தது. "அப்படியானால் மன்னவா, பல்லவ வம்சத்தைச் சேர்ந்த ஒரு வீரனை, பாண்டியர் தயவை எதிர்பார்த்து ஏன் நிற்க வைத்திருக்கிறீர்கள்? இங்கே அவனுக்கு உரிய இடத்தை ஏன் அளிக்கவில்லை?"– சற்று உஷ்ணத்துடனேயே வந்தது அவன் கேள்வி.

"நான் அளிக்க முன்வந்ததை மட்டுமல்ல துருவா, பாண்டிய மன்னர் அளித்த பதவிகளையும்கூட அவன் ஏற்க மறுத்து விட்டான். அவனது சோழ நாட்டைப் பிரிந்து எங்கும், எதற்காகவும் வர இயலாதென்று கூறிவிட்டான். வயலும், வாய்க்காலும், அமைதி நிறைந்த கிராமத்து வாழ்க்கையும் தரும் மனநிம்மதியை, எந்த அரச போகமும் தர இயலாது. அந்த எளிய வாழ்வே போதும் என்று கூறிவிட்டான்."

"அவன் கூறுவது முற்றிலும் உண்மைதான் மன்னவா" என்ற துருவன், "சரி, இத்தனை கட்டுக் காவலுடன் இருக்கும் இந்த மாளிகைக்கு, அவன் எப்படி வந்து என்னை வெளியே அழைத்துச் செல்ல முடியும்?" என்றான் குரலில் சந்தேகம் ஒலிக்க.

"துருவா, எனக்குச் சிற்பக் கலையில் நாட்டம் அதிகம் என்பதை அறிவாயல்லவா?"

"இந்த உலகமே அறியுமே."

"சிற்பக் கலையின் ஒரு பகுதி பூமிக்கடியில் சுரங்கப் பாதைகளும், ரகசிய வழிகளையும் அறைகளையும் அமைப்பது." நந்திவர்மன் முகத்தில் விஷமம் வழிந்தது.

"அப்படியானால் இந்த மாளிகையில்...?"

"ஆம். வைகுந்தன் ஆலயத்திலிருந்து இந்த மாளிகைக்கும், இங்கிருந்து காஞ்சிக் கோட்டைச் சுவரைத் தாண்டியும் பாதைகள் இருக்கின்றன. நாளை இரவு தயாராக இரு. என் மூத்த மகனைச் சந்திக்க," என்ற நந்திவர்மன் எழுந்தான்.

அடுத்து மன்னனின் விழிகள் அந்த யவன மங்கையர் மீது பதிந்தன. "துருவா, இந்த யவனமங்கையர் என்னைச் சேர்ந்தவர்கள்தாம். உன்னை மீட்க வருபவர்களுக்கும், சுரங்க வழிகளை அடையாளம் காட்டவும், ரகசிய வாயில்களைத் திறக்கவும், உனக்கு உதவுவார்கள். அதுவரை இவர்களது உபசரணைகளை மறுக்காமல் ஏற்றுக் கொள். நீ இவர்களை மறுப்பதை அறிந்தால், மகாராணி பணிப்பெண்களை மாற்றிவிடக் கூடும். நான் வருகிறேன்" என்ற மன்னன் மாளிகையிலிருந்து வெளியேறி அரண்மனையை நோக்கி நடந்தான்.

இரவு நன்றாக முற்றிவிட்ட அந்த வேளையிலும், அரண்மனைக்குத் திரும்பிய மன்னனுக்காகக் காத்திருந்தாள் மகாராணி ரேவாதேவி. அவள் அழகிய விழிகளில் சந்தேகச் சாயை பலமாகப் படர்ந்து கிடந்தது.

"மன்னர் தனித்துச் சென்று துருவனைக் கண்டு பேசி விட்டு வருவதாகத் தெரிகிறது..." என்றவள், குரலிலும் சந்தேகம் வழிந்தது.

எந்தத் தயக்கமுமின்றி வந்தது நந்திவர்மனின் பதில். "ஆம் தேவி, விருந்து முடிந்ததும் உங்கள் இருவரின் வாக்கு வாதம் துவங்கிவிட்டது. நம் மகன் நந்திவர்மன் ராஷ்டிர கூடத்தில் எப்படி இருக்கிறான், அவன் கல்வியும் பயிற்சிகளும் எந்த நிலையில் இருக்கின்றன என்பதைக்கூட நீ விசாரிக்கவில்லை. நானும் அப்படி விசாரிக்காமல் இருப்பது



தவறல்லவா? உங்கள் வாக்குவாதம் முடிந்ததும் துருவனை சிறை வைக்க உத்தரவிட்டு விட்டாய். எனக்குப் பேசுவதற்கே நீ சந்தர்ப்பம் தரவில்லை. எனவேதான் சென்று சற்று நேரம் பேசிவிட்டு வந்தேன்."

தயக்கமே இன்றி வந்த பதிலும், மாறாத முறுவலுடன் பேசிய முகமும், மகாராணிக்கு நந்திவர்மன் மீது சந்தேகம் கொண்டது கூடத் தவறோ என்று எண்ண வைத்தன. ஆனாலும் அவள் மனத்தில் நந்திவர்மனைத் தவிர சிறைப் பட்ட துருவன் நாடக் கூடியவர்களோ, உதவி கோரக் கூடிய வர்களோ, காஞ்சியில் இல்லையென்பதும் தோன்றியது. மற்ற பல்லவப் படைத்தலைவர்களோ, உபதலைவர்களோ துருவனுக்கு உதவ எண்ணினாலும், மன்னன் அனுமதியின்றி எந்தச் செயலிலும் ஈடுபட மாட்டார்கள் என்பதும் புரிந்தது அவளுக்கு.

மன்னனிடம் நேரிடையாகவே கேட்டு விடுவதும், துருவனுக்கு உதவாமலிருக்க வாக்கைப் பெற்று விடுவதும் தான் தன் சந்தேகத்துக்கு மாற்றாக அமையும் என்பது புரிந்ததால், மகாராணியின் முகத்திலும் குரலிலும் இலேசான குழைவு புலப்பட்டது.

"மன்னவா."

"சொல் தேவி."

"துருவனை நான் சிறை செய்ததை தாங்கள் விரும்ப வில்லை அல்லவா?"

"ஆம். விரும்பவில்லை. என்ன இருந்தாலும் அவன் உன் சகோதரன். நல்ல வீரன் என்றும் நான் மதிக்கிறேன்."

"ஆனால் அவன் ராஷ்டிரகூடத்துக்கு தற்போது திரும்பிச் செல்வதை நான் விரும்பவில்லை."

"சரி."

"எனவேதான் அவனைச் சிறைவைக்க வேண்டியதாகி விட்டது."

"அதுவும் சரி. உன் விருப்பத்திற்கு நான் தடையேதும் கூறவில்லையே."

"எனக்குத் தாங்கள் ஒரு வரம் தரவேண்டும்."

"உத்தரவிடு தேவி."

"துருவன் எப்படியாவது இங்கிருந்து தப்பிச் செல்லவே முயற்சி செய்வான்."

"கண்டிப்பாகச் செய்வான்."

"அவனுக்கு உதவக் கூடியவர்கள் காஞ்சியில் வேறு எவரும் கிடையாது."

"அதுபற்றி நான் அத்தனை திட்டமாக அறிந்திருக்கவில்லை தேவி. அவன் இதற்கு முன்பாக பாண்டியருடன் கூட ஏதோ தொடர்பு கொண்டதாகக் கேள்விப்பட்டேன் தேவி."

"ஆனால் காஞ்சிக் கோட்டைக்குள் பாண்டியர் நுழைவதும், அவனுக்கு உதவுவதும் நடக்க இயலாத காரியங்கள். இங்கு அவன் உதவி கோர நினைத்தால், உங்களிடம்தான் கேட்க வேண்டும். எனவே..."

"எனவே?"

"நான் கேட்கும் வரத்தை தாங்கள் அளிக்க வேண்டும்."

"மகாராணி கேட்டு இதுவரை நான் எதையும் தர மறுத்ததில்லையே தேவி."

"நான் இப்போது கேட்பது இதைத்தான். துருவனை நான் சிறை செய்து வைத்திருக்கிறேன். இதன் பிறகு அவனை இங்கிருந்து தப்ப வைக்கவோ, ராஷ்டிரகூடத்துக்குத் திரும்பிச் செல்லவோ தாங்கள் உதவக் கூடாது."



கேட்டவர்க்குக் கேட்டபடியே வரத்தை அருளும் அந்த வைகுந்தனின் பரம பக்தனான நந்திவர்மன் முகத்திலிருந்த முறுவல் இன்னும் விரிந்தது.

"தேவி, துருவனை விடுவிக்கவோ, தப்பிச் செல்லவோ நான் கண்டிப்பாக உதவமாட்டேன். போதுமா?" என்றான் நந்திவர்மன்.

எந்த மலையே பெயர்ந்து விழுந்தாலும், நந்திவர்மன் கொடுத்த வாக்கை மீற மாட்டான் என்பதை நன்றாக அறிந்திருந்த ரேவாதேவியின் இதழ்களில் இன்பப் புன்முறுவல் மலர்ந்தது. மன்னனை நெருங்கி அவன் வலிய தோளை அணைத்துக் கொண்டவள், அதே முறுவலுடன் அரண்மனைக்குள் மன்னனுடன் நடந்தாள்.

**அ**டுத்த நாளின் பொழுது அதிவேகமாகச் செல்வதாகத் தோன்றியது மகாராணிக்கு. ராஷ்டிரகூடத்திலிருக்கும் மகாராஜா கோவிந்தருக்கும், தன் நம்பிக்கைக்குரிய படைத் தலைவர்களுக்கும் துருவன் சிறைப்பட்டதைக் குறித்து ஓலைகள் அனுப்பினாள். ஓரிரு முறை துருவனிருந்த மாளிகைக்குத் தானே சென்று, நேரில் காவலைச் சோதித்து வந்தவள் திருப்தியுடன் உலவினாள்.

மகாராணி சற்றுப் பதற்றத்திலிருப்பதும், துருவன் சிறைப்பட்டிருப்பதும் நந்திவர்மனைச் சற்றும் பாதித்ததாகவே தெரியவில்லை. வெகு சகஜமாகத் தனது அரண்மனைக் கடமைகளை முடித்தவன் சிற்ப, சித்திரப் பணிகளைக் கவனிக்க, வழக்கம் போலவே வைகுந்தன் ஆலயத்திற்குச் சென்றான்.

ஆனால் விருந்தினர் மாளிகையில் சிறையிலிருந்த துருவனுக்கு அந்த ஒரு நாளின் பொழுது ஒரு யுகமாகவே தோன்றியது. நாள் முழுவதும் அமைதியின்றி மாளிகையில்

உலவியவன், அறைகளிலும், கூடத்திலும் நிறைந்து கிடந்த சிற்பங்களையும், சித்திரங்களையும் வெறித்து வெறித்து நோக்கிக் கொண்டிருந்தான். அவன் விழிகளுக்கு எங்கேயும் சுரங்க வழிகளுக்கான வாயில்களோ, ரகசிய வழிகளோ தென்படவில்லை. அவன் சென்ற இடங்களுக்கெல்லாம் தொடர்ந்து வந்து கொண்டேயிருந்த அந்த மயன மங்கையரும், அவன் கேள்விகளுக்கெல்லாம் கலகலவென்ற சிரிப்பைத் தவிர வேறு பதிலேதும் தரவில்லை.

வெகு சிரமப்பட்டு நாளைத் தள்ளிய துருவனுக்கு, மாலைப் பொழுது வந்து சற்று ஆறுதலளிக்க முயன்றது. தென்றலும், தேய்ந்த நிலவும், நந்தவனத்து மலர்களின் மணமும், மாளிகையைச் சுற்றி அரண்மனைப் பகுதியி லிருந்து ஒலித்த இன்னிசையும் அவன் தவிப்புக்குச் சற்று ஆறுதலளிக்க முயன்றன.

இரவும் கவியத் தொடங்கியது. அரண்மனைப் பகுதிகள் மெல்ல மெல்ல இருளில் மூழ்கத் தொடங்கின. துருவனின் இதயம் வேகமாக ஓடத் துவங்கியது.





31

## காத்திருந்த வழக்கு

பூவும் பொழுதும், கானும் காற்றும், ஊரும் வழியும், மொழியும் விழியும், அனைத்தும் ஆழ்ந்து உறங்கத் தொடங்கிவிட்ட அந்த முற்றிய இரவுப் பொழுதில், உறக்கம் வராமல் வான்வெளியில் நடைபயின்று கொண்டிருந்தது வெண்ணிலவு. துருவனுக்கும் விழிகள் உறங்க மறுத்ததால், நிலவை வெறித்தபடி நடைபயின்று கொண்டிருந்தான். கால்கள் களைத்ததால் மீண்டும் அறைக்குள் நுழைந்தவன், நின்று அறையின் நிலைமையைக் கவனித்தான். அந்த சயன அறையில் உறக்கத்துக்கு வேண்டிய சாதனங்கள் நிரம்பியே கிடந்தன. சுவையான உணவும், கனி வகையும், உயர்ந்த வகை மதுவும், சுகமான பஞ்சணையும் அவனால் தீண்டப் படாமல் காத்துக் கிடந்தன.

பணிவிடை செய்யக் காத்துக்கிடந்து அவன் மஞ்சத்தையே நெருங்காமல் உலவிக் கொண்டிருந்ததால்,

சலித்து, மஞ்சத்தின் பக்கங்களில் சாய்ந்து அமர்ந்தபடியே உறங்கிக் கொண்டிருந்தனர் அந்த யவன மங்கையர். அவர்கள் நிலையைக் கண்ட துருவனின் மனத்தில் இரக்கம் பிறந்ததால், தோள்களைப் பற்றி அவர்களை எழுப்பி மஞ்சத்தில் கிடத்தினான். இருக்கையொன்றை நகர்த்தி உப்பரிகையிலிட்டவன், அதில் சாய்ந்து விழிகளை மூடினான். அவன் மனக்கண்ணில் ராஷ்டிரகூடத்தின் நிலையும், தான் சிறைப்பட்டதை அறிந்தால் மீண்டும் எழக் கூடிய புரட்சியும் எழுந்தன. தப்பித்து விரைவில் பாண்டியர் எல்லையில் காத்து நிற்கும் உதவிப்படையை அடைய வேண்டிய அவசியத்தையும், தான் தப்பித்ததை அறிந்ததும், பின்தொடர்ந்து வரக் கூடிய காஞ்சியின் ராஷ்டிரகூட வீரர்களை எதிர்கொள்ள என்ன திட்டம் வகுக்கப் பட்டிருக்கும் என்ற கேள்வியும் எழுந்தன அவன் சித்தத்தில். இத்தனையையும் செயல்படுத்த, தன்னை அங்கிருந்து தப்பிக்க வைக்க வரப்போவதாக மன்னன் கூறிய பராந்தகனைப் பற்றிய நினைவும் எழுந்தது அவனுக்கு.

சிந்தனை வசப்பட்டு மூடிக்கிடந்த அவன் விழிகளை, நித்திராதேவி மெல்ல வசப்படுத்தத் தொடங்கினாள்.

சரியாக மூன்றாவது ஜாமம் தொடங்கியதும், யவன மங்கையரில் ஒருத்தி, யாரோ உலுக்கி எழுப்பியதுபோல் சட்டென்று விழித்து எழுந்தாள். தரையில் அமர்ந்தபடி மஞ்சத்தின் மீது சாய்ந்து உறங்கிவிட்ட தாங்கள் இருவரும், மஞ்சத்தில் கிடப்பதையும், ராஷ்டிரகூட இளவல் உப்பரிகை யில் இருக்கையில் அமர்ந்தபடி உறங்குவதையும் கண்டவள் முகத்தில், இலேசான வியப்பும், பச்சாதாபமும் தோன்றின. அடுத்தவளையும் உலுக்கி எழுப்பியவள் அவளிடம் ஏதோ ரகசியம் கூறிவிட்டு, மேன்மாடத்தின் நடுப்பகுதியை நோக்கிச் சென்றாள். அறையின் நடுவில் மேற்கூரையைத் தாங்கி



நின்ற இரு சிற்பத் தூண்களில் ஒன்றை நெருங்கியவள், தூணின் மேற்புறத்தில் நான்கு திசைகளையும் பார்த்த யாளிகளில் ஒன்றை மேற்புறமாக அழுத்தி, மெல்லத் திருப்பினாள். அவள் நின்ற இடத்துக்கு நேர் எதிரேயிருந்த சுவர் ஓசையின்றி நகர்ந்து ஒருவர் மட்டுமே நுழையக் கூடிய வாயில் தோன்றியது. அந்த வாயிலின் வழியே பந்தமொன் றுடன் நுழைந்த யவன மங்கை, உள்ளே சுழன்று சுழன்று இறங்கிய படிகளில் வேகமாக இறங்க ஆரம்பித்தாள்.

இரு நாழிகைகள் கழித்து மீண்டும் அந்தப் படிகளில் ஏறி வந்து, அறைக்குள் நுழைந்த யவன மங்கையைத் தொடர்ந்து பகதத்தன் வந்தான். அறைக்குள் வந்து பெரிதாக மூச்சு விட்டவன் சற்று ஆசுவாசப்படுத்திக் கொண்டபடி, திரும்பி அந்த வழியைப் பார்த்து, "பராந்தகா, அங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்? மேலே வா!" என்றும் குரல் கொடுத்தான்.

சற்று நேரம் கழித்து அறைக்குள் நுழைந்த பராந்தகன், "நாம் வந்த பாதையிலிருந்து இன்னும் இரு வழிகள் தெரிகின்றன பகதத்தா. அவை செல்லும் திசையை வைத்து எங்கே செல்லக் கூடும் என்று யோசித்தேன்" என்றான்.

"அரக்கு மாளிகையிலிருந்து பாண்டவர்கள் தப்பித்த சுரங்கவழி கூட இத்தனை நீளமிருக்காது பராந்தகா" என்று பெருமூச்சொன்றை வெளியிட்ட பகதத்தன், யவன மங்கையை நோக்கி "இளவல் எங்கே?" என்றான்.

உப்பரிகையில் இருக்கையில் அமர்ந்தபடியே உறங்கி விட்ட துருவன், பேச்சுக் குரல்கள் ஒலித்ததாலும், சுரங்க வழி திறந்து மூடியதால் ஏற்பட்ட இலேசான சலனத்தாலும் உறக்கம் கலைந்து விழித்து, தானிருந்த நிலையை உணர்ந்து, சட்டென்று எழுந்து கூடத்தில் நுழைந்தான்.

உள்ளே யவன மங்கையர் நிற்பதையும், பின்னால் புதிதாக இருவர் வந்திருப்பதையும், சுவரில் தெரிந்த வழியையும் கவனித்தவன் முகத்தில் வியப்பு படர்ந்தது.

பார்த்தவுடன் யாரென்பது புரிந்த பராந்தகன், "ராஷ்டிரகூட இளவலுக்கு வணக்கம், நான் பராந்தகன்" என்றான்.

துருவனின் விழிகள் பராந்தகனை ஏற இறங்கப் பார்த்தன. அகன்ற நெற்றியும், கூரிய நாசியும், பெருவிழி களும் பல்லவ வம்சத்தின் சாயலைப் பிரதிபலித்தாலும், விஷமத்தைக் காட்டிய முறுவலுடன் தெரிந்த இதழ்களும், விழிகளின் கூர்மையும், சோழ மண்ணின் இயற்கைக் குணத்தைக் கலந்து தோன்றுவதையும் கண்டான் துருவன்.

"பராந்தகா, உன்னைப் பற்றிப் பல்லவ மன்னர் கூறி யிருக்கிறார்" என்றவன் பகதத்தனைப் பார்த்து, "இவர்தான் உங்கள் தோழர் பகதத்தனாக இருக்கவேண்டும்" என்றான் துருவன்.

பகதத்தனின் உருண்ட முகத்தில் விழிகள் ஒருமுறை உருண்டு மகிழ்ச்சியைக் காட்டின. "ஆகா, என் பிரபாவம் ராஷ்டிரகூடம் வரை பரவி, ராஷ்டிரகூட இளவலும் என்னைப் பற்றி அறிந்திருப்பது மகிழ்ச்சியை அளிக்கிறது" என்றான் அவன்.

"சரி, தாமதமின்றி நாம் உடனே புறப்பட வேண்டும்" என்றான் பராந்தகன்.

பகதத்தன் அந்த மங்கையரிடம் ஏதோ சைகை செய்ய, அவர்கள் உள்ளே சென்று நீண்ட கயிறுகளைக் கொண்டு வந்தனர். கயிறுகளைக் கொண்டு ஒருத்தியைத் தூணிலும், மற்றொருத்தியை மஞ்சத்திலும் வைத்துக் கட்டிய பகதத்தன் சலித்துக் கொண்டான். "இந்தக் கயிறுகளைப் போல் இந்த



மங்கையருக்கும் எனக்கும் ஏதோ உறுதியான பூர்வ ஜென்ம பந்தம் இருக்கிறது. இவர்களைக் காணும்போதெல்லாம் கட்டிப் போடும் பணியே எனக்குக் கிடைக்கிறது. அடுத்த முறையாவது உங்களைக் கட்டாமலிருக்க முயற்சி செய்கிறேன்" என்றவன், இருவர் வாயிலும் துணிப்பந்தையும் அடைத்து கன்னத்தில் தட்டி, "வருகிறேன்" என்று விடை பெற்றுக் கொண்டான்.

அந்த மங்கையரை நெருங்கிய துருவன், "யவன மங்கையரே, என் வாழ்வின் முக்கியக் கட்டத்தில் உதவிய உங்களை நான் என்றும் மறக்கமாட்டேன். முதலில் உங்களிடம் கடுமையாகப் பேசியதற்கு என்னை மன்னித்து விடுங்கள். மீண்டும் வந்து உங்களைச் சந்திப்பேன், ராஷ்டிர கூடத்தின் மன்னனாக" என்றான்.

"இனி நாம் செல்லலாம்" என்ற துருவனை அழைத்துக் கொண்டு சுரங்க வாயிலை அடைந்து, உட்புறமிருந்த விசை யொன்றைத் திருகி வாயிலை அடைத்த பராந்தகன், பந்தத்தைப் பிடித்தபடி படிகளில் இறங்கினான். பகதத்தன் தன் புராணக் கதைகளைத் தொடங்க, படிகளில் இறங்கியதும் தெரிந்த பாதை வளைந்து வளைந்து நீண்டு கொண்டேயிருந்தது. வழியில் பல கிளைப்பாதைகளும் பிரதான பாதையில் வந்து கலந்தன.

இரு நாழிகைகள் கழித்து பாதை பெரும் பாறை யொன்றில் முடிவடைந்தது. பாறையின் இரு புறங்களிலும் இரு பாவைகள் நின்றன. மெல்லிய காற்று பாறையின் இடுக்குகள் வழியே குளிர்ந்து வீசியது. இடது புறத்துப் பாவையினருகே சென்ற பராந்தகன், அதன் கரமொன்றைப் பிடித்துத் திருக, எதிரிலிருந்த பாறை கரகரவென்ற ஒலியுடன் உருண்டு விலகியது. பாறை விலகிய இடத்தில் வட்டமான ஆழப் பள்ளமொன்றும், கீழே பளபளத்த நீர்ப்பரப்பும்

தெரிந்து, அது ஒரு பெரும் கிணறு என்பதைப் புரிய வைத்தன. பக்கங்களில் நீட்டிக் கொண்டிருந்த கருங்கற் படிக்கட்டில் ஏறி மேற்பரப்புக்கு வந்த துருவன், தான் கோட்டைச் சுவரையும், அகழியையும் கடந்து, அரைக்காத தூரத்திலிருப்பதையும், சுற்றிலும் அடர்ந்த மரங்கள் தென்படுவதையும் கவனித்தான்.

மூவரும் மேலேறி வந்த கணத்தில் சுற்றிலுமிருந்த மரங்களின் மறைவுகளிலிருந்து பலர் வெளியே வந்தனர். பார்வைக்குச் சாதாரணக் குடிகள் போல உடைகள் அணிந்திருந்தாலும், அவர்களது நடையும், திடமான தேகங்களும், இடையிலிருந்து நீண்டு கிடந்த வாட்களும் அவர்கள் சாதாரணக் குடிகளல்லர் என்பதை அறிவித்தன.

ஒன்றாகக் கூடி மூவரின் முன்பாக வந்து நின்றவர்களில், முதலில் இருந்தவன் பராந்தகனை நோக்கித் தலை வணங்கினான்.

“பிரபு, தங்களுடன் வந்து எல்லையில் அணி வகுத்திருக்கும் நம் வீரர்கள் தாங்கள் கூறியபடியே வியூகம் வகுத்து நிற்கின்றனர். நம் படைத்தலைவர் விக்கிரம வரையரும் வந்து காத்திருக்கிறார். பாண்டிய படைப் பிரிவும் வந்திருக்கிறது.”

“படைத்தலைவர் எனக்கு என்ன உத்தரவிட்டிருக்கிறார்?”

“தங்களைக் குடந்தையில் சென்று இரு தினங்கள் காத்திருக்குமாறும், ராஷ்டிரகூட இளவலைத் தொடர்ந்து வருபவர்களை கவனித்துவிட்டு, தாமும் பிறகு அங்கு வந்து சேர்ந்து கொள்வதாகவும் கூறச் சொன்னார்.”

துருவனை நோக்கித் திரும்பிய பராந்தகன், “இளவரசே, இவர்கள் சோழ வீரர்கள். தங்களை எமது படைத்தலைவர் விக்கிரமவரையரிடம் அழைத்துச் செல்வார்கள். தாமதிக்காமல் புறப்படுங்கள்” என்றான்.



துருவன் பராந்தகனை நெருங்கி அவன் கரங்களைப் பிடித்தபடி, விழிகள் மின்ன ஒருமுறை ஏற இறங்க நோக்கினான். அடுத்து ஒலித்த அவன் குரலில் உணர்ச்சிகள் பொங்கி வழிந்தன. “பராந்தகா, நம் இருவருக்கும் எதிரில் போர் காத்திருக்கிறது. போரின் முடிவில் நீ எளிய வாழ்வைத் தேடிச் செல்லப் போவதாக மன்னர் தெரிவித்தார். நான் அரியணையை நாடிச் செல்கிறேன். நீ எங்கேயிருந்தாலும், எந்த நிலையிலிருந்தாலும் என் மனத்தில் என்றும் உனக்கு ஓர் இடம் நிரந்தரமாக இருக்கும்” என்ற துருவன் விடைபெற்றுக் கொண்டான்.

உடன் நின்ற சோழ வீரன் சற்றே தயங்கினான். “பிரபு, குடந்தையிலும், நம் சோழ நாட்டின் மற்ற ஊர்களிலும் இருக்கும் ராஷ்டிரகூட வீரர்கள், இன்னும் முழுமையாக வெளியேறிவிடவில்லை. எனவே தங்களை எச்சரிக்கையுடன் இருக்குமாறு படைத்தலைவர் தெரிவிக்கச் சொன்னார்.”

பகதத்தன் குறுக்கிட்டான்: “வீரனே, நீ கவலைப்பட வேண்டாம். நான் கவனித்துக் கொள்கிறேன். நீ இளவலை அழைத்துக் கொண்டு புறப்படு.”

சோழ வீரர்கள் அளித்த புரவிகளில் ஏறிய பராந்தகனும் பகதத்தனும் சற்று நேரம் சோழ வீரர்களுடன் சென்ற துருவனைப் பார்த்தபடி நின்றுவிட்டு, குடந்தையை நோக்கிப் பயணத்தைத் தொடங்கினர்.

**பி**ன்னிரவின் நிலவொளியில் குறுக்கிட்ட சிற்றாறுகளும், ஓடைகளும், உருக்கிய வெள்ளிப்பாளங்களாக ஓடின. இருளடித்துக் கிடந்த மரக்கூட்டங்கள் நிழலுருவங்களாகத்

தெரிந்து, ஏதேதோ ரகசியங்களை மறைத்து வைத்திருப்ப தாகத் தோற்றமளித்தன. தொண்டை மண்டலம் முடிந்து சோழ மண்ணின் மணம் வீசத் தொடங்கிய நேரத்தில், காலைப் பனித்துளிகளும், அவற்றை மகுடங்களாக அணிந்த கதிர்களை அசைத்து வரவேற்ற வயல் வெளிகளும், கதிரவனின் ஒளி பரவத் தொடங்கும் முன்பே குரல் கொடுக்கத் தொடங்கிவிட்ட பட்சி ஜாலங்களும், பராந்தக னையும், பகதத்தனையும் வெகு ஆனந்தமாக வரவேற்றன.

எதிர்ப்பட்ட சோழ நாட்டு ஊர்களிலும், சிறு கிராமங் களிலும் பராந்தகனுக்கும் பகதத்தனுக்கும் கிடைத்த வரவேற்பு அபரிமிதமாயிருந்தது. பராந்தகன் குடந்தையை அடையச் செல்லக் கூடிய பாதையை யூகித்து, சோழர் படைத்தலைவர் ஏற்கெனவே செய்தியனுப்பியிருந்ததால், மக்கள் பராந்தகனது வருகையை ஆவலுடனேயே எதிர் பார்த்துக் கிடந்தார்கள். குறுக்கிட்ட ராஷ்டிரகூட வீரர் பிரிவு களைத் தவிர்க்கவும், சோழ நாட்டு கிராம மக்களின் அன்பை ஏற்கவும் தாமதித்துத் தாமதித்தே பயணத்தைத் தொடர்ந்த பராந்தகனும் பகதத்தனும், அன்றைய பகற்பொழுது முழுவதுமாக முடிந்து, இரவின் இரண்டாவது ஜாமத்தின் தொடக்கத்திலேயே குடந்தையை நெருங்கினார்கள்.

அந்த இரவில், குடந்தை நகரை நெருங்கிக் கொண் டிருந்த பராந்தகனுக்கு, அங்கு நீண்ட நாட்களாக தீர்க்கப் படாமலிருந்த வழக்கு ஒன்றும் காத்துக் கொண்டிருந்தது.





## 32
## தர்க்க சாத்திரம்

"மண்ணுக்கும், மரம் செடி கொடிகளுக்கும், நீருக்கும், காற்றுக்கும்கூட உயிர் இருக்கிறதா?" என்ற கேள்விக்கு, வேதங்களும், சாத்திரங்களும், பழந்தமிழிலக்கியங்களும் 'நிச்சயம் உண்டு' என்றுதான் பதிலளிக்கின்றன. உயிருள்ள மனிதர்களும், விலங்குகளும் தரக்கூடிய உணர்ச்சிகளை விட, ஒருபடி அதிகமாகவே இவை மனிதனுக்குத் தருகின்றன என்ற உண்மையை, அந்த இரவில் சோழ நாட்டு மண் பராந்தகனுக்கு உணர்த்தியது. நீண்ட காலத்துக்குப்பின் சோழ நாட்டுக்குள் நுழைந்தவனுக்கு அந்த மண்ணும், வயல் வெளிகளிலிருந்து கிளம்பிய நெல்லின் மணமும், காற்றில் அசைந்தாடிய மரம் செடி கொடிகளும், மனத்துக்கு நிறைவையும் மகிழ்ச்சியையும் அளித்ததால், மௌனமாகவே புரவியை நடத்திக் கொண்டிருந்தான் பராந்தகன். அந்த மண்ணை விட்டுத் தான் பிரிந்தபோது இருந்த நிலைக்கும்,

தற்போது திரும்ப சோழ நாட்டைத் தான் அடையும்போது உள்ள நிலைக்கும் இருந்த மாறுதல்கள், அவன் மனத்தை நிறைத்துக் கிடந்தன.

"பராந்தகா, ஏன் நெடுநேரமாக மௌனமாகி விட்டாய்?" பகதத்தனின் கேள்வி அவன் மௌனத்தைக் கலைத்தது.

"ஒன்றுமில்லை பகதத்தா. இதே குடந்தைக்கு நான் முன்பு வந்தபோது இருந்ததற்கும், இப்போது இருப்ப தற்கும் என்னிடம் எத்தனை மாறுதல்கள் என்பதை எண்ணினேன்."

பகதத்தன் இலேசாக நகைத்துவிட்டுக் கூறினான். "அப்பனே, மாறிக்கொண்டேயிருப்பதுதான் உலகின் மாறாத நியதி."

"உண்மைதான். ஆனால் அந்த மாற்றங்கள் அத்தனை நன்மையளிக்கக் கூடியவையல்ல என்று தோன்றினால்?"

"ஒருவருக்கு நன்மையென்று தோன்றுவது, இன்னொரு வருக்குத் தீமையாகத் தெரிகிறது. மாற்றம் நியதியென்றால் அதன் விளைவுகளும் நியதிதான் பராந்தகா. மாற்றத்தை ஏற்கும்போது, அதன் விளைவுகளையும் ஏற்கத்தான் வேண்டும். விளைவு விரும்பாததாக அமைந்தால், மறுபடி மாற்றத்தைக் காண மனம் விரும்புகிறது. முயற்சிகளும் தொடர்கின்றன."

"உன் தத்துவம் புரியவில்லை பகதத்தா."

"நான் அர்ச்சுனனுக்கு சிவபெருமான் அளித்த பாசு பதாஸ்திர மந்திரத்தையா கூறினேன், புரியவில்லை யென்பதற்கு?"

"உன் புராணத்தை நிறுத்திவிட்டு தெளிவாகக் கூறு."



"சரி, உன் வாழ்வில் ஏற்பட்டுள்ள மாற்றங்களையே சிந்தித்துப் பார். இந்தக் குடந்தைக்கு நீ வந்தபோதுதான் உன்னிடமும் மாற்றம் தொடங்கியது. வயலும், வாய்க் காலுமே கதியென்று கிடந்தாய். உன்னிடம் ஏற்பட்ட மாற்றம் ராஷ்டிரகூடரை விரட்ட வேண்டுமென விரும்ப வைத்தது. அந்த விருப்பமும், அதற்கான முயற்சிகளும் உன்னை இந்த நிலைக்கு மாற்றியது. வயலையும், நெல்லையும், மாடு களையும் பார்த்துக் கொண்டிருந்தவன், இப்போது மன்னர் களையும், இளவல்களையும், படைத்தலைவர்களையும் பார்க்கிறாய். படைகளை நடத்துகிறாய். வயற்காட்டில் சேற்றில் மாடுகளை ஓட்டிக் கொண்டிருந்தவன் நீயென்பதை யாருமே, யாருமேயென்ன, நீயே நம்புவது கடினமாகத்தானே இருக்கிறது? இல்லையா?"

"உண்மைதான் பகதத்தா."

"ஆனால் இந்த மண்ணுக்கு நன்மை என்று நீ நினைக்கும் மாற்றம், இதுவரை இங்கே அதிகாரம் செய்து கொண்டிருந்த ராஷ்டிரகூடருக்குத் தீமை. இதைத்தான் முதலிலேயே சொன்னேன்– ஆனால்–"

"ஆனால் என்ன பகதத்தா?"

"தகுதியுள்ளவன் பாதிக்கப்பட்டால்தான் மாற்றங்கள் ஏற்படுகின்றன என்பதும் உண்மைதான். நீ பாதிக்கப் படும் முன்னரே இந்த மண்ணில் அதே நிலைமைதானே நிலவியது?"

பராந்தகன் பார்த்த பார்வையில் வியப்பு தெரிந்தது.

"என்ன அப்படிப் பார்க்கிறாய் பராந்தகா?"

"இத்தனை தத்துவமும், தர்க்கமும் யாரிடம் கற்றாய் நீ?"

பகதத்தன் பலமாக நகைத்தான். "வேறு யாரிடம்? எல்லாம் உன் சகோதரி கார்குழலியிடம்தான்" என்றான் நகைத்தபடி. தொடர்ந்து "தர்க்கமும் கூட தகுதியுடையவர்களுடன் புரியும்போதுதான் தன்னையும், கேட்பவர்களையும் உயர்த்துகிறது. ஏனென்றால் தர்க்கம் என்பது உண்மைகளின் திறவுகோல்" என்றான்.

"நீங்கள் சந்திக்கும் போது இப்படித்தான் தர்க்கம் செய்து கொண்டிருப்பீர்களா?"

"ஆம். ஆனால் அது இன்னும் பல சுவைகளுடன் இருக்கும்."

"இந்த தர்க்க சாத்திரத்தை நானும் கற்றுக்கொள்ள வேண்டும் பகதத்தா."

"அப்பனே. அறிவும் தர்க்கமும் இந்தச் சோழ நாட்டு மண்ணின் மணம். சிறு தூறல் விழுந்தாலும் தன்னால் எழும். வெறும் தூறலுக்குப் பதிலாக, பெரும் மழையாகவே இளவரசி குமுதவல்லி வந்து கற்றுத் தருவாள். கவலைப் படாதே. கொஞ்ச நாட்கள் பொறு" என்று பகதத்தன் மீண்டும் பலமாக நகைத்தான்.

பகதத்தனின் நகைப்பு சட்டென்று நின்றது. புரவியையும் நிறுத்தினான் அவன்.

"என்ன பகதத்தா? ஏன் நின்று விட்டாய்?"

"அதோ பார்."

பகதத்தன் சுட்டிக்காட்டிய திசையில் உற்று நோக்கினான் பராந்தகன்.

தூரத்தில் குடந்தை நகரின் கோபுரங்கள் மங்கலான தீபங்களுடன் தெரிந்தன. காவிரிக்கரை உயர்ந்து தெரிய,



கரையோரத்து மரங்கள் இலேசாக அசைந்து, காவிரியின் பிரவாகத்துடன் ஏதோ ரகசியம் பேசிக் கொண்டிருந்தன. மரங்களின் அடியில் கூடாரங்கள் சிலவும், சில அவிழ்த்து சுருட்டப்பட்டும், தெரிந்தன. அருகே பல பேழைகளும், மூட்டைகளும் கிடக்க, பல ராஷ்டிரகூட வீரர்கள் சாய்ந்தும், உருண்டும் படுத்து உறங்கிக் கொண்டிருந்தனர். ஓரிரு பந்தங்கள் காற்றில் அலைபாய்ந்தபடி எரிந்தன.

"பகதத்தா, பல்லவ மன்னர் சோழ நாட்டிலிருக்கும் ராஷ்டிரகூடர்கள் அனைவரையும் மகாராணியின் பெயரால் காஞ்சிக்கு வந்து சேர்ந்துவிட ஓலையனுப்பியிருப்பதாகக் கூறினார். இவர்களுக்கு ஓலை கிடைக்கத் தாமதமாகியிருக்க வேண்டும்."

"அப்படித்தானிருக்க வேண்டும். நகருக்குள் இன்னும் கூட ராஷ்டிரகூடர்கள் இருக்கலாம்."

"எனக்கும் ஊர்த்தலைவரைக் காண வேண்டும். நாம் தெற்கு வாயில் வழியே நகருக்குள் செல்வோம், வா."

**தெ**ற்கு வாயிலின் பெரும் கதவுகள் அன்றும் திறந்தே கிடந்தன. உள்ளே நுழைந்ததும் தென்பட்ட வீதிகள் வெறிச்சிட்டுக் கிடக்க, மூடிக்கிடந்த இல்லங்களில் மங்கலான தீபங்களின் ஒளி தெரிந்தன.

சற்றுத் தொலைவு வந்ததும் புரவியை நிறுத்திய பராந்தகன் குதித்து இறங்கினான்.

பகதத்தனும் கீழே குதித்தான்.

வீதியின் பக்கங்களிலும், நீண்டு வளைந்து திரும்பிய வீதியின் முனையையும் ஒருமுறை பார்த்த பராந்தகன்,

"பகதத்தா, இதே இடத்தில்தான் அன்று ராஷ்டிரகூட வீரர்களால் வழிமறிக்கப்பட்டேன். அன்றும் இப்படித்தான்

இருள் சூழ்ந்து கிடந்தது. வீதிகளும் வெறிச்சோடிக் கிடந்தன. அன்று எனக்கு எதுவும் நேராமல் ஊர் திரும்பியிருந்தால், நீ கூறியபடி எந்த மாற்றமும் ஏற்பட்டிருக்காது."

"பின் காவிரிக்கரைக்கு எப்படிச் சென்றாய்?"

"நான் வந்தது ஊர்த் தலைவரைக் காண. என்னை வழிமறித்தவர்கள், அவர் காவிரிக்கரையிலிருப்பதாகக் கூறி என்னை அழைத்துச் சென்றார்கள். அன்றுதான் என்னிடம் சோழ உக்ரோதயத்தை அளித்து அந்தச் சோழ வீரன் உயிர் துறந்தான்."

பராந்தகன் வார்த்தைகளை முடிக்கு முன்பாக, வீதியின் முனையில் புரவிகள் பல பாய்ந்து வரும் ஒலி கேட்டது.

இருவரும் திரும்பினார்கள்.

ராஷ்டிரகூட வீரர்கள் பதின்மர் புரவிகளில் வந்து கொண்டிருந்தனர். புரவிகளின் பக்கங்களில் கட்டப்பட்டு தொங்கிய மூட்டைகளும், பேழைகளும் இரவு முழுதும் அவர்கள் நடத்திய கொள்ளைகளைத் தெரிவித்தன.

வீதியின் நட்ட நடுவில், அந்த இரவு நேரத்தில் இரு புரவிகள் நிற்பதையும், அருகே சோழ வீரர்களாகத் தெரிந்த இருவர் நிற்பதையும் ராஷ்டிரகூடர்கள் கவனித்துவிட்டதால், தொலைவில் இருக்கும்போதே வாட்களை உருவிக்கொண்டு அதிவேகமாக இருவரையும் நெருங்கினார்கள்.

"பராந்தகா, வருபவர்கள் துரியோதனாதிகள்தான். காஞ்சிக்குத் திரும்புமுன் இறுதியாகக் கொள்ளைக்கு என்ன கிடைக்குமென்று சுற்றிவிட்டு வந்து கொண்டிருக்கிறார்கள். வா, இவர்களைக் கொஞ்சம் நடுவீதியில் நடனமாடவிட்டுப் பார்க்கலாம்" என்றான் பகதத்தன்.

பராந்தகன் பதிலேதும் கூறவில்லை. நெருங்கி வந்து கொண்டிருந்தவர்களையும், முன்னால் வந்து கொண்டிருந்த



அவர்களது தலைவனையும் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தான்.

"பகதத்தா."

"சொல் பராந்தகா."

"முன்னால் வந்து கொண்டிருப்பவனுடன் எனக்கொரு வழக்கு இருக்கிறது."

"வழக்கா! என்ன கூறுகிறாய் நீ?"

"இவன்தான் அன்று என்னை வழி மறித்து காவிரிக் கரைக்கு அழைத்துச் சென்றவன். ஊர்த்தலைவருக்கு என் தந்தை அளிக்க வேண்டிய பொற்காசுகளை என்னிடமிருந்து பறித்துக் கொண்டவன்."

"ஆகா, ஆகா, மிக்க மகிழ்ச்சி பராந்தகா. உன் வழக்கை இன்று தீர்த்துவிடலாம். என்ன ஒரு எதிர்பாராத சந்திப்பு! மாண்டவ்ய ரிஷிக்கு தர்மதேவதை சொன்ன விதி என்பது இதுதான், பராந்தகா" என்ற பகதத்தன் நகைத்தான்.

ராஷ்டிரகூட வீரர்கள் நெருங்கி வந்து இருவரையும் சூழ்ந்து கொண்டார்கள். வீரர் தலைவனும் உருவிய வாளுடன் நெருங்கி வந்தான். இரவு நேரத்தில் தனித்து இரு சோழ வீரர்கள் வீதியில் நிற்பதும், ராஷ்டிரகூட வீரர்கள் சூழ்ந்து கொண்டபின்பும் பதற்றமின்றி ஏதோ சிரித்துப் பேசிக்கொண்டு அவர்கள் நிற்பதும், வீரர் தலைவனுக்கு வியப்பையும், எரிச்சலையும் அளித்திருக்க வேண்டும். பராந்தகன் நின்ற இடத்திலிருந்து அசையக்கூடவில்லை. வாளிருந்த பக்கம்கூட அவன் கரம் செல்லவில்லை.

பராந்தகனை நெருங்கிய வீரர் தலைவனின் விழிகளில் சந்தேகச் சாயை புலப்பட்டது. ஓங்கிய வாளுடன் பராந்தகனை நெருங்கியவன், "அடேய், நீ சோழ வீரன்

தானே? என்ன செய்கிறாய் இங்கு? எங்கள் எதிரில் நிற்க என்ன துணிச்சல் உனக்கு?" என்றான் இரைந்து.

பராந்தகனின் பதில் மிகுந்த பணிவோடு வந்தது. "ஆம் ஐயா, நான் சோழ நாட்டவன்தான். வண்டாழஞ்சேரியைச் சேர்ந்தவன். ஊர்த் தலைவரைக் காண வந்தேன். என் பெயர் பராந்தகன்."

வீரர் தலைவனின் முகத்தில் திகைப்பு பூரணமாகப் பரவியது. எதிரில் நிற்பவன் யாரென்பது கணநேரத்தில் புரிந்தது அவனுக்கு.

"ஐயா, அன்று நான் ஊர்த் தலைவருக்குத் திருப்பி அளிக்கக் கொண்டு வந்த பொற்காசுகளைப் பறித்துக் கொண்டீர்கள். தயை கூர்ந்து அதைத் திருப்பியளித்து விடுங்கள்," என்றான் பராந்தகன் வெகு நிதானமாக.





# (33)

## ஒரு சந்திப்பு - ஒரு வழக்கு

'**உத்பன்னமேவ நச்யதி**'— உற்பத்தியான உடனேயே நசிந்துவிடும் காலக் கணக்கை ஒருகணம் என்று கூறுகிறது ஒரு வடமொழி வாக்கியம். வாழ்வின் முக்கியத் தருணங் களில் கண நேரத்தில் எடுத்துவிடும் முடிவுகள், வாழ்க்கை யின் போக்கையே கூட மாற்றிவிடுகின்றன. அதிலும் போர்க் காலங்களில் எடுக்கப்படும் அத்தகைய முடிவுகள் போர் களின் முடிவுகளையும், வெற்றி தோல்விகளையும்கூட நிர்ணயித்து விடுகின்றன.

எதிரில் நிற்பவன் யாரென்பது புரிந்த கணத்தில், வீரர் தலைவன் கரத்திலிருந்த வாள் பராந்தகனை நோக்கி கன வேகத்தில் இறங்கியது. "இவர்களை வெட்டியெறியுங்கள்" என்ற உத்தரவும் இரைந்து ஒலித்தது அவனிடமிருந்து.

சில காலத்துக்கு முன்னர், வண்டாழஞ்சேரி கிராமத்து அப்பாவி வாலிபனாக வந்து சிக்கி, பலத்த காயங்களுடன்

உக்ரோதயம் பதித்த பொன்னாரத்துடன் காவிரியின் பிரவாகத்தில் பாய்ந்து தப்பிச் சென்றுவிட்ட அந்த வீரனைப் பற்றி, பின்பு எத்தனையோ கேள்விப்பட்டிருந்தான் வீரர் தலைவன். ஆனால் அந்த வாலிபனை குடந்தையின் வீதியில், சந்திப்போமென்பதை எண்ணிக்கூடப் பார்க்கவில்லை ராஷ்டிரகூட வீரர் தலைவன்.

அன்று தன்னிடம் சிக்கியபோது, மருண்ட விழிகளோடு, கரத்தில் பிடித்த துணி முடிப்போடு நின்றவன், அதே வார்த்தைகளைப் பதிலாகக் கூறினாலும், முகத்தில் அச்சமோ தயக்கமோ மருந்துக்குக்கூட இன்றி, பரம நிதானத்துடன், நேர்ப்பார்வையுடன் நிற்பதைக் கண்டு சற்று திகைத்துத்தான் போயிருந்தான் வீரர் தலைவன்.

"எதிரில் நிற்பது இருவர்தானே" என்ற எண்ணம் எழுந்த வேகத்தில், கரத்திலிருந்த வாளை பராந்தகன் மீது இறக்கிய வீரர் தலைவன், 'இருவரையும் வெட்டி எறியுங்கள்' என்றும் உத்தரவிட்ட இரண்டொரு கணங் களிலேயே, தான் எடுத்த முடிவு எத்தனை அனர்த்தத்தை ஏற்படுத்தக் கூடும் என்பதைப் புரிந்து கொண்டான்.

வெகு வேகமாக இறங்கிய வாளின் பாதையிலிருந்து கண்ணிமைக்கும் நேரத்தில் சுழன்று விலகினான் பராந்தகன். சுழன்று திரும்பியவன் கரத்தில், அவன் இடையிலிருந்த ரிஷப இலச்சினை பதித்த கனத்த வாள் தோன்றி, கரகரவெனச் சுழல ஆரம்பித்தது. அது சுழன்ற விதமும், முறையும் ராஷ்டிரகூடர் வீரர் தலைவனையும், அவன் வீரர்களையும் பக்கவாட்டில் நெருங்க விடாமல் அடித்த தன்றி, நேர் எதிரில் நின்று போராட வேண்டிய அவசியத் தையும் ஏற்படுத்தின. பக்கவாட்டில் நெருங்க முற்பட்ட இருவர், இரண்டாவது கணத்தில் கழுத்திலும் தோள்களிலும் வெட்டுப்பட்டுச் சரிந்தனர். மற்றொருபுறம் நெருங்கியவனது



வாள் பறித்து எறியப்பட்டு, அவன் கரமும் செயலற்றுத் தொங்கியது. நேர் எதிரில் நின்று வாட்களை வீசியவர்களின் நிலையும் வீரர் தலைவன் நிலையும், அத்தனை விரும்பத் தக்கதாக இல்லை. எதிரில் நிற்பவர்களின் வாட்களை அனாயாசமாகத் தடுத்துச் சுழன்ற அந்த வாள், கண் களுக்கும், கழுத்துக்கருகிலும் தோன்றி விலகுவதைக் கண்ட வீரர் தலைவனின் சித்தத்தில் திகில் பரவியது.

போதாக்குறைக்கு பராந்தகனுடன் வந்திருந்த பருத்த உருவத்துடனிருந்தவன் வெளியிட்ட அசுரச் சிரிப்பும், பெரும் விழிகளை உருட்டி விழித்த விதமும், தன் வீரர்களைத் திணறடித்து, மளமளவெனச் சரித்த வேகமும் வீரர் தலைவனின் திகிலை இன்னும் உயர்த்தின.

நிசப்தமாயிருந்த அந்த இரவில் வீதியிலிருந்து எழுந்து ஒலித்த வாட்களின் ஒலி, அந்த வீதியின் இல்லங்களிலிருந்த வர்களை எழுப்பி விட்டதால், ஆண்களும் பெண்களுமாக வெளியில் வந்தவர்கள், இரு சோழ வீரர்கள் ராஷ்டிர கூடர்களுடன் போராடுவதைக் கண்டார்கள். இதற்கு முன்பு ராஷ்டிரகூடர்கள் செல்லும் புரவிகளின் குளம்பொலி கேட்டாலே பதுங்கி மறைந்த குடந்தை மக்களின் போக்கு, சமீப காலமாக மாறிப் போயிருந்தது என்றால், அதற்குத் தகுந்த காரணமிருக்கவே செய்தது.

விக்கிரமவரையர் திரட்டியிருந்த வீரர்களை சில தினங்களுக்கு முன்பாகவே சாதாரண மக்களோடு மக்களாகக் கலந்து, குடந்தை நகரெங்கும் பரவிக் கிடக்கச் செய்திருந்தார். விடுதலைக்கான முதல் போர்ப் பாசறை குடந்தையில் அமையப் போவதையும் அறிவித்து, ஊர்த் தலைவர் மூலமாக மக்களிடம் தேவையான உதவிகள் செய்யவும் கேட்டுக் கொண்டிருந்தார்.

வீதியில் பராந்தகன் ராஷ்டிரகூடர்களுடன் சண்டையிட்ட இடத்தைச் சூழ்ந்து கொள்ள முற்பட்ட கூட்டத்திலிருந்து யாரோ ஒருவர் "நம் பராந்தகன், பராந்தகன்" என்று கூவ, தொடர்ந்து பல குரல்கள் ஒலித்தன. கூட்டத்திலிருந்த இளைஞர்கள் ராஷ்டிரகூடர்களைச் சூழ்ந்து தாக்கவும் தொடங்கினார்கள். ராஷ்டிரகூடர்களின் வாட்கள் பறிக்கப்பட்டு, உருட்டித் தள்ளப்பட்டு, சில கணங்களில் கயிறுகளால் பிணைக்கவும் பட்டார்கள். சண்டை நின்று கூச்சல்கள் மட்டுமே அங்கு ஒலித்தன.

வீரர் தலைவனின் நிலை சொல்லத் தரமற்றதாயிருந்தது. அதுவரை தன்னையும், தன் வீரர்களையும் கண்டு நடுங்கியும், அடங்கியும் கிடந்த குடந்தை மக்கள் தாக்கியதும், தங்களைப் பின்கட்டாகக் கட்டிப் போட்டு உருட்டியதும் அவன் அதிர்ச்சியை உயர்த்தியிருந்தது.

"இவர்களைக் கொன்று விடுங்கள் பராந்தகரே."– பல குரல்கள் ஆத்திரத்துடன் ஒலித்தன.

"பராந்தகா, இவர்கள் இதுவரை செய்திருக்கும் அக்கிரமங்களுக்கு மக்களிடமே இவர்களை விட்டு விடுவோம். அவர்களே தீர்ப்பளிக்கட்டும்," என்றான் பகதத்தன்.

கூட்டத்தை விலக்கிக் கொண்டு ஊர்த் தலைவர் வந்து கொண்டிருந்தார். பராந்தகனை நெருங்கி கண்களில் நீர் பொங்க அவனை அணைத்துக் கொண்டார்.

"பராந்தகா, என்னைச் சந்திக்க வந்து உனக்கு நேர்ந்ததையெல்லாம் பிறகு அறிந்தேன். நீ வீரனானதையும், இந்த மண்ணுக்குப் பெருமை சேர்த்ததையும், நம் படைத் தலைவர் மூலம் அறிந்தேன். உன் தந்தை கருணாகரரின் பெயரை நீ காப்பாற்றி விட்டாய். அவருக்கு எந்த விதத்திலும் குறைவில்லாத வீரனாகி, வண்டாழஞ்சேரிக்குப் புகழ் சேர்த்துவிட்டாய் பராந்தகா" என்றார் குரலில் உணர்ச்சி பொங்க.



"தலைவரே, இவர்களை என்ன செய்யலாம்?"– கேட்டான் பராந்தகன்.

"பராந்தகா, ஏன் இன்னும் இவர்களை விட்டு வைத்திருக்கிறாய்?" ஊர்த் தலைவரின் குரலில் கடுமை தொனித்தது. சுற்றி நின்ற மக்கள் மீண்டும் கூச்சலிடத் தொடங்கினார்கள்.

"சற்றுப் பொறுங்கள்"– அனைவரையும் கையமர்த்திய பராந்தகன், வீரர் தலைவனை நெருங்கினான். அவனைப் பிணைத்து நின்றவர்களிடமிருந்து விடுவித்து ஊர்த் தலைவர் முன்பாக நிறுத்தியவன், "தலைவரே, தவறான தலைமையும், கட்டுப்பாடற்ற சந்தர்ப்பங்களும், இவர்களை கொள்ளையராக்கி விட்டன. இவர்களும் மனிதர்கள்தாம். இவர்களை காஞ்சிக்கு வந்து சேருமாறு இவர்களின் மகாராணி உத்தரவு பிறப்பித்திருக்கிறார்கள். பெரும் போரும் இவர்களுக்காகக் காத்திருக்கிறது. வீரர்களாக முன்பு இருந்தவர்கள், போர்க்களத்தில் வீர மரணம் அடையும் வாய்ப்பை நாம் பறிக்க வேண்டாம். ஆனால்..."

"ஆனால் என்ன பராந்தகா?"

"இவர்கள் இதுவரை கொள்ளையிட்ட அத்தனை பொருள்களையும், பொற்காசுகளையும், திருப்பியளிக்க வேண்டும். காவிரிக் கரையில் அத்தனையும் மூட்டைகளாகவும், பேழைகளாகவும் கொண்டு செல்லத் தயாராகக் காத்திருக்கின்றன. இதற்கு ஒப்புக் கொள்வதானால், இவர்களை உயிரோடு விட்டுவிடலாம். மறுப்பதானால், மக்கள் விரும்பும் தண்டனையை இப்போதே நிறைவேற்றி விடலாம்."

வீரர் தலைவன் சுற்றியிருந்த மக்களின் முகத்தில் தெரிந்த கொலைக் குறியைக் கண்டான். பராந்தகன் கூறுவதை ஒப்புக் கொள்வதைத் தவிர வேறு வழியேதும் புலப்படவில்லை அவனுக்கு. எனினும் இறுதியாகக் கேள்வியொன்றும் கேட்டான்.

"அடே பராந்தகா, எங்களுக்கு ஏதேனும் நேரிட்டால், பின்பு காஞ்சியிலிருந்து வீரர்கள் இங்கு வந்து குடந்தை நகரையே துறையாடி விடுவார்கள். அப்போது நீயும் இந்த மூடர்களும் என்ன செய்வீர்கள்?"

சுற்றி நின்றவர்களின் உக்கிரம் அதிகரித்தது. "கொல்லுங்கள். கொல்லுங்கள்" என்ற கூச்சல் பலமாக எழுந்தது.

"வீரர் தலைவரே, உங்களை காஞ்சிக்கு அழைத் திருப்பதே அங்கிருக்கும் வீரர்களுடன் சேர்த்து ராஷ்டிர கூடத்துக்கு அனுப்பத்தான். நான் கூறியபடி அங்கு போரும் காத்திருக்கிறது உமக்கு. வீணான வாக்குவாதத்தில் ஈடுபடாமல் உயிரைக் காத்துக் கொள்ளுங்கள்" என்றான் பராந்தகன்.

திகைப்பும் அச்சமும் முகத்தில் வழிய, வீரர் தலைவன் அனைத்தையும் திருப்பியளிக்க ஒப்புக் கொண்டான்.

சுற்றி நின்ற மக்களில் இளைஞர்களைத் திரட்டிய பராந்தகன், வீரர் தலைவனை காவிரியின் இக்கரையிலேயே நிறுத்தி, அனைத்துப் பொருள்களும் வந்து சேர்ந்த பின்பு விடுவிக்கவும், எச்சரிக்கையுடன் இருக்கவும் கூறி, வீரர் தலைவனையும், மற்ற ராஷ்டிரகூடர்களையும் ஆயுதங் களின்றி அனுப்பி வைத்தான்.

அவர்கள் அகன்றதும் பராந்தகனை நெருங்கிய பகதத்தன், "ஏன் அவர்களை உயிருடன் செல்ல



அனுமதித்தாய் பராந்தகா?" என்றான் வியப்புடன். ஊர்த் தலைவரின் விழிகளிலும் அதே கேள்வி தெரிந்தது.

"மாற்றம் என்பது நியதியானால் அதன் விளைவுகளும் நியதிதான் என்றாயே பகதத்தா. என்னிடம் மாற்றம் ஏற்பட ஆரம்பம் செய்து வைத்தவன் இந்த வீரர் தலைவன். அன்று இவன் கையில் நான் சிக்காதிருந்தால் இன்னும் வண்டாழஞ் சேரியின் வயல்வெளியில்தான் நான் கிடந்திருப்பேன். எனவேதான் அவனுக்கு ஒரு வாய்ப்பை அளிக்க எண்ணினேன். நடக்கப் போகும் போரில் வீரனாகப் போராடி மடியவோ, உயிர் பிழைக்கவோ அவனுக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைக்குமல்லவா?"

ஊர்த் தலைவர் பராந்தகனைப் பார்த்த பார்வையில் பெருமிதம் தெரிந்தது.

"சரி, இருவரும் களைத்திருக்கிறீர்கள். வாருங்கள். நமது இல்லத்தில் உணவருந்திவிட்டு ஓய்வெடுத்துக் கொள்ளலாம்" என்றவர், இருவரையும் அழைத்துக் கொண்டு நடந்தார்.

நீண்ட நாட்களுக்குப் பிறகு சோழ நாட்டின் சுவையான உணவு கிடைத்ததால் சுவைத்து அருந்தினார்கள் இருவரும். பின்பு சுகமான பஞ்சணைகளும் கிடைத்ததால், நிம்மதியாகப் படுத்து உறங்கவும் தொடங்கினார்கள்.

கதிரவன் உதித்து ஒரு ஜாமம் கழித்தே மீண்டும் கண் விழித்த பராந்தகன், பக்கத்தில் பகதத்தன் இல்லாததைக் கண்டு திகைத்தான். எழுந்து சாளரத்தருகே வந்து வெளியே நோக்கியவனின் திகைப்பு இன்னும் பலமடங்கு உயர்ந்தது.

குடந்தை நகர் அடியோடு மாறிப்போய்க் கிடந்தது.



## 34

## சிலையாக்கிய சிலை

'உயிர்களுக்கும் கதிரவனுக்கும் என்ன தொடர்பு? எத்தனையோ சக்திகள் உலகில் இருந்தாலும், உயிர்களைத் தட்டி எழுப்பவும், தான் மறையும்போது உயிர்களை அடங்கி உறங்கச் செய்யவும் கூடிய சக்தியை மட்டும் கதிரவன் ஏன் ஏற்றுக்கொள்ள வேண்டும்? மற்ற சக்திகளுக்கு ஏன் இந்தச் சக்தி இல்லை?'– சற்று நேரம் பஞ்சணையில் கிடந்தபடியே சிந்தித்த பராந்தகன், அருகில் பகதத்தன் இல்லாததைக் கவனித்து, "எங்கே சென்றான் இவன்? கதிரவன் உதித்து ஒரு ஜாம நேரம் ஓடியிருக்கும் போலிருக்கிறதே" என்று எண்ணியபடியே சாளரத்தை அடைந்து வெளியே நோக்கினான்.

அவன் கண்ணெதிரே விரிந்த காட்சி அவன் சிந்தனைகளைப் பட்டென்று அறுத்து பிரமிப்பை ஊட்டியது.



ஊர்த் தலைவரின் இல்லத்துக்கெதிரே அந்த வீதி சோழர் படை வீரர்களால் நிறைந்து கிடந்தது. வீதியைத் தாண்டியும் வீரர்களின் அணிவகுப்பு நீண்டிருந்தது. வாட்களும், வேல்களும், அம்புகளும் விற்களும் கதிரொளியில் பளபளத்தன. வீதியின் முனையில் போர்ப் புரவிகளின் வரிசையும், போர் ரதங்களும் தெரிந்தன. வீரர்களின் கவசங்களும், மார்பில் தொங்கிய இருப்பு வளைகளும் மின்னின. ஏதோ புத்துணர்வும், புதிய ரத்தமும் உடலெங்கும் பாய்வதாக உணர்ந்தான் பராந்தகன். செங்கட்சோழரின் மறைவுக்குப்பின் நசிந்துவிட்டதாக அவன் அறிந்திருந்த சோழர் படையை இந்த அளவுக்கு உருவாக்கவும், பயிற்சியளிக்கவும் விக்கிரமவளரையர் என்ன பாடுபட்டிருக்கிறார் என்பதை அந்தக் காட்சி உணர்த்தியது. இனி சோழ நாடு எந்த எதிர்ப்பையும் எதிர்நோக்கவல்ல வலிமையான நாடாக உருவாகத் தொடங்கிவிட்டது என்பதை அந்தப் படை உணர்த்தியது. சோழநாட்டின் விடுதலைக்காக எத்தனை சோழ வாலிபர்கள் போராடப் புறப்பட்டிருக்கிறார்கள் என்பதை அந்த வீரர்களின் முகங்கள் உணர்த்தின.

பராந்தகனை அந்த பிரமிப்பிலிருந்து மீட்க பின்னாலிருந்து "பிரபு, பிரபு" என்று அழைத்தது ஒரு குரல்.

பராந்தகன் திரும்பினான்.

எதிரில் நின்ற சோழ வீரன் தலைவணங்கினான். "பிரபு, தாங்கள் விழித்ததும் ஸ்நானாதிபாதிகளை விரைவில் முடித்துக் கொண்டு உடனே அழைத்துவர நம் படைத் தலைவர் உத்தரவு" என்றான் அவன்.

"என்ன, படைத்தலைவர் குடந்தைக்கு வந்துவிட்டாரா? ஏன் எனக்கு உடனே தெரிவிக்கப்படவில்லை? எப்போது வந்தார்?" பராந்தகனது கேள்வியில் வியப்பும், இலேசான பதற்றமும் கூடத் தொனித்தன.

"தாங்கள் உறங்கச் சென்ற இரு நாழிகைக்கெல்லாம் நம் படைத்தலைவர் வந்துவிட்டார். வந்தவுடன் ஊர்த் தலைவரை விசாரித்தவர், தங்களை எழுப்ப வேண்டா மெனவும், விழித்த பின்பே அழைத்து வரவும் உத்தர விட்டார்."

துரிதமாகச் சென்று ஸ்நானத்தையும் உணவையும் முடித்துக்கொண்ட பராந்தகன், "வீரனே, பகதத்தன் எங்கே?" என்றான்.

"அவர் மந்திராலோசனை சபையில் இருக்கிறார் பிரபு."– பணிவுடன் வந்தது வீரனின் பதில். வேறொன்றும் கேளாமல் வீதியின் மறுகோடியில் கம்பீரமாக எழுந்து நின்ற ஆராவமுதன் ஆலயத்தின் மண்டபத்தில், மந்திராலோசனை சபை கூடியிருப்பதாகத் தெரிவித்த வீரனுடன் நடந்தான் பராந்தகன். ஆலயத்துக்குச் செல்பவர்களுக்கு இடையூறு இல்லாமல் அணிவகுத்திருந்த அணிவகுப்பினூடே நடந்தவன், மண்டபத்தினுள் சோழர் படையின் உப தலைவர்கள் அனைவரும் அமர்ந்திருப்பதையும், தான் உள்ளே நுழைந்ததும் விக்கிரமவரையரைத் தவிர அனைவருமே எழுந்து நின்று வரவேற்றதையும் கண்டு ஒருகணம் திகைத்தான். அவனது நடை தயங்கியதையும், அவன் விழிகளில் படர்ந்த பிரமிப்பையும் கவனித்த விக்கிரமவரையரின் முகத்தில், அதற்கான காரணத்தை ஊகித்து விட்டதால் முறுவலொன்று விரிந்தது.

படைத்தலைவரை நெருங்கி வணங்கிய பராந்தகன், "படைத்தலைவரே, இங்கிருக்கும் உபதலைவர்கள் பல போர்க்களங்களைக் கண்டவர்கள். தங்கள் வீரத்தையும் திறமையையும் போர்களில் பலமுறை நிரூபித்தவர்கள். நான் பெயருக்குக்கூட சோழ நாட்டுக்காக ஒரு போரையும் கண்டிராதவன். இவர்கள் எழுந்து நின்று என்னை



வரவேற்பது முறையா தலைவரே? இத்தனைக்கு நான் தகுதியானவனல்லன்," என்றான் சங்கடம் தொனித்த குரலில்.

விக்கிரமவரையரின் பதில் நிதானமாக வந்தது. "பராந்தகா, இத்தனை வீரர்கள் இரு தலைமுறைகளாக சாதிக்க இயலாததை நீ சாதித்திருக்கிறாய். வாளைப் பிடிக்கவும் அறியாத நீ ராஷ்டிரகூடருக்கு நடுவில் போராடி உக்ரோதயத்தை மீட்டதே உன் தகுதியை நிரூபிக்கப் போதுமானது. பாண்டிய நாட்டில் நீ சாதித்திருக்கும் காரியங் களால் பாண்டிய வரகுணர் நமக்கு உதவவும், சோழநாடு விடுதலை பெற்றபின் எந்தத் தலையீடும் இன்றி நம்மிடம் சோழ நாட்டின் நிர்வாகத்தை ஒப்படைக்கவும் ஒப்புக் கொண்டிருக்கிறார். சோழர் படையில் எனக்கடுத்த உபதலைவன் பதவியை உனக்களிக்கவும், இந்தச் சபை ஒருமித்துத் தீர்மானித்திருக்கிறது. ஆனால் நீ எந்தப் பதவியையும் விரும்பாதவனென்பதையும் அறிவேன். இந்தப் போர் முடிந்தபின் உபதலைவனாகத் தொடர்வது உன் விருப்பம். இது என் உத்தரவு" என்றவர் திரும்பி, "இனி சபை துவங்கலாம்" என்றார்.

புரவிப்படைத் தலைவரும், மற்றவர்களைவிட மூத்தவருமான உபதலைவர் எழுந்தார். "படைத்தலைவரே, இறுதியாக நாம் அறிந்த செய்திகளின்படி காஞ்சியிலிருந்து வெளியேறிய துருவனைத் தொடர்ந்து ஆறாயிரம் ராஷ்டிரகூட வீரர்களே சென்றிருக்கிறார்கள். காஞ்சியி லிருக்கும் மீதிப்படை, மல்லைத் துறைமுகத்தை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறது. அதுவுமன்றி பல்லவ மன்னர் முன்பு அனுப்பிய ஓலையின்படி, சோழ நாட்டின் பல ஊர்களிலுமிருக்கும் ராஷ்டிரகூடர்கள் காஞ்சிக்குத் திரும்ப வில்லை. இதன் பொருள் விளங்கவில்லை."

அடுத்திருந்த உபதலைவர் தொடர்ந்தார்: "அது மட்டுமல்ல படைத்தலைவரே, சோழ நாட்டின் ஊர்களிலிருக்கும் ராஷ்டிரகூடர்கள் அந்தந்த ஊர்களிலிருந்து புறப்பட்டார்களேயொழிய, அவர்கள் காஞ்சியை நோக்கிச் செல்லவில்லை. மாறாக, சோழ நாட்டுக்குள்ளேயே சோழர் கடற்கரையை ஒட்டியுள்ள பகுதிகளை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறார்கள். இன்று மாலைக்குள் அனைத்து ராஷ்டிரகூடர்களும் ஏறக்குறைய நாகையை ஒட்டிச் செல்லும் பாதையை அடைந்து விடுவார்கள்."

விக்கிரமவரையரின் கூர்விழிகள் பராந்தகன் மீது பதிந்தன. "பராந்தகா, ராஷ்டிரகூடர் படைகள் இப்படி மூன்று திசைகளில் நகர்வதற்குத் தகுந்த காரணம் இருக்க வேண்டும். பல்லவ மன்னர் முன்பு தெரிவித்திருந்த திட்டத்திற்கு மாறாக இது நடந்து கொண்டிருக்கிறது. காஞ்சியை விட்டு இறுதியாக வந்தவன் நீதான். இதற்குரிய காரணம் என்னவென்பதை உன்னால் ஊகிக்க முடிகிறதா?"

பராந்தகன் ஒருகணம் விழிகளை மூடினான். அவன் மனத்தில் காஞ்சியின் வைகுந்தன் ஆலயக் கோபுரம் வெகு கம்பீரமாக எழுந்தது. ஆலயப் பிராகாரத்தில் பல்லவ மன்னன் நந்திவர்மனை தான் இறுதியாகச் சந்தித்த காட்சியும் எழுந்தது. நந்திவர்மன் கூறியவற்றை ஒருகணம் எண்ணியவன், மீண்டும் விழிகளைத் திறந்து படைத்தலைவரை நோக்கினான்.

"படைத்தலைவரே, பல்லவ மன்னர் என்னிடம் தெரிவித்த விவரங்களின்படி, மகாராணியார் அவர் எதிர்பார்த்ததைவிட வேகமாகச் செயல்பட்டிருக்க வேண்டும். மகாராணியார் ஏற்கெனவே துருவன் வருகையை அறிந்ததும் மகாராஜா கோவிந்தருக்கு ஓலையனுப்பி விட்டார். துருவன்



காஞ்சியிலிருந்து தப்பிய பின்பு தொடர்ந்து செல்ல ஆறாயிரம் வீரர்களே சென்றிருக்கிறார்கள் என்றால், போதுமான படையை கோவிந்தர் ராஷ்டிரகூடத்திலிருந்து துருவனை எதிர்கொள்ள அனுப்பியிருக்கிறார் என்று பொருள்."

"அப்படித்தானிருக்க வேண்டும். மேலே சொல்."

"பல்லவ மன்னர் துருவனுக்கு உதவ தம் நண்பர் உதயசந்திரனுக்கு உத்தரவிட்டிருக்கிறார். துருவனது படைப் பிரிவும் ஏற்கெனவே வடமேற்கு எல்லையில் பாசறை அமைத்திருக்கிறது. எனவே காஞ்சியிலிருந்து சென்ற ஆறாயிரம் வீரர்களைக் குறித்தோ, துருவனைக் குறித்தோ நாம் கவலைப்படத் தேவையில்லை. காஞ்சியின் மற்ற வீரர்கள் மல்லைத் துறையை நாடிச் செல்வதும், இங்கிருக்கும் ராஷ்டிரகூடர்கள் சோழர் கடற்கரைப் பாதையை அடைந்து நாகையை நோக்கி நகர்வதும்தான் நாம் கவனிக்க வேண்டியவை. மல்லைத் துறையில் பல்லவர் போர்க்கலங்கள் நிற்கின்றன. காஞ்சியின் ராஷ்டிரகூட வீரர்கள் அந்தக் கலங்களை அடைந்தால், நேராக நாகையை ஒரே நாளில் வந்தடையலாம். இங்கிருக்கும் ராஷ்டிரகூடர்கள் நாகையை அடைந்தால், வரும் கலங்களிலிருக்கும் வீரர்களுடன் இணைந்து, பெரும் படை ஒன்று உருவாகும். தஞ்சையையும், அங்கிருக்கும் பாண்டிய மன்னரையும் தாக்குவதாக அவர்கள் திட்டம் இருக்கலாம்" என்ற பராந்தகன், தான் கூறியவை உபதலைவர்கள் புத்தியில் உறைய சற்று அவகாசம் கொடுத்தான்.

உள்ள நிலைக்கு பராந்தகன் கூறிய விளக்கம் மிகப் பொருத்தமாகவே இருப்பதாகத் தோன்றியது, படைத்தலைவருக்கும் உபதலைவர்களுக்கும்.

"பராந்தகா, நாம் அடுத்து என்ன செய்யலாமென்று எண்ணுகிறாய்?"

"படைத்தலைவரே, பல்லவ மன்னரின் நோக்கமும், நமது நோக்கமும் ஒரே பாதையில்தான் இருக்கின்றன. எனவே அவரது திட்டங்களில் மாற்றமேதும் இருந்தால், கண்டிப்பாய் நமக்குத் தெரிவிப்பார். அதுவரை நாம் பொறுமையாக இருப்பதே நலம். போரைச் சந்தித்தபின் சந்தர்ப்பங்களுக்கேற்ப திட்டம் வகுப்பதைவிட, சரியான திட்டத்துடன் போரை எதிர்கொள்வது எளிதான, நிச்சயமான வெற்றியைப் பெற்றுத் தரும் என்பது தாங்கள் அறியாததல்ல. நமது படைபலம் ராஷ்டிரகூடர் படைக்குச் சமமாக அல்லது குறைவாக இருக்கிறது என்பதுதான் என் யூகம். எனவே சரியான திட்டத்துடன் போரை எதிர்கொள்வதே சிறந்தது" என்றான் பராந்தகன்.

"பராந்தகன் கூறுவதில் பொருளிருக்கிறது. திருவெள்ளறையிலிருந்து ராஜசிம்மன் புரவிப்படையுடன் வந்து கொண்டிருப்பதாகத் தெரிவித்திருக்கிறான். அவன் வந்து சேரவும் அவகாசம் தேவை. எனவே பல்லவ மன்னரிடமிருந்து ஓலையேதும் வருகிறதா என்பதை இருதினங்களுக்குப் பொறுத்துப் பார்க்கலாம். சபை நாளை மீண்டும் கூடலாம்" என்றார் விக்கிரமவரையர்.

பராந்தகன், அவரிடம் விடைபெற்று பகதத்தனுடன் ஆலயத்தினுள் நடந்தான். பிரும்மாண்டமான தேர் ஒன்று பூமியிலிறங்கி நிற்பதைப் போல அமைந்திருந்த ஆராவமுதனின் சந்நிதியையும், சார்ங்கம், சக்கரம், கதை, சங்கு என ஆயுதபாணியாய், அபயஹஸ்தம் உயர்த்தி ஸேவை சாதிக்கும் அழகையும், திருமங்கை மன்னன் அளித்த சித்திரத் தேரையும் கண்டு பிரமித்து வெகுநேரம் நின்றான்.



மெல்ல வெளியே வந்தவனை திருமாமணி மண்டபத்தின் வடக்கே இருந்த மற்றொரு மண்டபம் ஈர்த்தது. ஒவ்வொரு தூணிலும் பழைமையான பல்லவரின் சின்னமான சிம்மம் பொறிக்கப்பட்ட அந்த மண்டபத்தை நோக்கி அவன் கால்கள் நடந்தன. மண்டபத்தின் இடது கோடியை அடைந்த பராந்தகன் சட்டென்று நின்றான். எதிரிலிருந்த தூணை வெறித்தன அவன் விழிகள்.

"இதுதான் பராந்தகா அந்தச் சிற்பம்."– அருகிலிருந்த பகதத்தனின் குரல் என்றுமில்லாதபடி குழைந்து கிடந்தது.

பராந்தகன் பதிலேதும் கூறவில்லை.

அந்தத் தூணின் அடிப்புறத்தில் உயரமும், மல்லனின் திடமான உடலமைப்புடனும் வெகு கம்பீரமாக நின்றிருந்தார் பல்லவச் சக்கரவர்த்தி நரசிம்மவர்மர். உருவிப் பிடித்திருந்த அவரது வாளின் பிடியில், பல்லவச் சின்னம் தெளிவாகத் தெரிய, அதை அடுத்து ஒரு மலர்மாலை அதிலிருந்து தொங்கியது. அது கல்லில் வடித்த மாலையென்பதை தொட்டுப் பார்த்தே உணர வேண்டும் என்பதை அதன் வேலைப்பாடுகள் தெரிவிக்க, அந்த மாலையைச் சூட்டி விட்டு, நாணத்தில் தலைகுனிந்து வெகு ஒயிலாக நின்றாள் ஓர் அழகி.

நரசிம்மரின் பார்வை மட்டுமல்ல, பராந்தகனின் பார்வையும் அந்த அழகியின் மீது வெகு நேரம் பதிந்து கிடந்தது.





## 35

## குற்றங்கள் மூன்று

**வீ**ரமும் காதலும் தமிழகத்தில் படைத்துவிட்டுச் சென்ற காவியங்கள் எத்தனையெத்தனையோ, சிற்ப சித்திரங் களிலும், எழுத்திலும் வடித்த கலைஞர்களும், கவிகளும் அவற்றைச் சிரஞ்சீவிகளாக்கிவிட்டுச் சென்றிருக்கிறார்கள். வீரத்திலும் காதலிலும் காவியங்களைப் படைத்த மாமல்லன், தானே ஓர் அற்புதக் கலைஞனாகவும் வாழ்ந்திருந்ததால், அவன் வடித்த சிற்பங்களும் சித்திரங்களும் அந்தக் காவியங்களை மட்டுமின்றி அவற்றை மீண்டும் படைக்கவும், படிக்கவும் செய்பவர்களையும் கால காலத்துக்கும் சிரஞ்சீவி களாக வாழ வைத்துக்கொண்டிருக்கின்றன. தனது அதே வம்சத்தில் பிறந்து, சோழ மண்ணுக்காகவே வாழ்ந்து பின்னாளில் மற்றொரு காவியம் படைக்க, இன்னொரு வனும் பிறக்கப் போவதை அப்போது அறிந்திருக்காத பராந்தகன், அந்த மாமன்னனுடனான தொடர்பு, தன்



வாழ்வில் ஏற்படுத்திவிட்ட மாற்றங்களை எண்ணி யெண்ணி வியந்தபடி, அந்தச் சிற்பத்தைப் பார்த்தபடியே நின்றிருந்தான் வெகுநேரம்.

கனவுலகிலிருந்து பராந்தகனை மீட்டு நனவுலகிற்குக் கொண்டுவர அவன் தோளில் தட்டிய பகதத்தன், "பராந்தகா, பல்லவ மன்னரிடமிருந்து நாம் எதிர்பார்த்த செய்தி வந்திருக்கிறதென்று எண்ணுகிறேன். உபதலைவர் ஒருவர் நம்மை அழைக்க வந்து கொண்டிருக்கிறார், பார்" என்றான்.

திரும்பிய பராந்தகன் அந்த மண்டபத்தை நோக்கி சோழர் படை உபதலைவர் ஒருவர் வேகமாக வந்து கொண்டிருப்பதைக் கண்டான். பராந்தகனை நெருங்கி வணங்கிய அந்த உபதலைவனின் முகத்தில் சந்துஷ்டி தெரிந்தது.

"தலைவரே, தாங்கள் கூறியபடி பல்லவ மன்னரிட மிருந்து ஓலை வந்திருக்கிறது. மீண்டும் சபையைக் கூட்ட படைத்தலைவர் உத்தரவிட்டிருக்கிறார். வாருங்கள்" என்றார் அந்த உபதலைவர்.

அடுத்த சில நாழிகைகளில் மீண்டும் கூடிய அந்த மந்திராலோசனை சபையில் பிரதானமாக முகுந்தன் நின்றிருந்தான். பல்லவ மன்னர் அளித்த ஓலையை படைத் தலைவரிடம் அளித்தவன், "படைத்தலைவரே, பல்லவ மன்னர் தாம் ஏற்கெனவே வகுத்திருந்த திட்டம் மாற்றப் பட்டிருப்பதாகவும், விவரம் இந்த ஓலையிலிருப்பதாகவும் கூறினார்" என்றான்.

ஓலைக் குழலைப் பிரித்துப் படித்த விக்கிரமவரையரின் முகத்தில் வியப்பு தெரிந்தது. பராந்தகனை ஏறெடுத்தவர், "பராந்தகா, உன் யூகத்தின்படியேதான் நிலைமை மாறியிருக் கிறது. ராஷ்டிரகூட வீரர்கள் மல்லைத் துறையில் காத்திருக்

கிறார்கள். மகாராணியின் ஓலைப்படி கங்க மன்னன் சிவமாறன் தன் வீரர்களை இரு கலங்களில் அனுப்பி யிருக்கிறான். அவர்களுடன் இணைந்து ஐந்து கலங்களில் ராஷ்டிரகூடரும், கங்க வீரர்களுமாக நாகைத் துறையில் வந்து இறங்கி, சோழ நாட்டிலிருக்கும் ராஷ்டிரகூடர் களையும் இணைத்துப் பெரும் படையாக தஞ்சையை நோக்கிச் செல்லப் போகிறார்கள். அநேகமாக இத்தனை நேரம் கலங்கள் மல்லைத் துறையை விட்டுப் புறப்பட் டிருக்கலாம்" என்றார்.

சபையில் சற்று நேரம் கனத்த மௌனம் நிலவியது. எல்லோர் மனங்களிலும் ஓடிய அந்தச் சந்தேகத்தை பராந்தகன் கேட்டான்: "படைத்தலைவரே, ஐந்து கலங்களில் வரும் வீரர்களையும், இங்கிருந்து சென்று கலந்து கொள்பவர்களையும் சேர்த்து உருவாகும் படை மிகப் பலமானதாக இருக்கும். அத்தனை வலுவான படையை எதிர்கொள்ள நம்மிடம் இருக்கும் வீரர்கள் போதுமா?"

"நிச்சயம் போதாது பராந்தகா."– படைத்தலைவரின் பதில் உடனே வந்தது.

பராந்தகன் முகத்தில் சிந்தனை படர்ந்தது. அடுத்து ஒலித்த அவன் குரலிலும் அது தொனித்தது.

"படைத்தலைவரே, பல்லவ மன்னர் தெரிவித்துள்ளபடி ராஷ்டிரகூடர்களும் கங்க வீரர்களும் நாகைக்கு வந்து இறங்கியதும், இங்குள்ள ராஷ்டிரகூடர்கள் இணையவும், தஞ்சையை அடையவும் இன்னும் இரு தினங்களாவது தேவை. இந்த அவகாசத்தை நாம் சரியாகப் பயன்படுத்தி னால், இந்தப் போரை நாம் வெல்லலாம். தமிழகத்தின் விடுதலைக்கான போர், சோழ மண்ணிலேயே நடக்கும்."

"உன் எண்ணத்தைக் கூறு பராந்தகா. சபையில் ஏற்றுக் கொள்ளப்பட்டால் செயல்படுத்தலாம்."



"படைத்தலைவரே, இந்த இரண்டு நாள் அவகாசத்தில் நமது வீரர்கள் விரைவாக தஞ்சையை அடைய வேண்டும். முகுந்தனிடமே செய்தியனுப்பி, பாண்டிய மன்னரிடம் அவரது மற்றப் படைப்பிரிவுகளையும் தஞ்சைக்கு அழைக்குமாறு கேட்டுக் கொள்ளலாம். தஞ்சைக்கு முன்ன தாகவே நாகையிலிருந்து வரும் படைகளை எதிர் கொள்ளலாம்.

"நாம் நாகைக்கே சென்று முன்னதாக அவர்களை எதிர்கொண்டால் என்ன?"– உபதலைவன் ஒருவன் குறுக்கிட்டான்.

"உபதலைவரே, சோழ நாட்டிலிருக்கும் ராஷ்டிர கூடர்கள் நாகையை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறார்கள். நாம் வழியிலேயே அவர்களை எதிர்கொள்ள வேண்டிவரும். சிறுசிறு போர்கள் நம் பயணத்தைத் தாமதமாக்கிவிடும். பெரும் படை நாகையில் வந்து இறங்கும்போது எதிர் கொள்வது சிரமமாகிவிடும். பாண்டிய மன்னரின் உதவி யுடன், வரும் படையை எதிர்கொள்வதே பாதுகாப்பு. ஒரே போராகவும், இறுதியான போராகவும் நம் விடுதலைப் போரை அமைத்துக் கொள்வதே சிறந்தது."

அடுத்து எழுந்த நடைமுறைச் சந்தேகங்களுக்கு விடையளித்த படைத்தலைவர், பராந்தகனின் திட்டத்தை ஏற்றுக் கொள்வதாக அறிவித்தார். திட்டத்தின் மாற்றப்பட்ட விவரங்களையும், படைகளை தஞ்சைக்கு அழைக்க வேண்டிய அவசியத்தையும் கூறிப் பாண்டிய மன்னருக்கு ஓலை எழுதிய படைத்தலைவர், அப்பொழுதே முகுந்தனிடம் அளித்து, புறப்படப் பணித்தார்.

ஆயுதங்களைத் திரட்டிப் பயணத்திற்கான ஏற்பாடு களைச் செய்யவும் அப்போதே உத்தரவிட்ட படைத்தலைவர், திருவெள்ளறையிலிருந்து வந்து கொண்டிருக்கும் ராஜ

சிம்மனின் புரவிப்படைப் பிரிவை, விரைவாக தஞ்சையை வந்தடைய ஓலையொன்றும் எழுதி வீரனொருவனை அனுப்பினார். நாகையில் வந்து இறங்கும் ராஷ்டிர கூடரையும் கங்க வீரர்களையும் பற்றி அறிய, ஒற்றர்களை நாகைக்கு முன்னதாகச் செல்லவும் பணித்தார்.

வெகு காலமாகக் காத்திருந்த இந்தப் போர் சோழ நாட்டுக்கு மட்டுமல்ல, தமிழகத்துக்கே விடுதலைப் போர் என்பதை உணர்ந்திருந்த ஒவ்வொரு வீரனும், உபதலைவர் களும் பெரும் உணர்ச்சிப் பெருக்குடனேயே போருக்குச் சித்தமாகத் தொடங்கினார்கள்.

மறுதினம் அணிவகுத்த சோழர் படை அதிகாலை யிலேயே குடந்தையிலிருந்து தஞ்சையை நோக்கி நகர்ந்தது. வழியில் எதிர்ப்பட்ட ஊர்களிலிருந்த ராஷ்டிரகூடர்கள் அப்புறப்படுத்தப்பட்டனர். வழியிலிருந்த கிராமங்களிலிருந்து சோழ மண்ணின் விடுதலைக்காகப் போரில் கலந்து கொள்ள விரும்பிய இளைஞர்கள், அணியின் இறுதி வரிசை களில் சேர்த்துக் கொள்ளப்பட, தஞ்சையை நெருங்கும் போது, சோழர் படை கணிசமாகவே வளர்ந்திருந்தது.

மாலைப்பொழுதில் தஞ்சையை நெருங்கிவிட்ட சோழர் படை காவிரியின் வடகரையில் இடவை என்னும் ஊரை அடைந்தது. போருக்குத் தகுதியான பரப்பும் வெட்ட வெளியும் அங்கு அமைந்திருப்பதைக் கண்ட படைத்தலைவர் அங்கேயே பாசறை அமைக்க உத்தரவிட்டு, பாண்டிய மன்னருக்கு உடன் செய்தியையும் ஓலையெழுதி அனுப்பினார்.

அதே சமயத்தில் நாகையில் வந்து இறங்கிய ராஷ்டிரகூட, கங்க வீரர்கள் தஞ்சையை நோக்கி முன்னேறத் தொடங்கினார்கள். வெகு துரிதமாகப் பயணம் செய்த



அந்தப் பெரும்படை, இடவையில் சோழர் பாசறை அமைந் திருப்பதை அறிந்து, காவிரியின் எதிர்க்கரையில் தன் பாசறையையும் அமைத்தது. அன்றைய இரவே ராஷ்டிர கூடர் படையின் உபதலைவர் ஒருவனும், பல்லவ உப தலைவனாகத் தெரிந்த மற்றொருவனும் சோழர் பாசறையை நோக்கித் தூதுவர்களாக வரவும் செய்தனர். அவர்கள் சோழர் பாசறையை அடைந்தபோது பாண்டிய வரகுண னும், சோழர் படைத்தலைவரும், மற்ற உபதலைவர்களுடன் மந்திராலோசனை சபையில் இருந்தனர்.

தூதுவர்களின் வருகை அறிவிக்கப்பட்டதும், அவர்களை உள்ளே அழைத்துவரப் பணித்தான் மன்னன். இருவருக்கும் ஆசனங்கள் அளிக்கவும் உத்தரவிட்டான். பல்லவ உபதலைவன் சபையை வணங்கி இருக்கையில் அமர, உடன் வந்த ராஷ்டிரகூடன் இருக்கையில் அமரவும் மறுத்து, நேரிடையாக வந்த விஷயத்தைக் கூறத் தொடங்கினான்.

"பாண்டிய மன்னரே, எமது மன்னருக்கெதிராக நீர் மூன்று குற்றங்களைப் புரிந்திருக்கிறீர். அவற்றுக்கான பரிகாரங்களுக்கு நீர் ஒப்புக்கொள்வதானால், இந்தப் போர் தவிர்க்கப்படும். நீங்களும் உமது படையும் உயிருடன் பாண்டியநாடு திரும்பவும் அனுமதிக்கப்படுவீர்கள்."

ராஷ்டிரகூடன் வார்த்தைகளிலிருந்த அகந்தையையும், அவன் தோரணையையும் கண்ட மன்னன் முகத்தில் முறுவல் விரிந்தது.

"நான் புரிந்திருப்பது மூன்று குற்றங்கள்தானா?"– மன்னனது கேள்வியும் முறுவலுடன் வந்தது.

"ஆம். மகாராஜா கோவிந்தருக்கெதிராகப் புரட்சி செய்யும் துருவனுக்குக் காஞ்சியிலிருந்து தப்ப உதவி

செய்தது மட்டுமின்றி, அவனுக்குப் படை உதவியும் செய்திருக்கிறீர்கள்."

"பிறகு...?"

"எங்கள் மகாராணியின் அதிகாரத்துக்குட்பட்ட சோழ நாட்டில் அத்துமீறி நுழைந்து பாசறை அமைத்திருக்கிறீர்கள். தஞ்சையையும் ஆக்கிரமித்திருக்கிறீர்கள்."

"மூன்றாவதாக...?"

"மூன்றாவதுதான் மிகப்பெரிய குற்றம். எமது மகாராணியால் கோவிந்தருக்குப் பரிசாக அளிக்கப்பட்ட மாணிக்க ஆரத்தைக் களவாடிச் சென்றவனை உங்கள் ஆதரவில் வைத்திருக்கிறீர்கள்."

அவையில் விக்கிரமவரையர் உட்படப் பல உப தலைவர்கள் முகங்களிலும் கோபாக்னி வீசத் தொடங்கி விட்டதையும், சில உபதலைவர்களின் வாட்கள் உறைகளிலிருந்து வெளிப்பட்டு விட்டதையும், அந்த ராஷ்டிரகூடன் சட்டை செய்ததாகத் தெரியவில்லை. அடுத்து மன்னனது கேள்வி அதே நிதானத்துடன் ஒலித்தது.

"தூதனே, இந்தக் குற்றங்களுக்கெல்லாம் பரிகாரங்களாக நான் என்ன செய்ய வேண்டும்?"

ராஷ்டிரகூடன் ஒருமுறை அவையிலிருந்தவர்களை சுற்றிலும் பார்த்தான். அவன் விழிகள் படைத்தலைவரை அடுத்து அமர்ந்திருந்த பராந்தகன் மீது பதிந்து சற்று நிலைத்தது. மீண்டும் மன்னனை நோக்கியவன் பரிகாரங்களைக் கூறத் தொடங்கினான்.

அவன் கூறக் கூற அவையிலிருந்தவர்களின் உஷ்ணம் உயர்ந்துகொண்டே போய், "அவனை வெட்டியெறியுங்கள்" என்ற கூச்சல் ஒலித்தது. உபதலைவர்களின் உணர்ச்சி வசப்பட்ட குரல்கள் பெரும் கூச்சல்களாக ஒலித்தன.



பாண்டிய மன்னன் முகத்திலும் நிதானம் மறைந்து இலேசான உஷ்ணம் தெறித்தது.

தன் கரத்தை உயர்த்தி அனைவரையும் அமர்த்திய மன்னன், இறுதியாக ஒன்றைக் கேட்டான்.

"தூதனே, நீ தூது வந்து தெரிவித்த விஷயங்கள் வெகு அழகாயிருக்கின்றன. இருக்கட்டும், ஒன்றைச் சொல், உன்னிடம் இந்தத் தூதைப்பற்றிக் கூறி, உங்கள் ராஷ்டிரகூடர் படையையும் கங்கர் படையையும் நடத்திவந்திருப்பவர் யார்? கங்க மன்னன் சிவமாறனா? அவனது படைத் தலைவனா? அல்லது ராஷ்டிரகூடர் படைத்தலைவனா?"

ராஷ்டிரன்கூடன் முகத்தில் விஷமம் வழிந்தது. "நீங்கள் குறிப்பிட்ட எவரும் இல்லை" என்றான் அவன்.

"பின் யார்?"

"பல்லவச் சக்கரவர்த்தி நந்திவர்ம பல்லவர்" என்றான் அந்த ராஷ்டிரகூடன்.





36

## போர் நாடகம்

**போர்**த்தூதனாக வந்த அந்த ராஷ்டிரகூடன் உச்சரித்த அந்தப் பெயர் நிச்சயம் மந்திரமோ, மாயமோ, கண்கட்டி வித்தையோ அல்ல. ஆனால் அந்தப் பெயர், பாண்டிய மன்னர் தலைமையில் கூடியிருந்த மந்திராலோசனை சபையில் ஏற்படுத்திய விளைவு இந்திரஜாலமாயிருந்தது.

கோபமும், ஆவேசமுமாகக் கூச்சலிட்ட உபதலைவர்களும், தூதன் என்றும் பாராமல் 'அவனை வெட்டியெறியுங்கள்' என்று உக்கிரமாகக் குரல் கொடுத்தவர்களும் சட்டென்று அமைதியானார்கள். உருவப்பட்ட வாட்கள் மீண்டும் உறைக்குள் புகுந்தன. உஷ்ணம் உதயமாகத் தொடங்கிய மன்னன் முகத்திலும் மீண்டும் நிதானம் பரவியது. எந்தக் காரணத்தை முன்னிட்டும் இந்தப் போர் தவிர்க்கப்படக் கூடாதென்ற நோக்கத்தில், அகந்தையும் ஆணவமும் கொண்ட ராஷ்டிரகூடனாகத் தேர்ந்தெடுத்து



பல்லவ மன்னன் தூதாக அனுப்பியிருக்கிறான் என்பதை கணநேரத்தில் புரிந்துகொண்ட பாண்டிய வரகுணன் முகத்தில் முறுவலொன்றும் மலர்ந்தது.

ராஷ்டிரகூடத் தூதன் பரிகாரங்களாகக் கூறியவை சபையிலிருந்தவர்களை அத்தனை தூரம் கொதிக்கச் செய்பவையாகத்தானிருந்தன.

"பாண்டிய மன்னர் உயிர் பிழைக்கவும், மீண்டும் பாண்டிய அரியணையில் அமரவும் விரும்பினால், முதலில் துருவனுடன் சேர்ந்து போரிட்டுக் கொண்டிருக்கும் பாண்டியர் படைப்பிரிவை திரும்பப் பெற்றுக் கொண்டு, மகாராஜா கோவிந்தரின் மன்னிப்பைப் பெற வேண்டும். சோழ நாட்டில் எமது மகாராணியாரின் அதிகாரங்களில் தலையிடாமல் விலகுவது மட்டுமின்றி, மகாராணியாரின் சகோதரர் ராஜமாதுலரும், படைத்தலைவர் ராகுலரும் அவரால் மடிய நேர்ந்ததற்கு அபராதமாக, ஓராண்டு காலத்துக்கு கொற்கையில் விளையும் முத்துக்கள் அனைத்தையும் எம்மிடம் ஒப்படைக்க வேண்டும். இறுதியாக எம்மிடமிருந்து மாணிக்க ஆரத்தைக் களவாடியவனை, கரங்களைக் கட்டி எம்மிடம் ஒப்படைக்க வேண்டும். அவனை இங்கிருந்து இழுத்துச் சென்று காஞ்சியில் உரிய தண்டனையை அளிப்போம்."

ராஷ்டிரகூடன் பரிகாரங்களைக் கூறி முடிக்குமுன் அவையில் எழுந்த உக்கிர அலை, படை நடத்தி வந்திருப்பவர் நந்திவர்மனேதான் என்பதைக் கேட்ட பின்னரே அடங்கத் தொடங்கியது.

தூதனை நோக்கிய பாண்டிய மன்னனின் வார்த்தைகள் நிதானமாகவே வந்தன. "ராஷ்டிரகூடனே, வீரனாயிருப்பவனுக்கு அடக்கம் அவசியம். அதிலும் தூதனாக வருபவனுக்கு பணிவும், அமைதியான பேச்சும் மிக அவசியம்.

உன்னைத் தூதாக அனுப்பியிருப்பதன் நோக்கம் போர் நடந்தே தீரவேண்டும் என்பதுதான் என்று புரிகிறது. நீ கூறியவை குற்றங்களல்ல. அநீதி எங்கு நடந்தாலும் தடுப்பதும், அநீதி இழைக்கப்பட்டவரைக் காப்பதும், உதவுவதும் தமிழ் மன்னர் கடமை. துருவனிடமும் சோழ மண்ணிலும் பாண்டியர் படைகள் இருக்கக் காரணம் இதுதான். களவாடியதாக நீ கூறும் மாணிக்கம் சோழ அரச வம்சத்துக்குரியது. உரிய இடத்தை அது மீண்டும் அடைந்திருக்கிறது. அதை மீட்டு வந்த பராந்தகரையோ, அந்த மாணிக்கத்தையோ திரும்ப உங்களிடம் அளிக்க இயலாது. முதலில் நீ உயிருடன் இந்தச் சபையிலிருந்து வெளியேற, உடனே வந்த வழியே திரும்பிச் சென்றுவிடு."

"எனில், நாளை உதயத்தில் போருக்குச் சித்தமாக இருங்கள்" என்ற ராஷ்டிரகூடன், உடன் வந்த பல்லவ உபதலைவனை ஒரு பார்வை பார்த்துவிட்டுத் திரும்பி வெளியே நடந்தான்.

அவன் வெளியேறிய பின்பு, அதுவரை அமைதியாக இருக்கையில் அமர்ந்திருந்த பல்லவ உபதலைவன் "மன்னவா!" என்று அழைத்தான்.

"நீங்கள் ஏதும் கூற விரும்பினால் கூறலாம்" என்றான் மன்னன்.

"மன்னவா, என்னுடன் வந்த ராஷ்டிரகூட தூதன் கூறியவை யாவும் மகாராணியார் கூறியனுப்பியவை."

"புரிகிறது."

"பல்லவ மன்னர் கூறியனுப்பியதும் ஒன்றிருக்கிறது."

"என்ன கூறியனுப்பினார்?"

"எக்காரணத்தை முன்னிட்டும் இந்தப் போர் தவிர்க்கப் படக் கூடாதென்பதற்காகவே கங்க, ராஷ்டிரகூட படைத் தலைவர்களைத் தவிர்த்து, தாம் தலைமையேற்று



வந்திருப்பதாகவும், போரின் இறுதியில் தாம் கூறுவதைத் தயங்காமல் செய்துவிடும்படியும் கேட்டுக் கொண்டார்."

"பிறகு...?"

"கங்க வீரர்களையும் சேர்த்து பதினாயிரம் வீரர்கள் இருப்பதால், நாளைய போரில் எமது வியூகம் ஸர்ப்ப வியூகமாக இருக்கும் எனவும், இறுதிப் பகுதியில் பல்லவர் படைப்பிரிவு இருக்குமெனவும் தெரிவிக்கச் சொன்னார்..."

பல்லவ மன்னனின் அந்தப் போர் நாடகத்தில் தானும் கூட ஒரு பாத்திரம்தான் என்பது புரிந்தது பாண்டிய வரகுணனுக்கு. நந்திவர்மன் கூறியவற்றை ஏற்றுக் கொள்வதாக வாக்களித்த பாண்டிய மன்னன், தூதனுக்கு விடையளித்தான்.

காவிரியின் வடகரையில் போர் மேகங்கள் இடியும் மின்னலுமாகப் பொழியத் தயாராயின.

மறுதினம் உதயமான கதிரவன் அடுத்து நிகழவிருந்த போரை எண்ணி உக்கிரமடைந்ததாலோ என்னவோ, சிவந்த தன் கிரணங்களை வீசிக்கொண்டு மேலே உயர்ந்தான். இரு கரைகளிலும் எத்தனையோ போர்களைக் கண்டிருந்த காவிரி, அன்று தன்னுடன் கலக்கப் போகும் குருதியை எண்ணிச் சங்கடத்தில் சலசலத்து ஓடிக் கொண்டிருந்தது.

பெரும் ஸர்ப்பமொன்று படுத்துக் கிடப்பது போன்று நீண்டு கிடந்த ராஷ்டிரகூடர் அணிவகுப்பில், பாதிக்கும் மேல் ராஷ்டிரகூடரும் கங்க வீரர்களும் நின்றிருக்க, பல்லவ வீரர்கள் ஸர்ப்பத்தின் வால் பகுதியில் அணிவகுத்திருந்தார்கள். முன்னணியில் நந்திவர்மன் பூரண கவசத்துடன் தன் பெரும் வாளை ஏந்தி வெண்ணிறப் புரவியில் அமர்ந்திருந்தான். போர் உக்கிரமடைந்த பின்பு அவன் உபயோகிக்கும் பெரும் போர் வில், புரவியின் பக்கவாட்டில் பேழையினுள் தாகத்துடன் காத்திருந்தது.

ஸர்ப்பத்தின் நேர் எதிரில் சோழர் படையின் முகப்பில் விக்கிரமவரையனும், கங்க வீரர்களுக்கு நேர் எதிரில் உத்தம பாளையத்துப் போர்க் களிறுகளும் நின்றன. தன் புரவிப் படையின் முகப்பில் போர் ரதமொன்றில், இளையவீரன் ராஜசிம்மன் தன் தந்தை இந்தளதேவனைக் கொன்ற ராஷ்டிரகூடரைப் பக்கவாட்டில் ஊடுருவித் தாக்க சித்தமாக நின்றிருந்தான். எல்லாவற்றுக்கும் முன்னதாக, பாண்டிய வரகுணனின் சாம்பல்நிறப் புரவி நின்றது. பராந்தகன் அருகில் மன்னனின் சமிக்ஞைக்காகக் காத்திருந்தான்.

போர் முரசுகள் ஒலித்து அடங்கியதும், தன் வாளை உயர்த்தி, தாக்குதலைத் தொடங்க உத்தரவிட்ட நந்திவர்மன், புரவியைப் பாயவிட்டான்.

இருபுறங்களிலிருந்தும் ஜிவ்வென்று உயர்ந்து எழுந்த ஈட்டிகள் பெருவேகத்துடன் எதிர்ப்புறத்தில் இறங்கின. காற்றைக் கிழித்துப் பறந்த அம்புகள் ஏதோ மழை பொழிவது போல் பொழியத் தொடங்கின. வாட்கள் மோதும் ஒலி பலமாக ஒலித்து, கரையோரத்து மரங்களில் இருந்த பட்சிகளை அலறிப் பறந்தோடச் செய்தது. யானை களின் பிளிறல்களும், புரவிகளின் கனைப்பொலிகளும் பலமாக எழுந்தன.

அந்தப் போருக்காகக் காத்திருந்த சோழ வீரர்கள் வெகு காலமாக அடக்கிய உணர்வுகளைத் தொகுத்து, சோழ மண்ணில் ராஷ்டிரகூடர் புரிந்த அநீதிகளுக்கு தீர்ப்புகளை தாராளமாக வழங்கத் தொடங்கினார்கள். விக்கிரம வரையரின் நீண்டு வளைந்த வாள், போர்க் கவிதைகளை அசுர வேகத்தில் தீட்டியது.

ரிஷப இலச்சினை பொறிக்கப்பட்ட வாளைக் கரகரவெனச் சுழற்றியபடி முன்னேறிய பராந்தகன், எதிரில் இருந்த ராஷ்டிரகூடரை ஊடுருவி ஸர்ப்பத்தின் தலைப்





பகுதியைத் துண்டாக்கி, விக்கிரமவரையரின் பிரிவுக்கு இடையே நெருக்கினான். ரணதீரப் பாண்டியனின் போர்க் களிறுகள் தடதடவென பூமி அதிர நடந்து கங்க வீரர்களை மிதித்தும், துவைத்தும், துதிக்கைகளில் இருந்த நீண்ட இரும்புக் கழிகளால் தாக்கியும் துவம்சம் செய்தன. போர் ரதத்தில் ஏறி ராஷ்டிரகூடர்களிடையே புகுந்துவிட்ட இளைய ராஜசிம்மன் செய்த போர் அசாத்தியமாயிருந்தது. அவனது மெல்லிய நீண்ட வாள் ஏதோ காலஸர்ப்பம் போல் சுழன்று சுழன்று ராஷ்டிரகூடர்களை மளமளவெனச் சரித்தது. அவனுக்குப் பாதுகாப்பளித்தபடியே சோழ வீரர்களுடன் தொடர்ந்த பகதத்தனிடமிருந்து அவ்வப்போது வெளிப்பட்ட அசுரச் சிரிப்பு, ராஷ்டிரகூடர்களைத் திகில் கொள்ள வைத்தது.



உச்சிப் பொழுதுக்குப்பின் உக்கிரமடைந்த அந்தப் போரில், ராஷ்டிரகூடர் முக்காலுக்கும் மேல் சோழ மண்ணில் தங்கள் குருதியை வழியவிட்டு, செய்த அநீதி களுக்குப் பரிகாரம் தேடிக் கொண்டிருந்தார்கள். கங்க வீரர்களின் கரங்களும் மெல்ல சளைக்கத் தொடங்கின. துண்டுகளாகச் சிதைக்கப்பட்டுவிட்ட ஸர்ப்ப வியூகம் மெல்ல அழிந்து கொண்டிருக்க, காவிரியின் வெள்ளம் சிவந்து பிரவாகமாக ஓடியது.

மாலைப் பொழுது முற்றத் தொடங்கியதும் நந்திவர்மன் அந்தப் போர் நாடகத்தை ஒரு முடிவுக்குக் கொண்டு வரத் தீர்மானித்திருக்க வேண்டும். அதுவரை பாண்டிய மன்னனைச் சந்திக்க மறுத்து போக்குக் காட்டிய நந்தி வர்மனின் வெண்புரவி, எதிர்ப்பட்டவர்களை விலக்கிக் கொண்டு மன்னனை நோக்கி முன்னேறியது. சுற்றி நின்ற வீரர்கள் விலகி நிற்க, இரு மன்னர்களின் வாட்களும் பொறி பறக்க மோதத் தொடங்கின. சுழன்று சுழன்று மேலும்

கீழும், இடமும் வலமுமாகச் சுழன்ற நந்திவர்மனின் வாள், தமிழகத்தின் வாள் வீச்சில் எத்தனை விதமான கலைகள் இருக்கின்றன என்று காட்டத் துவங்கியது. இரண்டொரு சுழற்சிகளுக்கொருமுறை வரகுணனின் கழுத்திலும், தோள்களிலும் தீண்டி, சிறு காயங்களையும் ஏற்படுத்தியது. வரகுணனின் வாள் வீச்சும் அடுத்து சோழர் முறைக்கு மாறி நந்திவர்மனை எந்தப் பக்கத்திலும் சென்று தடுத்துத் தாக்கத் தொடங்கியது. தங்கள் போர் அனுபவங்களை நிரூபித்த இரு புரவிகளும் பக்கவாட்டிலும், சட்டென்று முன்னாலும் பாய்ந்தும், பின்வாங்கியும் சக்கரவட்டமாகச் சுழன்றும் இந்திரஜாலம் காட்டின. இரு மன்னர்களின் அந்த அற்புத வாள் வீச்சுகளை ரசித்த படைத்தலைவர்களின் வேக வீச்சு குறைந்தது.

கனவேகமாக இறங்கிச் சுழன்ற நந்திவர்மனின் பெரும் வாள் வரகுணனின் வாளை விலக்கி, அவ்வப்போது மார்பையும் கழுத்தையும் நெருங்கினாலும், சரியாக இரண்டு விரற்கடை தூரத்தில் நின்று, பின்வாங்கி, மீண்டும் சுழன்று, அவன் கை லாகவத்தின் எல்லை எதுவென்று நிரூபித்தது.

அடுத்து வரகுணனின் வீச்சும் வேறு முறைக்கு மாறியது. நந்திவர்மனின் வாளோடு வாள் சேர்த்துப் பதித்து, பக்கவாட்டில் சுழன்று, இடதும் வலதுமாய்த் திருப்பி உயர்ந்தது. அதே முறையில் மூன்றாவது சுழற்சியில் கைப்பிடிக்கு வெகு அருகில் பதிந்து சுழன்று, உயர்ந்த வேகத்தில், நந்திவர்மனின் வாளைப் பறித்து உயரே பறக்க விட்டது. அதே வேகத்தில் வாளை இறக்கி, போர் வில்லைக் கட்டியிருந்த பேழையின் கயிற்றைத் துண்டாக்கினான் வரகுணன். பேழை தரையில் விழுந்து புரண்டது.

நிராயுதபாணியாக நின்றான் நந்திவர்மன்.



37

## கடன் தீர்த்த பல்லவன்

**அ**சுந்தை கொண்டவன் அடையும் வெற்றியும், அறிவுள்ளவன் அடையும் தோல்வியும் வெற்றி தோல்விகளே அல்ல. அதிலும் பல்லவ நந்திவர்மனை வாட்போரில் வென்று, அவன் கரத்திலிருந்து வாளைப் பறிப்பதென்பது, கனவிலும்கூட எண்ணிப் பார்க்க இயலாதது என்பதை நன்றாகவே அறிந்திருந்த பாண்டிய மன்னன் திகைத்து நின்றிருந்தான். அவன் திகைப்பை இன்னும் உயர்த்த நெருங்கி வந்த நந்திவர்மன், "பாண்டிய மன்னா, இந்தப் போரில் நான் தோற்றுவிட்டேன். போர் நிறுத்தத் தாரைகளை ஒலித்து, போரை நிறுத்த உத்தரவிடுங்கள். என்னைச் சிறை செய்து விடுங்கள்" என்றான்.

பல்லவ வீரர்களின் பிரிவும் வாட்களை எறிந்துவிட்டு, நந்திவர்மனின் பின்னால் சரணடையத் தயாராக வரிசைகளில் நின்றது.

அந்த நாடகத்தைக் கண்டு வரகுணன் மட்டுமின்றி, விக்கிரமவரையனும், நெருங்கி வந்து கொண்டிருந்த பராந்தகனும் மற்ற உபதலைவர்களும் திகைத்தனர்.

உடனடியாகப் போரை நிறுத்த உத்தரவிட்ட வரகுணன், எஞ்சிய ராஷ்டிகூடர்களையும், கங்கர்களையும் ஆயுதங் களைப் பறித்து தஞ்சைக் கோட்டைக்கு அழைத்துச் செல்லவும் உத்தரவிட்டான். வாழ்நாளில் தனக்கு மறக்கவே இயலாத வாட்பயிற்சி அளித்து, தரையில் விழுந்து கிடந்த நந்திவர்மனது வாளை, தானே கீழிறங்கி எடுத்து வந்த பாண்டிய மன்னன், நந்திவர்மனிடம் அதை இரு கரங்களாலும் அளித்து, அந்த வெண்ணிறப் புரவியின் கயிறுகளைப் பிடித்து அழைத்துக் கொண்டு தஞ்சைக் கோட்டையை நோக்கி நடந்தான். நந்திவர்மனின் முகத்தில் அதே மாறாத புன்னகை மலர்ந்து கிடந்தது.

இரவின் முதல் ஜாமத்தில் தஞ்சை அரண்மனை மேன் மாடத்துக் கூடத்தில் அமர்ந்திருந்த அனைவர் முகங்களிலும் திருப்தியும் ஆனந்தமும் நிரவிக் கிடந்தன.

பாண்டிய மன்னனின் விழிகள் சுற்றியிருந்தவர்களை ஒருமுறை நோக்கிவிட்டு, நந்திவர்மனை நோக்கின.

"பல்லவ மன்னர் நடத்தியது போராகத் தெரியவில்லை. வெறும் நாடகமாய்த்தானிருந்தது" என்றான் பாண்டிய வரகுணன்.

"ஆம். நாடகம்தான். உலக வாழ்க்கையே ஒரு நாடகம் தானே மன்னா" என்றான் நந்திவர்மன்.

"இந்த நாடகத்தில் அடுத்து என்ன செய்ய வேண்டும் என்பதையும் தாங்களே கூறுங்கள்."



"போரில் எஞ்சிய ராஷ்டிரகூடர்களையும் கங்கர் களையும் சிறையில் அடைத்து விடுங்கள். வடக்கே துருவன் நடத்திக் கொண்டிருக்கும் போர் முடியும் தறுவாயி லிருக்கிறது. எனவே மகாராணிக்கு ஓலையொன்று அனுப்புங்கள்."

"என்னவென்று?"

"என்னைச் சிறை வைத்திருப்பதாகவும், கொற்கை முத்துக்களில் மீட்டவை போக எஞ்சியிருக்கும் அனைத் தையும், சோழநாட்டிலிருந்து கொள்ளையடிக்கப்பட்ட செல்வங்களையும் திரும்ப அளித்து, என்னை மீட்டுக் கொள்ளலாம் என்று... அது மட்டுமல்ல..."

"வேறென்ன?"

"துருவனுடன் நடந்த போரில் மகாராஜா கோவிந்தர் களத்தில் காணப்படவில்லை. என்ன ஆனார் என்பதும் தெரியவில்லை. துருவன் இன்னும் இரு தினங்களில் ராஷ்டிரகூட அரியணையில் அமர்ந்து விடுவான். அவன் அரியணையில் அமர்ந்ததும் காஞ்சியில் அவனைச் சிறை வைத்த குற்றத்துக்காக, என்னுடன் போர் தொடுக்க வரும்படி கூறியிருக்கிறேன்."

பாண்டிய மன்னனும் மற்றவர்களும் சற்றுத் திகைத் தார்கள். "இது அநீதி மன்னா, உங்களால் விடுவிக்கப்பட்டு, உதவியும் பெற்று அரியணையில் அமர்பவன், உங்கள்மீதே போர் தொடுப்பானா?"– விக்கிரமவரையரின் கேள்வியில் திகைப்பு பூரணமாகத் தொனித்தது.

"படைத் தலைவரே, துருவனைச் சிறை செய்தது மகாராணிதானென்றாலும், மன்னனான நான்தான் அதைச் செய்தேனென்று உலகம் சொல்லும். பல்லவ மன்னன் அனுமதிக்காமல் காஞ்சியில் ஒருவனைச் சிறையில் வைப்பது என்பதை உலகம் ஏற்காது."

"துருவன் காஞ்சியின் மீது போர் தொடுப்பதால் என்ன பயன் ஏற்படப் போகிறது?"

"பாண்டிய மன்னா, காஞ்சியைக் காக்க தற்போது ராஷ்டிரகூட வீரர்கள் இல்லை. என்னிடமிருக்கும் பல்லவ வீரர்கள் மிகக் குறைவு. துருவனுடன் போரிட இவர்கள் போதாது. எனவே..."

"எனவே...?"

"போரைத் தவிர்க்க நான் துருவனுடன் சமாதானத்தைக் கோருவேன். அவனுக்குக் கப்பம் கட்டும் விதமாக, அல்லது பரிசுகளாக ஆயிரம் களிறுகளையும், அவை சுமக்குமளவுக்குப் பொன்னும் மணியும், இரண்டாயிரம் புரவிகளையும் தேர்களையும் அளிப்பேன். காஞ்சிக்கு வந்து இவற்றைப் பெற்றுக் கொள்ளும் துருவன், காஞ்சியின் எல்லையைக் கடந்ததும், சோழ நாட்டுக்கு இவற்றை அனுப்பி வைத்து விடுவான். சோழ மக்கள் இதுவரை இழந்ததைப் பெறவும், நாடு விரைவில் நல்ல நிலையை அடையவும் இவை உதவும்," என்று முடித்தான் நந்திவர்மன்.

பாண்டிய மன்னனும், விக்கிரமவரையனும், பராந்தகனும் திகைப்பிலிருந்து விடுபட நெடுநேரமாயிற்று. இருக்கையை விட்டு எழுந்து சென்ற விக்கிரமவரையன், பல்லவ மன்னனை நெருங்கி அவன் கரங்களைப் பிடித்துக் கொண்டான். "மன்னவா, போர் என்னவோ முடிந்து விட்டது. இனி, சோழ நாட்டை மீண்டும் நல்ல நிலைமைக்குக் கொண்டு வரவும், படைகளை பலப்படுத்தவும், வீடுகளையும் செல்வங்களையும் இழந்த சோழ மக்களுக்கு ஓரளவுக்கேனும் ஈடு செய்யவும் வழியேதுமில்லையே எனத் தவித்துக் கொண்டிருந்தேன். என் கவலையைத் தீர்த்து வைத்துவிட்டீர்கள். இதற்கு என்ன கைம்மாறு செய்வேன் நான்?" என்றான் குரலில் உணர்ச்சி பொங்க.



நந்திவர்மன் முகத்தில் அதே நிதானம் நிலவியது. "படைத்தலைவரே, கைம்மாறு செய்ய இதில் ஏதுமில்லை. உங்கள் பொருளைத் திரும்ப உங்களிடம் ஒப்படைக்கிறேன், அவ்வளவே. என்னாலியன்றவரை என்னிடமிருப்பதையும் சேர்த்து அனுப்புகிறேன். நீங்கள் கைம்மாறு ஏதும் செய்ய நினைத்தால், இனி போரும் பூசலுமின்றி நம் மக்கள் நலமாக இருக்குமாறு பார்த்துக் கொள்ளுங்கள், போதும்."

"நந்திவர்மனின் ஏற்பாடுகளும், திட்டங்களும் அனைவரையும் சிலைகளாக அடித்திருந்தன. உணர்ச்சிப் பெருக்கால் ஏற்பட்ட மௌனம் சற்று நேரம் நிலவியது அங்கே.

மீண்டும் நந்திவர்மனின் குரல் ஒலித்தது: "பாண்டிய மன்னா, படைத்தலைவரே, நான் கூறியவையன்றி எனக்கு வேண்டுவதும் ஒன்றிருக்கிறது."

"கூறுங்கள். எதுவாயினும் செய்கிறோம்" என்றார் விக்கிரமவரையர்.

"நீங்கள் ஏதும் செய்ய வேண்டாம். பராந்தகனிடம் நான் கடன் பட்டிருக்கிறேன். அதைத் தீர்க்க அவன் உதவினால் போதுமானது."

"விளங்கவில்லை மன்னா!"

"பராந்தகன் வேறு யாருமல்ல. நரசிம்மவர்மரின் சோழவம்சத்துக் கிளையில் வந்தவன். எனக்கு மூத்த மகனாக நான் கருதுபவன். காஞ்சி அரியணை அவனுக்கு உரியது. இந்தப் போருக்கு முன்பே அந்த உரிமையை அளிக்கவும் விரும்பினேன். அவன் ஏற்க மறுத்து, என்னைக் கடன் பட்டவனாக்கி விட்டான். அவன் விரும்பும் எதையும் தரச் சித்தமாக இருக்கிறேன். அவன் நல்ல ஸ்திதியில் இருப்பதைக்

சான விரும்புகிறேன். இதை நிறைவேற்றி வைத்தால் என் மனம் நிம்மதியடையும்."

அனைவரது விழிகளும் பராந்தகனை நோக்கித் திரும்பின.

பராந்தகன் முகத்தில் சங்கடம் படர்ந்தது. அரியணைகளுக்கும் அரண்மனைகளுக்கும், அமைதியான வாழ்வுடன் அறவே தொடர்பில்லையென்பதைத் திட்டவட்டமாக அறிந்திருந்த பராந்தகனுக்கு, நந்திவர்மனின் வேண்டுகோளைப் புறக்கணிக்கவோ, மறுத்துக் கூறவோ மனமும் வரவில்லை, ஏற்றுக் கொள்ளவும் அவன் சித்தமும் இடந்தரவில்லை.

இரு மன்னர்களையும் படைத்தலைவரையும் ஏறிட்ட பராந்தகனின் சொற்கள் தெளிவாகவும், திடமாகவும் ஒலித்தன: "மன்னவா, என் உடலில் ஓடுவது பல்லவ வம்சத்து ரத்தம்தானென்பதிலோ, என்னிடமிருக்கும் இந்த வாள் நரசிம்மவர்மருடையது என்பதிலோ ஏதும் சந்தேகமில்லை. முன்பே நான் கூறியதுபோல எளிய, நிம்மதியான வாழ்வையே விரும்புகிறேன். அவசியமானால், சோழ மண்ணுக்காக இந்த வாளை மீண்டும் ஏந்தவும் தயங்க மாட்டேன். என் வழியில் செல்ல அனுமதியுங்கள்."

இருவரது தவிப்புகளும் சுற்றியிருந்தவர்களுக்குப் புரிந்தாலும், இருவருக்கும் சாந்தியளிக்கக்கூடிய பதிலேதும் எவராலும் கூற இயலவில்லை. பல்லவ மன்னனால் திணிக்கப்பட்ட வெற்றி, பாண்டிய வரகுணனை சங்கடத்தில் ஆழ்த்தியிருந்ததென்றால், பராந்தகன் எதையும் ஏற்க மறுப்பது நந்திவர்மனையும் சங்கடப்படுத்தியது. சோழ மண்ணை விடுவித்து, அதன் வளத்துக்காக வழி செய்திருக்கும் நந்திவர்மனின் கோரிக்கையை ஏற்க இயலாதிருப்பது பராந்தகனையும், அதற்கு என்ன கைம்மாறு



செய்வது என்ற சிந்தனை விக்கிரமவரையரையும் பரம சங்கடத்தில் ஆழ்த்தியிருந்தது.

அதுவரை மௌனமாக அத்தனையும் கவனித்துக் கொண்டிருந்த பகதத்தன் நிமிர்ந்தான். அவன் அடுத்துக் கூறிய வார்த்தைகள், அத்தனை தவிப்புகளையும் தீர்க்கும் வழியாக ஒலித்தன.

நந்திவர்மனை நோக்கிய பகதத்தன், "மன்னவா, பராந்தகன் விரும்பக் கூடியதும் ஒன்றிருக்கிறது. அதை அவன் பெறுவதற்கும், முறையாக அடைவதற்கும் தாங்கள் உதவினால், உங்கள் தவிப்பும் கூடவும் தீருமா?" என்றான்.

நந்திவர்மனின் விழிகள் பளிச்சிட்டன. "அப்படி ஒன்று இருக்கிறதா? அப்படி நான் நடத்தித் தரக்கூடியது இருந்தால் உடனே சொல் பகதத்தா" என்றான் ஆவலுடன். சுற்றியிருந்தவர்கள் முகங்களிலும் ஆவல் தெறித்தது.

"மன்னவா, அபிமன்யுவுக்காக விராடராஜனிடம் பெண் கேட்ட அர்ச்சுனன் செய்ததைத்தான் நீங்கள் செய்ய வேண்டும். எப்படியும் நடக்கப் போவதுதான் என்றாலும், பராந்தகனை உங்கள் மகன் என்றுதானே கூறினீர்கள்? உங்கள் மகனாக அவனை நிறுத்தி திருமணத்தை நடத்தி வையுங்கள். உங்கள் விராடராஜன், இதோ பாண்டிய மன்னர் எதிரிலிருக்கிறார். பிறகென்ன? கேளுங்கள்."

மூன்று அரசுகளையும் இணைத்துவிடும் அந்தப் புராணத்தையும், யோசனையையும் கேட்ட அனைவரது முகங்களிலுமே மலர்ச்சி பிறந்தது. பராந்தகனின் முகத்தில் இலேசாக வெட்கச் சாயையும் படர்ந்தது.

நந்திவர்மன் மகிழ்ச்சி பொங்க பலமாக நகைத்தான். நகைப்பினூடே "பாண்டிய மன்னா, என் மகனுக்காக

உங்களிடம் பெண் கேட்கிறேன். பெண்ணும் என் மகனை விரும்புவதாகத் தெரிகிறது. எனவே நீங்களாகவே முன்வந்து அளித்து விடுங்கள். இல்லையேல் இப்போது நிகழ்ந்ததைப் போல மீண்டும் ஒரு போரை நிகழ்த்த என் பல்லவ வீரர்களோடு மதுரைக்கு வரவேண்டியதாயிருக்கும்" என்றான்.

வரகுணனின் பதிலும் நகைப்பினூடே வந்தது. "இதை நான் ஒப்புக் கொள்ள முடியாது. நீங்கள் என்னிடம் பெண் கேட்பதானால், உங்கள் மகனோடும் வீரர்களோடும், உரிய சீர் வரிசைகளோடும் மதுரைக்கு வந்து, முறைப்படி கேளுங்கள். தருகிறேன். இல்லையென்றால் மீண்டும் போரிடலாம். நான் சித்தமாக இருக்கிறேன்," என்று.





# 38

## வைகுந்தன் அருள் !

மண்ணிலும் மனங்களிலும் ஏற்படும் காயங்களை ஆற்றவும் மாற்றவும், மனங்களைத் தேற்றவும் சக்தி படைத்த காலம், சோழ மண்ணிலும் பல மாற்றங்களை ஏற்படுத்தியிருந்தது. காலங்கள் மாறிய வேகத்தில் மனித வாழ்விலும் மாற்றங்கள் பல ஏற்பட்டதால், சோழ நாட்டு மக்கள் முகங்களில் மகிழ்வும் நிறைவும் தெளிவாகவே புலப்பட்டன. அவை சோழர் தலைநகரிலும், குடந்தை போன்ற பெரும் ஊர்களிலும், சிற்றூர்களிலும், கிராமங்களிலும்கூட நிறைந்தே கிடந்தன.

அந்தக் கிராமத்தின் மேலே கூடி மகிழ்ச்சியுடன் முழங்கியபடியிருந்த மேகங்கள் உச்சிப்பொழுதை மாலைப் பொழுது போலத் தோன்றச் செய்து கொண்டிருந்தன. வயல் வெளியெங்கும் நிறைந்து கிடந்த நெற்கதிர்கள் மட்டுமின்றி, அரிசிலாற்றங்கரையோரமாகச் சென்ற அந்தப் பாதையும்

உற்சாகமாக மழையில் நனைந்து கிடந்தது. அரிசிலாற்றிலோ, கரையோர மரக்கூட்டங்களிலோ அதிகம் மாற்றமேதுமின்றி, பட்சிகளின் அதே கூச்சல் நிறைந்து கிடந்தது. பாதையோரம் நின்ற அந்தச் சிறு மண்டபத்திலும் அதிக மாற்றம் தென்படவில்லை. மண்டபத்தை அடுத்திருந்த மரநிழலில் ஒதுங்கி நின்ற காளைகளும் கலப்பையும் நனைந்து கொண்டிருந்தன.

மண்டபத்தின் உள்ளே அமர்ந்து பாத்திரமொன்றிலிருந்து உணவை எடுத்து உருட்டி உருட்டி கணவனின் கரத்தில் வைத்துக் கொண்டிருந்தாள் கிராமத்துப் பெண்ணொருத்தி. அந்த உணவை விழுங்கியபடி அவளை ஆசையுடன் பார்த்துக் கொண்டே ஏதோ கூறிக் கொண்டிருந்தான் அவள் கணவன். அவர்களது வாழ்வு தந்திருக்கும் மன நிறைவை அந்தப் பெண்ணின் பூரித்த முகமும், நாணமும் ஆசையும் நிரம்பி வழிந்த விழிகளும் தெளிவாகப் புலப்படுத்தின. அவள் உடலமைப்பும் சற்றுப் பூசினாற்போல் சந்தனமும் குங்குமமும் கலந்த வண்ணமாகத் தெரிந்தது. மெலிந்து கிடந்த இடை சற்றுப் பருத்து, அந்தக் கொடியில் மலரொன்று பூத்திருப்பதையும் அறிவித்தது.

ஏதோ கூறிக் கொண்டிருந்த கணவன் சட்டென்று நிறுத்திவிட்டதைக் கண்டவள், "ஏன் நிறுத்தி விட்டீர்கள்? எத்தனை முறை கூறினாலும் கேட்டாலும் நமக்கு அலுக்கவே அலுக்காது. மேலே கூறுங்கள்" என்றாள்.

அவன் தொடர்ந்தான்: "ஆம் குமுதவல்லி. அன்றைக்கும் இதே சாரல்தான், வலுத்து பெருமழையாகப் பொழிந்து கொண்டிருந்தது. குடந்தைக்குச் செல்ல வேண்டியவன் இங்கு வந்து ஒதுங்கினேன். அப்போதுதான் மழையில் நனைந்தபடி புரவி மீது அந்தச் சோழ வீரன்..." அவன் வார்த்தைகள் பாதியில் நின்றன.



சட்டென்று எழுந்தவன் சற்று தூரத்தில் புரவியொன்றின் மீது நனைந்தபடியே ஒருவன் வந்து கொண்டிருப்பதைக் கண்டான். ஆனால் அதன் மீது வந்தவன் புரவியின் மீது படுத்துக் கிடக்கவில்லை. ஆனந்தமாக நனைந்தபடி ஏதோ உற்சாகப் பாட்டொன்றும் இசைத்தபடி வந்து கொண்டிருந்தான். மண்டபத்தை நெருங்கியவன் அடுத்திருந்த மரநிழலில் புரவியை நிறுத்திவிட்டு, தலை குனிந்தபடியே ஓடிவந்து மண்டபத்தினுள் நுழைந்து நிமிர்ந்தான்.

மழைநீருடன் விஷமமும் வழிந்த அந்த முகத்தைக் கண்டதும் குமுதவல்லியின் முகத்தில் அபரிமிதமான மகிழ்ச்சி கூடி, கொற்கை முத்துக்களின் வரிசை பளிச்சிட்டது.

"வா முகுந்தா, ஒரு திங்களாக ஏன் வரவில்லை? நலமாக இருக்கிறாயா? தந்தை வரவில்லையா? எப்போது வருவார்? அவரிடம் முக்கியச் செய்தியொன்றைக் கூற வேண்டுமே, ஏன் அவர் வரவில்லை? என்னைக் காண வராமல் அப்படியென்ன பணி அவருக்கு?" என்றாள் படபடவென்று.

முகுந்தன் இருகரங்களையும் உயர்த்தி அவள் வார்த்தைகளைத் தேக்கிவிட்டு, பராந்தகனை நோக்கினான். "பராந்தகரே, நலம்தானா? இளவரசியார் கேள்விகளைத் தொடங்கினால் அடுக்கடுக்காக வருமே, எப்படிச் சமாளிக்கிறீர்கள்?" என்றான்.

"அதை ஏன் கேட்கிறாய் முகுந்தா. உங்கள் இளவரசிக்குக் கேள்வி ஞானம் அபாரம். எனக்குத்தான் பதில் கூறத் தெரியாமல் திண்டாடிக் கொண்டிருக்கிறேன்."

"கவலைப்பட வேண்டாம் பராந்தகரே. உங்களுக்கு ஆதரவாகத்தான் இன்னொருவர் வரப் போவதாகத்

தெரிகிறதே. வந்தபின் பதிலளிக்கும் பொறுப்பை அவர் ஏற்றுக் கொள்வார். அதுவரை எப்படியேனும் சமாளித்துக் கொள்ளுங்கள்."

"போதும் நிறுத்து முகுந்தா."– குமுதவல்லியின் குரலில் பொய்க்கோபம் ஒலித்தது. "நான் கேட்டவற்றுக்கு முதலில் பதில் கூறு."

"என்ன கேட்டீர்கள்? ஒவ்வொன்றாய்க் கேட்டால் பதில் கூறலாம். ஒட்டுமொத்தமாகக் கேட்டால் எப்படிப் பதில் கூறுவதாம்?"

"சரி, ஏன் நீ ஒரு திங்களாக வரவில்லை?"

"ஒரு முக்கியப் பணியாக காஞ்சிக்குச் சென்றிருந்தேன்."

"என்ன அத்தனை முக்கியப் பணி?"

"அதைக் கூற முடியாது. இதுபோன்ற ராஜாங்க விஷயங்களை சாதாரண மக்களிடம், அதுவும் வேற்று நாட்டு கிராமத்துப் பெண்களிடம் பேசக் கூடாதென்று மன்னர் உத்தரவு."

குமுதவல்லி அவனை விழித்துப் பார்த்தாள். பராந்தகன் பலமாக நகைத்தான்.

"சரி போகட்டும். தந்தை ஏன் வரவில்லை?"

"அவர் வரக்கூடிய நிலையில் நேற்றுவரை இல்லை. என்னுடன் காஞ்சியில்தான் இருந்தார்."

"எப்போது என்னைக் காண வருவார்?"

"எப்போது வேண்டுமானாலும் வரலாம். அவர் விருப்பம். இதுவரை அந்த விருப்பமில்லையென்று நினைக்கிறேன்."

குமுதவல்லிக்கு உண்மையிலேயே கோபம் வந்தது. "என்னைக் காண வரப்போகிறாரா இல்லையா, சொல் முகுந்தா."



"வருவார். நிச்சயம் வருவார்."

"எப்போது?"

"இப்போதேகூட வரலாம்."

"என்ன சொல்கிறாய்?"

"ஆம் இளவரசி. மன்னர் இங்கேதான் வந்து கொண்டிருக்கிறார். உங்களையல்ல, பராந்தகரைக் காணும் ஆவலில் நான்தான் முன்னதாக வந்துவிட்டேன்."

"உண்மையாகவா?"

"ஆம். சந்தேகமிருந்தால் நேரில் பாருங்கள்" என்ற முகுந்தன், நின்ற இடத்திலிருந்து விலகினான்.

அவனுக்கு நேர் பின்னால் குடந்தைப் பாதையில் முன்னால் புரவி வீரர்கள் வர, பின்னால் இரண்டு மூன்று ரதங்கள் வந்து கொண்டிருந்தன. சாரல் மெல்ல மட்டுப் படத் தொடங்கியது. மண்டபத்தருகில் வந்து நின்ற ரதங்களிலிருந்து பாண்டிய வரகுணனும், நந்திவர்மனும் இறங்கி உள்ளே நுழைந்தார்கள். வரகுணனை நோக்கித் தாவிய குமுதவல்லியின் முகம் அவன் அகன்ற மார்பில் புதைந்தது. மகளின் கூந்தலைத் தடவிய மன்னன் முகத்தில் வாத்ஸல்யம் ததும்பியது. பராந்தகனை நெருங்கி அவன் தோளில் தன் வலிய கரத்தைப் பதித்த நந்திவர்மனின் பெரு விழிகள் அன்பைப் பொழிந்தன. "பராந்தகா, காஞ்சிக்கு ஒருமுறையேனும் வந்து செல்லலாமல்லவா?" என்ற அவன் கேள்வியிலும் அன்பும் ஆதங்கமும் ஒலித்தன.

"நிச்சயம் வருகிறேன் மன்னா."

உடன் வந்த வீரர்களுக்கு ஏதோ உத்தரவிட்டுக் கொண்டிருந்த விக்கிரமவரையரும், உடன் அநிருத்தரும் பகதத்தனுடன் உள்ளே நுழைந்தார்கள். பகதத்தனைக் கண்ட

பராந்தகன் "பகதத்தா, நண்பனை மறந்த துருபதராஜனைப் போல் என்னை மறந்து விட்டாயா? ஏன் நீயும் ஒரு திங்களாக வரவில்லை?" என்றான்.

சற்றுத் திகைத்த பகதத்தன் பலமாக நகைத்தான்.

படைத்தலைவரை வணங்கிய பராந்தகன், "தங்கள் ஓலை கிடைத்தது படைத்தலைவரே, சித்தமாகவே வந்து காத்திருக்கிறேன்" என்றான்.

சட்டெனத் திரும்பி நோக்கிய குமுதவல்லி, "இவர்கள் இன்று வரப்போவதை முன்னமே அறிவீர்களா? ஏன் என்னிடம் கூறவில்லை?" என்றாள் சற்று வேகத்துடன்.

நந்திவர்மன் குறுக்கிட்டான். "குமுதவல்லி, நான்தான் தெரிவிக்க வேண்டாமெனக் கூறியிருந்தேன், உனக்கு மகிழ்ச்சியான ஆச்சரியத்தை அளிக்க, வேறொன்றுமில்லை."

நந்திவர்மனை நெருங்கிய குமுதவல்லி வணங்கினாள். அவளை வாழ்த்திய பல்லவ மன்னன், "பராந்தகா, மிக முக்கியப் பணி காரணமாகவே அனைவரும் வந்திருக்கிறோம் என்பதை அறிவாய். நாம் இல்லத்துக்குச் சென்று பேசலாமல்லவா?" என்றான்.

"வேண்டாம் மன்னவா, இந்தப் பணிக்கு இந்த மண்டபத்தை விடச் சிறந்த இடம் இருக்க முடியாது. பணியை முடித்தபின்பு நமது இல்லத்துக்குச் செல்லலாம்," என்றான் பராந்தகன்.

"என்ன பேசிக் கொள்கிறீர்கள்? எனக்கேதும் விளங்கவில்லை" என்றாள் குமுதவல்லி குழப்பம் நிறைந்த குரலில்.

பாண்டிய மன்னன் விளக்கினான்: "மகளே, செங்கட் சோழரின் புதல்வன் ஸ்ரீ வல்லபனை சோழ அரியணையில்



அமர்த்தும் காலம் கனிந்துவிட்டது. விக்கிரமவரையன் அதற்குரிய நாளும் குறித்து, நானும் பல்லவ மன்னரும் உரிய ஏற்பாடுகளைச் செய்து முடித்து விட்டோம். மணிமகுடம் வடிக்கவும் நாள் குறித்தாயிற்று. அதற்காகவே வந்திருக்கிறோம்."

பராந்தகன் விக்கிரமவரையரை நெருங்கினான். "படைத் தலைவரே, இதே மண்டபத்தில்தான் நம் சோழ வீரன் உக்ரோதயம் பதித்த பொன்னாரத்தை என்னிடம் அளித்து உயிர் துறந்தான். பின்பு அது என்னிடமே இருக்கவும், தக்க சமயத்தில் அதைப் பெற்றுக் கொள்வதாகவும் உத்தர விட்டீர்கள். இப்போது அந்த மாணிக்கம் இருக்க வேண்டிய இடம் நிச்சயிக்கப்பட்டு விட்டது. இதைப் பெற்றுக் கொள்ளுங்கள்" என்றவன், கச்சையிலிருந்து முடிந்து வைத்திருந்த உக்ரோதயத்தை எடுத்து நீட்டினான்.

கதிரவன் ஒளி அத்தனை பிரகாசமாக இல்லாத அந்தப் பொழுதிலும் பளீரென்று சிவந்த கதிர்களை மண்டபம் முழுதுமின்றி, சுற்றி நின்ற வீரர்களின் முகங்களிலும் வீசி செக்கச் செவேலென்று அடித்த அந்த உக்ரோதயத்தை அனைவருமே கண் கொட்டாமல் பார்த்தனர்.

இரு கரங்களையும் நீட்டி அதைப் பெற்றுக் கொண்ட விக்கிரமவரையரின் முகம் உணர்ச்சிப் பிழம்பாக ஜொலித்தது. அவர் குரலும் உணர்ச்சி நிரம்பி ஒலித்தது. "இனி இந்த உக்ரோதயம் சோழர் மணிமகுடத்தை என்றென்றும் அலங்கரிக்கும். பராந்தகா, எத்தனையோ இன்னல்களிலும், இக்கட்டிலும் இதைக் காத்து, திரும்ப அளித்த உன் பெயர் சோழர் சரித்திரத்தில் என்றும் நிலை பெற்றிருக்கும்."

"படைத்தலைவரே, இந்தச் சோழ மண்ணுக்காக தாங்களும், அரியணையில் அமரப்போகும் சோழ மன்னரும்

இடும் எந்தப் பணியையும் நிறைவேற்ற, நான் மட்டுமல்ல, என் சந்ததியினரும் என்றும் காத்திருப்போம்,'' என்ற பராந்தகன், குமுதவல்லியை நோக்கி முறுவல் பூத்தான்.

“ஆம் மன்னவா, அர்ச்சுனனுக்கு அபிமன்யுவாக, அடுத்த சந்ததியினர் தயாராகிக் கொண்டிருக்கிறார்கள். உங்கள் மகளை விசாரித்துப் பாருங்கள்'' என்றான் பகதத்தன் வரகுணனிடம்.

அவன் வார்த்தைகளிலும், பொருளிலும் தொனித்த மகிழ்ச்சி, அனைவர் முகங்களிலும் பரவியது.

நந்திவர்மன் வாய்விட்டு நகைத்தான். “வைகுந்தன் உனக்கு அருள்புரியட்டும்'' என்று குமுதவல்லியை வாழ்த்தவும் செய்தான்.

பாண்டிய வரகுணன் மகளை நெருங்கி மீண்டும் அணைத்துக் கொண்டு “அப்படியா செய்தி, மகளே?'' என்றான் குரலில் பரிவும் அன்பும் பூரணமாகத் தொனிக்க.

குமுதவல்லியின் குமுதமுகம் நாணத்தால் சிவந்து, உக்ரோதயத்தையும் விஞ்சி ஜொலித்தது.

( நிறைவடைந்தது )

